நேசமணியம்மையார் நினைவு வெளியீடு-2.

# பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்

தமிழ்மலர்சேயோனின்
அன்பளிப்பு.
5.5.70

பண்டித புலவ கலைத்தலைவன்
**ஞா. தேவநேயன்,**
(சேலங் கல்லூரி மேனுள் தமிழ்ப் பேராசிரியன்)
எழுதியது.

1966

 [விலை 6·25 உருபா.

5/5/70.

# முகவுரை

இவ்வுலகில் எத்தனையோ நாகரிகங்கள் சொல்லப் படினும், அவையெல்லாம் கீழை நாகரிகம், மேலை நாகரிகம் என இரண்டாய் அடங்கும். இவ்விரண்டுள், முன்னது முந்தியது; தமிழரது: பின்னது பிந்தியது; ஆங்கிலரது.

சேம்சு வாட்டு (James Watt) என்னும் ஆங்கிலேயர் 1765-ஆம் ஆண்டு நீராவிச் சூழ்ச்சியத்தைக் கண்டுபிடித்ததி லிருந்து, தற்கால நாகரிகம் தொடங்குகின்றது. அதற்கு முந்தியதெல்லாம் முற்கால நாகரிகமாகும். இன்று புகை வண்டி பல நாடுகளிற் செய்யப்படினும், முதன் முதலாய்ச் செய்யப்பெற்ற ஆங்கில நாட்டு வண்டியே அவற்றிற் கெல்லாம் மூலமாகும். அதுபோன்றே, நாற்றிசையிலும் பல்வேறு நாடுகளில் பழங்கால நாகரிகம் இருந்திருப்பினும். அவற்றிற் கெல்லாம் தமிழ நாகரிகமே மூலமாகும்.

நீராவியும் மின்னாற்றலுங் கொண்டு செய்யப்பெறும் பொறி (Machine) வினையும் சூழ்ச்சிய (Engine) வினையும் இக்கால நாகரிகமென்றும்; கையாலும் விலங்காலுமே செய்யப்பட்ட வேலைப்பாடு முற்கால நாகரிகம் என்றும், வேறுபாடறிதல் வேண்டும்.

சிலர், தற்புகழ்ச்சி பற்றி, நாகரிகம் என்னும் சொல்லை எளிதாகவும் குறுகிய நோக்கோடும் ஆள்வர். இட வேறு பாடும் மொழி வேறுபாடும் பற்றி நாகரிகம் பல்வேறு வகைப் பட்டுவிடாது. ஒவ்வொரு நாட்டரசாட்சியும் ஒரு தனி நாக ரிகமன்று. மேனாடுகளுள் முதன் முதல் நாகரிகமடைந்தது எகிபது (Egypt). அதன் தொடக்கம் கி. மு. 4000 ஆண்டு கட்குமுன். அதற்கும் முந்தியது தமிழ் நாகரிகம். அதன் தோற்றம் கி. மு. 10,000 ஆண்டுகட்குமுன். ஆகவே, தமிழ் நாகரிகமே உலகில் முதன் முதல் தோன்றியதாகும். தமிழின் முது பழந்தொன்மையும், தமிழன் பிறந்தகம் குமரிக் கண்டம் என்னும் உண்மையும் இதை வலியுறுத்தும்.

இங்ஙனமிருப்பவும், ஆரியச் சூழ்ச்சியாலும் ஆரிய வருகைக்குப் பிற்பட்ட மூவேந்தரின் பேதைமையாலும், பல்வகைப்பட்ட கொண்டான்மாரின் (வையாபுரிகளின்) காட்டிக்கொடுப்பாலும், தமிழ் நாகரிகம் மேனாட்டார்க்குத் தெரிந்த அளவுகூடத் தமிழர்க்குத் தெரியாது மறையுண்டு கிடக்கின்றது. இவ்விரங்கத்தக்க நிலைமை தமிழரின் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாயிருத்தலால், இதை நீக்குதற் பொருட்டு இந் நூலை எழுதத் துணிந்தேன். இற்றைத் தமிழருள் நூற்றிற் கெண்பதின்மர் தற்குறிகளும் தாய்மொழியுணர்ச்சி யில்லாதவருமாயிருப்பினும், புதுத் தலைமுறையாக முளைவிட்டுக் கிளர்ந்தெழும் தமிழ மாணவ மணிகளேனும், இதைக் கருத்தூன்றிப் படித்துத் தம் முன்னோரின் நாகரிகப் பண்பாட்டைப் புதுக்கிப் போற்றிக் காப்பாராக.

இந்நூல் ஆரியர் வருகைக்கு முற்பட்ட தமிழ நாகரிகத்தையே கூறுவதாயிருப்பினும், முதலிரு கழக நூல்களும் அழிந்தும் அழியுண்டும் போனமையாலும், முற்கால நாகரிகத் தொடர்ச்சியே பிற்கால நாகரிகமுமாதலாலும், இலக்கியச் சான்றுகளெல்லாம் பிற்கால நூல்களினின்றும் கல்வெட்டுக்களினின்றுமே காட்டப் பெறும் என அறிக.

இந்நூலை இயன்ற விரைவில் சீருஞ் செவ்வையுமாக அச்சிட்டுத்தந்த **சீவன்** அச்சகத்தார்க்கு நெஞ்சார நன்றி கூறுகின்றேன்.

அல்லும் பகலும் அருணா சலமென்னும்
நல்லிறையன் மெய்ப்பு நவைநீங்க—ஒல்லும்
வகையால் திருத்திய வாறன்றோ இந்நூல்
தகையால் விளங்குந் தகை.

காட்டுப்பாடி,
க, சுறவம், 1997

ஞா. தே.

# நன்றியுரை

இந்நூல் வெளியீட்டிற்கு ஓராயிரம் உருபா தொகுத்துதவிய, திருச்சி மாவட்டப் பெரம்பலூர் வட்டச் **செட்டிகுளத்துப் பாவாணர் நூல் வெளியீட்டுக் குழுவிற்கு,** நான் மட்டுமல்லேன், உண்மைத் தமிழர் அனைவருமே என்றும் கடப்பாடுடையர்.

அந் நன்கொடைப் பட்டியலின் விளத்தம் **(விவரம்)** இந் நூலின் பின் இணைக்கப் பெற்றுளது.

மறைமலை மாணடிகள் மாசில் தமிழின்
நிறையொளித் தீவம் நிறுவும்—பொறையன்றே
சேல்விழி போற்பிறழும் செட்டிகுளப் பாவாணர்
நூல்வெளி யீட்டுக் குழு.

செந்தமிழ் அன்னை செழியன் தமிழ்நாடும்
வெந்தழல் ஆரிய வெம்மையால்—வந்தே
குளிர்ச்சிபெறத் தோழியொடு கூடி மகிழ்ந்து
குளிப்பது செட்டி குளம்.

ஓவிய நல்லாடை ஒண்மானங் காத்தல்போல்
மேவிய செட்டிகுள மேற்பள்ளி—ஓவ
நருஅவனும் நெய்வாசான் நாகமுத்தும் காத்தார்
குருவுதமிழ் மானங் குறித்து.

# உள்ளடக்கம்

# முன்னுரை

## 1. நாகரிகம் என்னும் சொல்விளக்கம்

நாகரிகம் என்பது நகர மக்களின் திருந்திய வாழ்க்கை. நாகரிகம் என்னும் சொல் நகரகம் என்னும் சொல்லின் திரிபாகும். (நகர் + அகம் = நகரகம். நகரகம்—நகரிகம்—நாகரிகம்) எல்லா நாட்டிலும் மாந்தர் முதல் முதல் நகர நிலையிலேயே நாகரிகமடைந்துள்ளனர். அதனால் நகரப் பெயரி னின்று நாகரிகப் பெயர் தோன்றியுள்ளது. சிற்றூர் கட்கும் நகரங்கட்கும் எவ்வளவோ தொடர்பேற் பட்டுள்ள இக்காலத்தும், நாகரிகமில்லாதவன் நாட்டுப் புறத்தான் என்றும் பட்டிக் காட்டான் என்றும் இழித்துக் கூறுதல் காண்க. நகரப்பதி வாழ்நர் என்னும் சொல் நாகரிகமுள்ளோரைக் குறிக்கும் இலக் கிய வழக்கையும் நோக்குக.

ஆங்கிலத்திலும், நாகரிகத்தைக் குறிக்கும் இலத் தீனச் சொல் நகரப் பெயரினின்று தோன்றியதே. L. Civitas, city or city - state, CIVIS citizen, L. civilis —E. civil—civilize.

நகரங்கள் முதன் முதல் தோன்றியது உழவுத் தொழிற்குச் சிறந்த மருத நிலத்திலேயே. உழவுத் தொழிலும் நிலையான குடியிருப்பும் ஊர்ப்பெருக்கமும் நாகரிகம் தோன்றுவதற்குப் பெரிதும் துணைசெய்தன. உழவுத் தொழிலால் வேளாண்மையும், பதினெண் பக்கத் தொழில்களும், பிறதொழில் செய்வார்க்கும் போதியவுணவும், வாணிகமும், ஏற்பட்டன. நிலையாகக் குடியிருப்பதனால் உழவன் குடியானவன் என்னப் பெற்றான். இல்வாழ்வான் என்று திருவள்ளுவராற் சிறப்பித்துச் சொல்லப் பெற்றவனும் உழவனே. இல் வாழ்வானைக் குறிக்கும் husbondi (house-dweller) என்னும் பழ நார்வேயச் சொல்லினின்று உழு அல்லது

பயிர் செய் என்று முன்பு பொருள்பட்ட **husband** என்னும் ஏவல் வினைச்சொல்லும், உழவனைக் குறிக்கும் **husbandman** என்னும் பெயர்ச் சொல்லும், உழவுத் தொழிலைக் குறிக்கும் **husbandry** என்னும் தொழிற் பெயரும், ஆங்கிலத்தில் தோன்றியிருப்பது இங்குக் கவனிக்கத் தக்கது. நிலையான குடியிருப்பால் ஒழுக்கப் பொறுப்பும், ஊர்ப் பெருக்கமும் ஆட்சியமைப்பும் ஏற்பட்டன. இதனால், மருத நிலமும் உழவுத்தொழிலும் எங்ஙனம் நாகரிகத்தைத் தோற்றுவித்தன என்பது தெளிவாகும்.

நகர் என்னும் சொல், முதன் முதல், ஒரு வள மனையை அல்லது மாளிகையையே குறித்தது.

நகர் = 1. வளமனை.

"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" (புறம். 70)

2. மாளிகை

"பாழி யன்ன கடியுடை வியனகர்" (அகம். 15

மாளிகை அரசனுக்கே சிறப்பாகவுரியதாதலால், நகர் என்னும் சொல் அரண்மனையையும் அரசன் மனை போன்ற இறைவன் கோயிலையும் பின்பு குறிக்கலாயிற்று.

நகர் = 1 அரண்மனை,

"முரைசுகெழு செல்வர் நகர்" (புறம். 127)

'நிதிதுஞ்சு வியனகர்" (சிலப். 27:200)

2. கோயில்.

"முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" (புறம். 6)

"உத்தர கோசமங்கை மின்னேறு மாட வியன்மாளிகைபாடி" (திருவாசகம், 16, 3)

என்பதால், கோயிலுக்கும் மாளிகைப் பெயருண்மை அறியலாம்.

சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும் மண்டபம் மாளிகை போன்றிருத்தலால், திருத்தக்க தேவர் நகர் என்னும் சொல்லை மண்டபம் என்னும் பொருளில் ஆண்டார்.

"அணிநகர் முன்னி ஞனே" (சீவக. 701)

நகர் என்னும் சொல் மனையைக் குறித்தலாலேயே, மனை, இல், குடி என்னும் சொற்கள் போல் இடவாகு பெயராய் மனைவியையும் குறிக்கலாயிற்று.

நகர் = மனைவி

"வருவிருந் தோம்பித் தன்னகர் விழையக்கூடி"
(கலித். 8)

சிறந்த ஓவிய வேலைப்பாடமைந்து சிப்பிச் சுண்ணும்புச் சாந்திஞல் தீற்றப்பெற்று வெள்ளையடிக் கப்பட்ட காரைச்சுவர்க்கட்டிடம், மண்சுவர்க் கூரை வீட்டோடு ஒப்பு நோக்கும்போது, மிக விளங்கித் தோன்றலால், மாளிகை நகர் என்னப்பட்டது. நகுதல் விளங்குதல். நகு — நகல் — நகர். வெண்பல்லையும் பொன்மணி யணிகலத்தையும் முகமலர்ச்சியாகிய சிரிப்பையும் உணர்த்தும், நகை என்னும் சொல்லை நோக்குக. நகு—நகை.

"ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
**வான்சுதை** வண்ணங் கொளல்"

என்னும் வள்ளுவர் கூற்ருல், சிப்பிச்சுண்ணும்புச் சாந்தின் வெண்மைச் சிறப்பு உணரப்படும்.

மாளிகை முதலில் அரசனுக்கே யுரியதாயிருந்ததி ஞலும், அரசன் வாழும் ஊர் பேரூராயிருந்ததிஞலும், நகர் என்னும் சொல் சினையாகு பெயராய்க் கோ நகரையும் பேரூரையுங் குறித்தது. இன்றும், கூரை வீடுகள் நிறைந்த ஒரு நாட்டுப்புறத்தூருடன் காரை வீடுகள் நிறைந்த ஒரு சிற்றூர் அல்லது பேரூரை ஒப்பு நோக்கிஞல், பின்னது விளங்கித் தோன்றுவது வெள்ளிடை மலையாம். பண்டைக் காலத்திற் பேரூர் களே காரை வீடுகளைக் கொண்டிருந்தன.

"நெடுநகர் வினைபுனை நல்லில்" (புறம். 23)
என்பதில், நகர் என்னும் சொல் பேரூரைக் குறித்தது.

நகர் என்னும் சொல், தனி மாளிகையையும் அதனையுடைய பேரூரையுங் குறித்ததினால், இம் மயக்கை நீக்கும் பொருட்டு, பேரூரை மட்டும் குறித் தற்கு இகரவீறு கொண்ட நகரி என்னும் சொல் எழுந்தது. நகரை (மாளிகையை) யுடையது நகரி. இகரம் இங்குக் காடைக் கண்ணி, நாற்காலி என்பவற் றிற்போல் ஒன்றை உடைமையை உணர்த்தும் ஒன்றன் பாலீறு. இன்று நகர் என்னும்சொல் உலக வழக்கில் மாளிகையை அல்லது வளமனையை உணர்த் தாமையால், மேற்கூறிய மயக்கிற்கு இடமில்லை.

பட்டி என்பது மாட்டுப் பட்டியுள்ள சிற்றூரைக் குறித்தது போன்றே, நகர் என்பதும், மாளிகையுள்ள பேரூரைக் குறித்தது. பதி, என்னும் சொல்லும் வீட்டையும் நகரையும் குறித்தல் காண்க. நகர் என்னும் சொல், அம் என்னும் பெருமைப் பொருட் பின்னொட்டுப் பெற்று நகரம் என்றாகும். அதுவும் தனி மாளிகை யையும் பேரூரையும் குறிக்கும். 'அம்' ஈறு பெருமைப் பொருளுணர்த்தலை, இல்லம், நிலையம், மதியம் (முழு நிலா), விளக்கம், முதலிய சொற்களிற் காண்க.

நகரம் = 1. அரண்மனை (யாழ். அக.)

2. கோயில்

"மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமும்"
(சிலப். 14: 9)

விண்டுநகரம்—விண்ணகரம் = திருமால் கோயில்.

3. பேரூர்

நகர், நகரி, நகரம் என்னும் முச்சொல்வடிவும், முதலில் அரசன் வாழும் தலைநகரையும் அவன் சென்று தங்கும் கோநகரையும் குறித்து, பின்பு எல்லாப் பேரூர்களையும் பொதுப்படச் சுட்டலாயின. அதனால், அரசன் இருக்கும் அல்லது தங்கும் நகரைத் தலை அல்லது கோ என்னும் அடை கொடுத்துக் கூற வேண்டியதாயிற்று.

"கோநகர் எதிர்கொள" (சிலப். 27:255),

அரசனுக்கும் தெய்வத்திற்கும் ஒருபுடை யொப்புமை யிருத்தலால், கோயில் என்னும் சொற்போன்றே கோநகர் என்னும் சொல்லும் இருவர் இருக்கையையும் குறிக்கும்.

கோயில் = 1. அரண்மனை.

"கோயில் மன்னனைக் குறுகினள்" (சிலப். 20:47)

(கோ = அரசன், இல் = வீடு)

2. தெய்வப் படிமையிருக்கை.

கோநகர் = கோயில்.

"மாயோன் கோநகர் எட்டும்"

(கந்தபு. திருநகரப். 88).

பெருநகரை நகரம் என்று சொல்லினும் போதும். ஆயின், அவ்விலக்கணம் இன்று அறியப்படாமையால், மாநகர் என்று சொல்ல வேண்டியதாகின்றது.

இங்ஙனம் நாகரிகம் என்னும் சொற்கு மூலமான நகர் என்னும் சொல் தூய தமிழாயிருப்பினும், நகர (Nagara) என்னும் வடசொல்லின் திரிவாகச் சென்னைப் பல்கலைக் கழக அகர முதலியில் (அகராதியில்) காட்டப்பட்டுளது. இது தமிழரின் அறியாமையையும் தமிழ்ப் பேராசிரியரின் அடிமைத் தனத்தையுமே உணர்த்தும். நகர் என்னும் மூல வடிவம் வடமொழியிலில்லை. அதன் திரிவான நகரம் என்னும் வடிவே, வேருந்தூரும் மொழிப்பொருட் கரணியமுமின்றி வடமொழியில் வழங்கி வருகின்றது. நகரி என்னும் வடிவம் வடமொழியில் (நகரீ என்று ஈறு நீண்டு) வழங்கினும், அதன் ஈற்றிற்கு அங்குத் தனிப்பொருளில்லை.

நகர் என்னும் சொல்லிற்கு விளங்கிய வெண்மையென்பதே வேர்ப்பொருளென்பதை, வெண்பல்லைக் குறிக்கும் நகார் என்னும் சொல்லையும்; மாளிகையின் விளங்கிய தோற்றம் அதன் வெண்சாந்தினால் ஏற்பட்டதென்பதை,

**"புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்து"** என்னும் புறநானூற்றடியையும் (378);

> **"வருங்குன்ற மொன்றுரித் தோன்தில்லை யம்பல வன்மலயத்**
> **திருங்குன்ற வாணர் இளங்கொடி யேயிடர் எய்தலெம்மூர்ப்**
> **பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்**
> **கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுகம் ஏய்க்கும்**
> **கனங்குழையே."(15)**

என்னும் திருக்கோவைச் செய்யுளையும்; நோக்கித் தெளிக. இனி, நகை என்னும் சொல் பல்லையும் முத்தையும் குறித்தலையும் நோக்குக.

நகரம் என்னும் தென் சொல்லைப் போன்றே அதனின்றும் திரிந்தமைந்த நாகரிகம் என்னும் தென் சொல்லையும், வடவர் கடன்கொண்டு வடமொழியில் வழங்கி வருவதுடன், கடுகளவும் உண்மையும் நன்றியறிவுமின்றி அவற்றை வடசொல்லேயென்று வலித்தும் வருகின்றனர். வடமொழி ஒரு தனிமொழியன்றென்பதும், குறைந்த பக்கம் ஐந்திலிரு பகுதி தமிழென்பதும், என் 'வடமொழி வரலாறு' என்னும் நூலில் வெள்ளிடை மலையாய் விளக்கப்பெறும். ஆண்டுக் காண்க.

## 2. பண்பாடு என்னும் சொல் விளக்கம்

பண்படுவது பண்பாடு. பண்படுதல் சீர்ப்படுதல், அல்லது திருந்துதல். திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும், திருந்திய தமிழைப் "பண்பட்ட செந்தமிழ்" (தனிப்பாடல்) என்றும், திருந்திய வுள்ளத்தைப் பண்பட்ட வுள்ளமென்றும், சொல்வது வழக்கம்.

பண் என்னும் பெயர்ச் சொற்கு மூலமான பண்ணுதல் என்னும் வினைச் சொல்லும், சிறப்பாக ஆளப்பெறும் போது, பல்வேறு வினைகளைத் திருந்தச் செய்தலையும் பல்வேறு பொருள்களைச் செவ்வையாய் அமைத்தலையும், குறிக்கும்.

பண்ணுதல் = 1. நிலத்தைத் திருத்துதல்.
(பண்ணப்பட்ட மருதநிலம் பண்ணை.)

2. ஊர்தியைத் தகுதிப் படுத்துதல்.
"பூதநூல் யானையொடு புனைதேர் பண்ணவும்"
(புறம். 12)

3. சுவடித்தல் (அலங்கரித்தல்)
"பட்டமொ டிலங்கல் பண்ணி"
(சூளா. கல்யா. 14)

4. இசையல கமைத்தல்.
"பண்ணல் பரிவட்டணை யாராய்தல்"
(சீவக. 657, உரை)

5. பண் அமைத்தல்.
"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்"
(மலைபடு. 534.)

6. சமைத்தல்.
"பாலு மிதவையும் பண்ணுது பெறுகுவிர்"
(மலைபடு. 417.)

'செய்' என்னும் வினைச் சொல்லினின்று, திருந்த அல்லது அழகாய்ச் செய்யப்பெற்றது என்னும் பொருளில், செய் என்னும் நிலப்பெயரும் செய்யுள் என்னும் இயற்றமிழ்ப்பாட்டின் பெயரும் தோன்றியிருப்பது போன்றே; பண் என்னும் வினைச் சொல்லினின்றும், திருந்த அல்லது இனிதாய்ச் செய்யப்பெற்றது என்னும் பொருளில், பண்ணை என்னும் நிலப் பெயரும் பண் என்னும் இசைத் தமிழ் அமைப்பின் பெயரும்; தோன்றியுள்ளன.

பண்பாடு பல பொருட்கு உரியதேனும், நிலமும் மக்கள் உள்ளமும் பற்றியே பெருவழக்காகப் பேசப் பெறும். ஆங்கிலத்திலும் culture என்னும் பெயர்ச் சொல் சிறப்பாக நிலப் பண்பாட்டையும் உளப் பண்பாட்டையும் குறிப்பது கவனிக்கத்தக்கது. cultivate என்னும் வினைச்சொல்லும் அங்ஙனமே. இவ்விரு வகைப் பண்பாட்டுள்ளும், மக்களைத் தழுவிய உளப்

பண்பாடே சிறப்பாகக் கொள்ளவும் சொல்லவும் பெறும்.

சேலங் கல்லூரி மேனாள் முதல்வர் பேரா. இராம சாமிக் கவுண்டர் குடும்பம் பண்பட்ட தமிழ்க் குடும்பத் திற்கும், தாய்மொழியாகிய தமிழைத் தலைமையாகப் போற்றும் செட்டிகுளம் பண்பட்டவூருக்கும், தலை சிறந்த எடுத்துக் காட்டாம்.

உள்ளம் பண்படுவது பெரும்பாலும் கல்வியா லாதலால், பண்பாடு கல்வி மிகுதியையுங் குறிக்கும்.

தமிழில் தன்மையைக் குறிக்கும் சொற்களுள், இயல்பு என்பது இயற்கையான தன்மையையும், பண்பு என்பது பண்படுத்தப்பெற்ற நல்ல தன்மையை யும், குறிக்கும்.

## 3. நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் வேறுபாடு

நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்து வது.

இலக்கணப் பிழையின்றிப் பேசுவதும், எல்லா வகையிலும் துப்புரவாயிருப்பதும், காற்றோட்டமுள்ள தும் உடல் நலத்திற்கேற்றதுமான வீட்டிற் குடியிருப் பதும், நன்றாய்ச் சமைத்து உண்பதும், பிறருக்குத் தீங்கு செய்யாமையும், நாகரிகக் கூறுகளாம்; எளியா ரிடத்தும் இனிதாகப் பேசுவதும், புதிதாய் வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும், இரப் போர்க்கிடுவதும், இயன்றவரை பிறருக்குதவுவதும், கொள்கையும் மானமுங்கெடின் உயிரை விடுவதும், பண்பாட்டுக் கூறுகளாம். சுருங்கச் சொல்லின் உள்ளத்தின் செம்மை பண்பாடும், உள்ளத்திற்குப்

புறம்பான உணவு, உடை, உறையுள் முதலியவற்றின் செம்மை நாகரிகமும், ஆகும். ஆகவே, இவற்றை முறையே அகநாகரிகம், புறநாகரிகம் எனக் கொள்ளினும் பொருந்தும்.

மாளிகையிற் குடியிருப்பதும், பட்டாடை யணிவதும், அறுசுவையுண்டி யுண்பதும், இன்னியங்கியில் அல்லது புகைவண்டி முதல் வகுப்பிற் செல்வதும்; வேலைக்காரரை வைத்தாள்வதும், பொறிகளைக் கொண்டு வினை செய்வதும், இன்பமாய்ப் பொழுது போக்குவதும், செல்வ வாழ்க்கையேயன்றி நாகரிக வாழ்க்கை யாகா.

**"நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்**
**செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே**
**சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கட் செல்வம் செல்வம்என் பதுவே."**

என்று நற்றிணையும் (210 : 5–9) கூறுதல் காண்க. நெடிய மொழிதல் = அரசரால் மாராயம் பெறப்படுதல். கடிய ஊர்தல் = விரைந்த செலவினையுடைய குதிரை யானை தேர் முதலியவற்றின் மேல் ஏறிச் செல்லுதல். செல்வம் அன்று = நாகரிகம் அன்று. மென்கட் செல்வம் = கண்ணோட்டம் என்னும் பண்பாட்டுக் குணம்.

நாகரிகத்தினும் உயர்ந்த நிலையே பண்பாடாயினும், நாகரிகமின்றியும் பண்பாடுண்டு. காட்டில் தங்கும் முற்றத் துறந்த முழுமுனிவர் ஆடையின்றியும் நீராடாதும் மண்ணில் இருப்பர்; ஆயினும், அவர் பண்பாட்டில் தலைசிறந்தவராவர். கரவாது கரைந்து இனத்தோடு உண்ணும் காக்கையும், வேலாற் குத்திய விடத்தும் வாலாட்டும் நன்றியறிவுள்ள நாயும், ஒரு காலத்தில் ஒரே பெடையோடு கூடிவாழும் வானப் பறவையினமும், நாகரிகமில்லா அஃறிணையாயினும் பண்பாட்டில் மக்களினும் விஞ்சியவையே.

**"மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவும் (மரபியல், 33),

**"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட"**

என்னும் குறுந்தொகைச் செய்யுட் பகுதியும் (69), இங்குக் கருதத்தக்கன.

பண்டைக் காலத்தில், நாகரிகம் என்னும் சொல்லையே பண்பாடென்னும் பொருளிலும் ஆண்டனர். அதனாலேயே, பண்பாட்டுக் குணமான கண்ணோட்டத்தை நாகரிகம் என்றார் திருவள்ளுவர்.

**"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."** *(குறள் 580).*

திருந்திய நிலை என்னும் பொதுக் கருத்தில், நாகரிகமும் பண்பாடும் ஒன்றுதல் காண்க.

பண்பாடு நாகரிகத்தினும் சிறந்ததாயினும், நாட்டிலும் நகரிலும் கூட்டு வாழ்க்கையில் வாழ்பவர் நாகரிகமின்றி யிருத்தல் கூடாது. கூட்டு வாழ்க்கையில் நாகரிகமின்றியிருப்பவர்க்குப் பண்பாடும் இருத்தல் முடியாது. ஊரிலிருப்பவர் உலகப்பற்றை நீத்தவரேனும், உடல் நீங்கும்வரை நீர்ச்சீலையாவது அணிதல் வேண்டும்.

## 4. இந்திய நாகரிகம் தமிழரதே யாதல்

வேத ஆரியர் மேலையாசியாவினின்று இந்தியாவிற்குட் புகுந்த காலம் கி. மு. 2000—1500. அன்று அவர் கன்று காலிகளை ஓட்டித் திரியும் நாடோடிகளாயும், முல்லை நாகரிக நிலையினராயுமே யிருந்தனர்.

அவருக்கு இலக்கியமுமில்லை; எழுத்துமில்லை. அவர் பேசிய மொழி கிரேக்கத்திற்கு இனமாயும் பழம்பார சீகத்திற்கு மிக நெருங்கியதாயும் சொல்வளமற்ற தாயும் இருந்தது இந்தியாவிற் காலூன்றிய பின்னரே, அவர் இருக்கு என்னும் தம் முதல் வேதத்தை யாத்தனர். அவ்வேத மொழி வடஇந்தியப் பிராகிருதத்தையும் திரவிடத்தையும் தழுவியதென்பது அதில் எகர ஒகரக் குறிலின்மையாலும் பல தமிழ்ச் சொற்களுண்மையாலும் தெரியவருகின்றது.

தமிழின் தொன்மையையும் முன்மையையும் அறியாத வரலாற்றாசிரியர், ஆரிய வேதக்காலத்தையே அடிப்படையாகக் கொண்டு தமிழ்நாட்டு வரலாற்றைத் தொடங்கும் தவறான வழக்கம் இன்னும் இருந்து வருகின்றது. தமிழ் வேத ஆரியத்திற்கு முந்தியதாயிருப்பதோடு வேதப் பெயர்களே தமிழ்ச் சொற்களின் திரிபாகவுமிருக்கின்றன.

வேதம் : விழித்தல் = பார்த்தல், காணுதல், அறிதல். விழி = அறிவு, ஓதி (ஞானம்). **"தேறார் விழியிலா மாந்தர்"** (திருமந்திரம், 177)

விழி—**L. Vide—Vise. Skt. Vid—Veda.**

ஒ. நோ: குழல்—குடல், ஒடி—ஒசி.

சுருதி : செவியுறுதல் = கேட்டல்.
செவியுறு—ச்ரு—ச்ருதி = கேள்வி.
முதற்காலத்தில் எழுதப்பெறாது கேட்டே யறியப்பட்டுவந்த ஆரிய மறை.

மண்டலம் : முல்—முன்—முனி = வில்.
முல்—முர்—முரி. முரிதல் = வளைதல்.
முரி—மூரி = வளைவு.
முர்—முரு—முருகு = வளைந்த காதணி.
முரு—முறு — முறுகு. முறுகுதல் = வளைதல்; திருகுதல்.
முறுகு—முறுக்கு = திருகல், திருகிய தின்பண்டம்.

முறுக்கு—முறுக்கம்.
முறு—முற்று — முற்றுகை = நகரைச் சூழ்கை.
முறு—முறை—மிறை = வளைவு.
முறு—முறி. முறிதல் = வளைதல்.
முறி—மறி. மறிதல் = வளைதல், மடங்குதல்.

முல்—(முள்)—முண்டு = உருட்சி, திரட்சி.
முண்டு—முண்டை = உருண்டை, முட்டை.
"முண்டை விளைபழம்" (பதிற். 60: 6)
முள்—முட்டு—முட்டை.
முள்— (முண்) —முணம்—முணங்கு. முணங்குதல் = உள் வளைதல்.
முணம்—முடம் = வளைவு.
முடம்—முடங்கு. முடங்குதல் = வளைதல்.
முடங்கு—மடங்கு. முடங்கு—முடக்கு = மடக்கு.
முடம்—(முடல்)—முடலை = குறடு, உருண்டை.
முண்டு—மண்டு. மண்டுதல் = வளைதல்.
மண்டு—மண்டி, மண்டியிடல் = முழங்காலை மடக்குதல்.
மண்டு—மண்டலம் = வட்டம், நாட்டுப் பகுதி, காலப் பகுதி, நூற் பகுதி.

கொங்கு மண்டலம், தொண்டை மண்டலம் என்னும் வழக்குக்களை நோக்குக.

மண்டலம்—மண்டலி, மண்டலித்தல் = செய்யுளின் எல்லா அடிகளும் அளவொத்து வருதல். ஈறு தொடங்கியில் (அந்தாதியில்) முதலும் ஈறும் ஒன்றித்து வருதல்.

மண்டலம்—மண்டிலம் = 1. வட்டம்.
2. வட்டக் கண்ணுடி.

3. வட்டமான சுடர்.
(ஞாயிறு, திங்கள்)
4. நிலப் பகுதி.
"மண்டிலத் தருமையும்" (தொல். அகத். 41).
5. அளவொத்த அடிகளைக் கொண்ட செய்யுள்.

அ—இ. அலம்—இலம்.
ஒ. நோ. அனம்—இனம். எ. டு. பட்டனம்—பட்டினம்.

இந்திய ஆரியர் பிற்காலத்தில் தமிழரொடு தொடர்பு கொண்ட பின்னரே, சமற்கிருதம் என்னும் அரைச் செயற்கையான இலக்கிய நடை வழக்கை அல்லது பொத்தக மொழியை அமைத்து, அதிற் பண்டைத் தமிழ் நூல்களையெல்லாம் மொழிபெயர்த்துக் கொண்டனர். இது என் 'வடமொழி வரலாறு' என்னும் நூலில் விரிவாக விளக்கப் பெறும்.

தமிழர் தென்னாட்டுப் பழங்குடி மக்கள். தமிழ் தோன்றியது முழுகிப்போன குமரிக் கண்டத்தில் 50,000 ஆண்டுகட்குமுன். தமிழ் நாகரிகம் தோன்றியது 20,000 ஆண்டுகட்குமுன். தமிழிலக்கண விலக்கியம் தோன்றியது கி. மு. 10,000 ஆண்டுகட்குமுன். இதன் விளக்கத்தை என் 'தமிழ் வரலாறு' என்னும் நூலுட் காண்க.

இந்திய நாகரிக அடிப்படை தமிழ் நாகரிகமே. ஆயினும், இன்று அது அறியப்படாமலிருப்பதற்குக் கரணியம்(காரணம்): ஆரியவருகைக்கு முற்பட்ட தமிழிலக்கியம் அனைத்தும் அழிந்தும்அழிக்கப்பட்டும்போனமையும், ஆரியக் குலப் பிரிவினையால் தமிழர் பல வகையிலும் தாழ்த்தப்பட்டிருப்பதும்; இவற்றிற்கு நேர் மாறாக, இந்தியக் கலைகளும் அறிவியல்களும் மொழி பெயர்த்து எழுதப்பட்டுள்ள சமற்கிருத நூல்களே இன்றிருப்பதும், அவற்றையெல்லாம் முதனூல்களே யென்று வடவர் வலிப்பதும், குலவரிசையிலும் கல்வித் துறையிலும் ஆரியர் உயர்த்தப்பட்டிருப்பதுமே.

ஒரு திருடன் தான் திருடிய பொருளைத் தன தென்றே வலிப்பினும், அப்பொருளின் வரலாறு அது பிறனது என்பதை மெய்ப்பிப்பதுபோல், தமிழ் வரலாறு, தமிழர் வரலாறு, தமிழ்நாட்டு வரலாறு ஆகிய மூன்றும், இந்திய நாகரிகம் தமிழரதே என்பதை ஐயந்திரிபற நாட்டுகின்றன. ஆயினும், இவ்வரலாற்றை மேலையர் அறியார். தமிழரும் இதுவரை அவருக்கு அறிவித்திலர். இற்றைத் தமிழில் வடசொற்களும் தமிழிலக்கியத்தில் வடநூல் முறைகளும் ஆரியக் கருத்துக்களும் மிகுதியாகப் புகுத்தப்பட்டிருப்பதும், கோயில் வழிபாடு, சமற்கிருதத்தில் பிராமணப் பூசாரியரால் நடைபெற்று வருவதும், தமிழரின் இயற்பெயர் பெரும்பாலும் வடசொல்லா யிருப்பதும், தமிழைக் காட்டிக்கொடுக்கும் தந்நலத்தார் தலைமைப் பதவி தாங்கிக்கொண்டு தமிழப் பொது மக்கட்குத் தெரியாதபடி தமிழ் நாகரிகத்தை மறைப்பதும், வடமொழியாளர் கூற்றை மேலையர்க்கு மெய்போற் காட்டுகின்றன.

**"பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்<br>மெய்போ லும்மே மெய்போ லும்மே."**

**"மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்<br>பொய்போ லும்மே பொய்போ லும்மே."**

என்னும் வெற்றிவேற்கை வெண் செந்துறைகட்கேற்ப, ஆரியர் தமிழர் நிலைகள் நிற்கின்றன. ஆயினும் பொதுவியல்பிற்கு விலக்காக **கில்பெட்டு சிலேற்றர் (Gilbert Slater)** என்னும் சென்னைப் பல்கலைக்கழக மேனாட் பொருளியல் நூற் பேராசிரியர், தம் 'இந்திய நாகரிகத்தில் திரவிடக் கூறு' **(Dravidian Element in Indian Culture)** என்னும் நூலில்,

"திரவிடர் இங்ஙனம் மொழியில் ஆரியப் படுத்தப்பட்டபோது, ஆரியர் நாகரிகப் பண்பாட்டில் திரவிடப்படுத்தப பெற்றனர்" **("While the Dravidians were thus Aryanised in language the Aryans were Dravidised in culture.")** என்று நடுநிலைத் தீர்ப்புக் கூறியிருப்பது, தமிழரும் திரவிடரும் மகிழ்ந்து

பாராட்டற்குரியது. இத்தீர்ப்பைப் பின்வரும் நூல் வலியுறுத்தல் காண்க.

இந்திய நாகரிகம் மட்டுமன்றி உலக நாகரிகமே இந்திய ஆரியரதென்று காட்டுதற்கு, வேதகாலத்தை அளவிறந்து முன் தள்ளி வைக்கும் முயற்சியொன்று இன்று வடஇந்தியாவில் நடைபெற்று வருகின்றது. அறியப்பட்ட தம்பியின் அகவை (வயது) உயர்த்திக் கூறப்படின், அண்ணனின் அகவை தானே உயர்தல் காண்க.

## 5. இந்திய நாகரிகம் ஆரியர தெனக் காட்டக் கையாளப்படும் வழிகள்

1. பழந்தமிழ்நாடாகிய குமரிக்கண்ட வரலாற்றை மறைத்தலும் மறுத்தலும்.

2. பாண்டியர் நிறுவிய முத்தமிழ்க் கழக உண்மையை மறுத்தல்.

3, தமிழ்நாட்டு வரலாற்றை வடக்கினின்றும் வேதக்காலத்தினின்றும் தொடங்கல்.

4 தென்னாட்டுப் பழங்குடி மக்களாகிய தமிழரை வந்தேறிகளாகவும் கலவையினமாகவுங் காட்டல்.

5. தமிழ் முன்னூல்களையும் முதனூல்களையும் பின்னூல்களாகவும் வழி நூல்களாகவும் காட்டல்.

6. குமரிக்கண்ட இடப்பெயர்களையும் தெய்வப் பெயர்களையும் மூவேந்தர் குடிப்பெயர்களையும் ஆரியச் சொல்லாகக் காட்டல்.

7. கட்டுக்கதைகளையும் ஆரியச் சொற்களையும் புகுத்தி, இருபெருந் தமிழ்ச் சமயங்களாகிய சிவநெறியையும் திருமால் நெறியையும் ஆரிய வண்ணமாக்கலும், தமிழைக் கோயில் வழி பாட்டிற்குத் தகாததென்று தள்ளலும்.

8. மூவேந்தர்பேதைமையால்ஆரியம்வேரூன்றிய கடைக்கழகக் கால நூல்களினின்று ஆரியச் சார்பான சான்று காட்டல்.

9. தமிழ் வடமொழிக்கிளையென்று அயலார் கருதுமாறு, அடிப்படைத் தமிழ்ச் சொற்கட்கெல்லாம் வலிந்தும் நலிந்தும் வடசொன் மூலங் காட்டல்.

10. வடமொழி தேவமொழியென்றும், பிராமணர் நிலத்தேவர் (பூசுரர்) என்றும், வேதக்கால ஆரியப் பூசாரியரால் புகுத்தப்பட்ட ஏமாற்றுக் கருத்துக்களை யும், பிறப்புத் தொடர்பான குலப்பிரிவினையையும், தொடர்ந்து போற்றல்.

11. சமயச்சார்பான சொற்பொழிவுகளாற் பொது மக்களை அறியாமையில் அமிழ்த்துதல்.

12. உண்மை கூறும் தமிழ்ப் புலவர்க்கு அலுவற் பதவியில்லாவாறு செய்தல்.

இவற்றின் விளக்கத்தை என் 'தமிழ் வரலாறு' 'தமிழர் வரலாறு', 'தமிழர் மதம்' என்னும் நூல்களுட் கண்டு கொள்க.

## 6. குமரிக் கண்ட இடப் பெயரும் மூவேந்தர் குடிப் பெயரும்

### இடப் பெயர் :

#### குமரி

தமிழன் பிறந்தகமும் பழம் பாண்டி நாடும் தென் மாவாரியில் முழுகிப்போன பெருநிலமுமான குமரிக் கண்டத்தின் தென்கோடியடுத்து, பனிமலை (இமயம்) போலும் ஒரு மாபெரு மலைத் தொடர்இருந்தது. அதன் பெயர் குமரி. அதனாலேயே முழுகிப்போன நிலமும் குமரிக் கண்டம் எனப்பட்டது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள"

(சிலப். 11:19-20)

குமரி என்பது காளியின் பெயர். காளி தமிழர் தெய்வங்களுள் ஒன்று. இறவாதவள் அல்லது என்றும் இளமையாயிருப்பவள் என்னும் கருத்தில், காளியைக் குமரி என்றனர்.

கும்முதல் திரள்தல்.கும்மல்—கும்மலி = பருத்தவள் கும்-குமல்-குமர் = திரட்சி, திரண்ட கன்னிப்பெண், கன்னிமை.

குமர்-குமரன் = திரண்ட இளைஞன், இளைஞனை முருகன். குமர்-குமரி = திரண்ட இளைஞை (கன்னி.)

மணப்பருவமான இளமை வரும்போது உடல் திரளுதல் இயல்பு. பொலியும் பருவ விலங்குகளையும் முட்டையிடும் பருவப் பறவைகளையும் விடை என்று கூறுதல் காண்க. விடைத்தல் பருத்தல்.

குமரன், குமரி என்னும் தூய தமிழ்ச் சொற்களைக் குமார, குமாரீ எனநீட்டி, முறையே, மகன், மகள் என்னும் பொருள்களிற் சிறப்பாய் ஆள்வதுடன் குமார என்பதைக் கு+மார எனப் பிரித்து,மரியாதவன் என்று பொருந்தப் பொய்த்தலாகப் பொருள் கூறி வடசொல்லாகக் காட்டுவர் வடமொழியாளர். இவ்விரு சொற்கட்கும் இளமைப் பொருளே சிறந்திருத்தலை, வழக்கு நோக்கியும், "கோடிச் சேலைக்கு ஒரு வெள்ளை, குமரிப் பெண்ணுக்கு ஒரு பிள்ளை" என்னும் பழமொழி நோக்கியும், உணர்க.

இளமைக்குப்பின் மூப்பும் சாக்காடும் நேர்வதால் இளமைக் கருத்தினின்றே அழியாமைக் கருத்துத் தோன்றும். எவ்வளவு உடலுரம் பெற்றவராயினும், நகைச்சுவையும் உவமையும் பற்றியன்றிக் கிழவன் கிழவியைக் குமரன் குமரியென்னும் வழக்க மின்மை காண்க.

குமரிக் கண்டத்தின் வடகோடியில், குமரி என ஒரு பேரியாறு மிருந்தது.

**மதுரை**

மதுரை என்பது குமரி மலைத் தொடரிற் பிறந்து கிழக்கு முகமாய் ஓடிக் கீழ் கடலிற் கலந்ததும், கங்கை போலும் பெரியதுமான பஃறுளி யாற்றங்கரையில் அமைந்த பாண்டியரின் முதல் தலைநகரும் தலைக்கழக இருக்கையுமாகும்.

பாண்டியர் மதிக் குலத்தாராகலின், தம் குல முதலாகக் கருதிய மதியின் பெயரால், தம் முதல் தலைநகர்க்கு மதிரை எனப் பெயரிட்டனர். அது பின்னர் மதுரை எனத் திரிந்தது.

ஒ. நோ: குதி-குதிரை, எதிர்கை-எதுகை.

குமரிமலை முழுகுமுன்போ முழுகிய பின்போ, குமரி நாட்டினின்று வடக்கே சென்ற தமிழர் வழியினரே, கண்ணபிரான் வாழ்ந்த மதுரையையும் அமைத்தனர். அதற்கு அப்பெயரிட்டது, அவர்தம் முன்னோர் இடத்தை நினைவு கூர்தற்பொருட்டாகும். கண்ணபிரான் ஒரு திரவிட மன்னனே என்பது, என் 'தமிழர் வரலாறு' என்னும் நூலில் விளக்கப் பெறும்.

கண்ணபிரான் காலமாகிய பாரதக் காலத்தில் வைகை மதுரையில்லை. ஆதலால், நாவலந் தேயத்தில் இரண்டாவது ஏற்பட்டதும் வடமதுரை யெனப் பட்டதும் கண்ணன் மதுரையே. அதன் பெயர் அந்நாட்டு மொழிக்கேற்ப மத்ரா எனப் பின்னர்த் திரிந்தது.

சிவபெருமான் தன் சடைமுடியிலுள்ள மதியினின்று மதுவைப் பொழிந்தஇடம் மதுரை என்பது, தொல்கதைக்கட்டு.

வைகை மதுரையைச் சார்ந்த திருமருத முன்றுறையால் மதுரைப் பெயர் வந்த தென்பது, பேரன் பெயரால் பாட்டன் பெயர் பெற்றான் என்னும் கூற்றை ஒக்கும். மதுரையென்று முதலிற் பெயர் பெற்றது பஃறுளி யாற்றங்கரையது, என்பதை மறந்து விடல் கூடாது.

**கன்னி**

முழுகிப்போன குமரிக் கண்டம், தென் கோடியில் குமரி என்னும் மலைத் தொடரையும் வடகோடியில்

குமரி என்னும் பேரியாற்றையும் கொண்டிருந்தமை, முன்னர்க் கூறப்பட்டது.

"வடவேங்கடம் தென்குமரி" என்னும் தொல்காப்பியச் சிறப்புப்பாயிர அடியிற் குறிக்கப் பட்டது குமரியாறே.

பரதன் என்னும் மாவேந்தனின் மகளாகிய குமரியின் பெயரால், பெயர் பெற்றது குமரிக் கண்டம் என்பதும், தொல்கதைக்கட்டே.

குமரி கன்னி என்பன ஒரு பொருட் சொற்களாதலால், குமரியாறு கன்னியெனவும்படும்.

**"மன்னு மாலை வெண்குடையான்**
**வளையாச் செங்கோ லதுவோச்சிக்**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி."**

என்னும் சிலப்பதிகாரக் கானல் வரிப்பாடல், குமரியாற்றைக் கன்னியெனக் குறித்தல் காண்க. கன்னி என்பதும் காளியின் பெயரே.

கன்னி என்னும் சொல், மக்களினத்துப் பெண்ணைக் குறிக்கும்போது, பூப்படைந்து மணமாகாத பெண்ணைக் குறிக்கும். ஒரு பெண் வாழ்நாள் முழுதும மணமாகாதிருக்கலாமாதலால், இளங்கன்னி கன்னிகை யெனப்படுவாள். கை என்பது ஒரு குறுமைப்பொருள் பின்னொட்டு (Diminutive suffix).

ஒ. நோ: குடி (வீடு) - குடிகை (சிறு வீடு) - குடிசை.

பூப்படையாத சிறுமியையும் மணமான பெண்ணையும், கன்னியென்று சொல்லும் வழக்கமில்லை. கன்னி கழிதல், கன்னியழிதல், கன்னியழித்தல் என்னும் வழக்குக்களை நோக்குக.

கன்னி என்னும் சொல்லைக் கன்யா என்றும், கன்னிகை என்னும் சொல்லைக் கன்யகா என்றும், வடமொழியாளர் திரித்து, சிறுமி, மகள் என்ற

பொருள்களிலும் வழங்குவர். அதற்கேற்ப, கன் (திகழ்), கன (சிறு) என்பவற்றை வேராகக் காட்டுவர்.

திகழ்தலைக் குறிக்கும் கன்னெனும் சொல் வலிந்து பொருத்துவதாகும். சிறுமையைக் குறிக்கும் கன என்னும் சொல் பூப்படைந்த பெண்ணிற்குப் பொருந்தாது. மிகச் சிறியதைக் குன்னியென்பது தமிழ்மரபு. குல் - குன் - குன்னி. குல் - குள் - குறு, நன்னியும் குன்னியும் என்பது பாண்டி நாட்டு வழக்கு. குன் - கன் - கன (kana).

கன்னுதல் என்பது பழுத்தலைக் குறிக்கும் ஓர் அருந்தமிழ்ச் சொல். வெப்பத்தினாலாவது அழுத்தத்தினாலாவது உள்ளங்கையிலும் உள்ளங்காலிலும் அரத்தங்கட்டிச் சிவந்துவிட்டால், அதை அரத்தங் கன்னுதல் என்பர். கனி (பழம்) என்னும் சொல் கன்னி (பழுத்தது) என்பதன் தொகுத்தலே. நகு என்னும் முதனிலை வழக்கற்றுப் போனபின், நகை என்னும் தொழிற்பெயர் முதனிலையாய் வழங்குவது போன்றதே கனி என்னும் முதனிலையும். பூப்பு என்னும் சொற் போன்றே, கன்னுதல் என்பதும் நிலைத்திணைக்குரிய தாயிருப்பதும், Mature என்னும் ஆங்கில வழக்கும், இங்குக் கருதத்தக்கன.

**மூவேந்தர் குடிப்பெயர்**

பழங்குடி என்னும் சொற்கு, சேர சோழ பாண்டியர் போலப் படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டு வருங்குடி என்று, பரிமேலழகர் உரைத்தற் கேற்ப,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்"

என்று தொல்காப்பியரும் (செய். 78) மூவேந்தர் குடித் தொன்மையையும் சிறப்பையும் குறிப்பிட்டுள்ளார்.

முதற்காலத்தில் முடியணியும் உரிமை சேர சோழ பாண்டியர்க்கே யிருந்ததால், அவர் தலைமையாயிருந்த காலமெல்லாம் கடைக்கழகக் காலத்திற்கு முன்னரேயே. குறுநில மன்னர் பலர் மூவேந்தர்க் கடங்காமையை, கடைக்கழகப் பனுவல்களும் பாடல்களும் தெரிவிக்கின்றன. அதன்பின், களப்பாளர் (களப்பிரர்) ஆட்

சியும் பல்லவர் ஆட்சியும் பிறமொழியாளர் ஆட்சியும் இடையிட்டிடையிட்டு வந்துவிட்டன.

ஆரியர் வருமுன், நாவலந்தேயம் முழுதும் மூவேந்தர் நேரடி ஆட்சிக்குட்படாவிடினும் அதிகாரத்திற்குட்பட்டிருந்தது. மதி கதிரவன் நெருப்பு ஆகிய முச்சுடரையும், முறையே, பாண்டியரும் சோழரும் சேரருமே தம்குல முதலாகக் கொண்டிருந்தனர்.

**பாண்டியன்**

மூவேந்தருள்ளும் பாண்டியன் முந்தியவன் என்பது,

> **“பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
> **குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள**
> **வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு**
> **தென்றிசை யாண்ட தென்னவன் வாழி”**

என்னும் இளங்கோவடிகள் கூற்றுத் (சிலப். 10: 18-21) தெரிவிக்கும். இதனாலும், பழையன் என்று பெயர் பெற்ற இரு குறுநில மன்னர் இருந்ததாலும், பாண்டியன் என்னும் பெயரைப் பண்டு என்னும் சொல்லினின்று திரிப்பர். ஆயின் காளையைக் குறிக்கும் பாண்டி அல்லது, பாண்டியம் என்னும் சொல்லினின்று அப்பெயர் வந்ததாகக் கொள்வதே மிகப் பொருத்தமாம்.

பாண்டி = எருது (பரிபா. 20: 17 குறிப்பு). பாண்டி- பாண்டியம் = எருது, “செஞ்சுவற் பாண்டியம்” (பெருங். உஞ்சைக். 38: 32). பாலை நிலத்தலைவனும் வயவனும் (வீரனும்) காளையெனப் படுதல் இங்குக் கவனிக்கத் தக்கது.

> “மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற இடுக்கண் இடர்ப்பா டுடைத்து” என்னும் குறளும் (624) இங்கு நோக்கத்தக்கதாம்.

பாரதப் போர்க்கு முந்தியே பாண்டியர் இருந்ததால் பாண்டவன் என்னும் சொல்லைப் பாண்டியன் என்னும் பெயர்க்கு மூலமாகக் காட்டுவது, வரலாற்றறிவில்லார் கூற்றும். பாண்டவ கௌரவர் குடியான பரத மரபு,

தென்னாட்டினின்று வடநாடு சென்ற பாண்டியர் குடிக் கிளையே. இதன் விளக்கத்தை என் 'தமிழர் மரபு' என்னும் நூலுட்காண்க.

**"வேழ முடைத்து மலைநாடு மேதக்க**
**சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்**
**தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்டை**
**நன்னாடு சான்றோ ருடைத்து."**

என்றார் ஔவையார்.

சோழ நாட்டிற்குப் புனல்நாடு வளநாடு என்றும், சோழனுக்கு வளவன் என்றும், பெயர். சோறென்பது நெற் சோறே. சொல் = நெல். சொல்-சொன்றி, சோறு.

சொல் இயற்கையாகவோ மிகுதியாகவோ விளைந் தது சோழநாடெனப்பட்டது. சொல்லாக்கத் திரிவில் லகரம் ழகரமாவது இயல்பே.

ஒ. நோ: கல் - கள் - காள் - காழ் - காழகம் = கருமை.
கில் - கீழ் = தோண்டு. கெல் - கேழல் = தோண்டும் பன்றி.
சுல் (வளை)—சூழ்.
துல் (பொருந்து) - தோழம் - தோழன்.
புல் (துளை) - பூழை. பொல் (பிள) - போழ்.

தசரதனின் முன்னோராகச் சொல்லப்பட்ட முசுகுந் தன். சிபி முதலியோர், வட நாட்டையும் ஆண்ட சோழ மாவேந்தரே.

**"வெற்றிவேல் மன்னற் குற்றதை ஒழிக்கெனத்**
**தேவர் கோமான் ஏவலிற் போந்த**
**காவற் பூதத்துக் கடைகெழு பீடிகை"**

என்பது (சிலப். 5 :65-67), முசுகுந்தனையும்,

**"தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்**
**விண்ணவர் தலைவனை வணங்கிமுன் நின்று**
**மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள்**
**மேலோர் விழைய விழாக்கோள் எடுத்த**
**நாலேழ் நாளினும் நன்கினி துறைகென**
**அமரர் தலைவன் ஆங்கது நேர்ந்தது"**

(மணி. 1 : 4-9)

**"கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக"**

(புறம். 43 : 5-8)

என்பன, சிபியையும் அவன் வழியினரையும் உறையூரிலும் புகாரிலிலுமிருந்தாண்ட சோழ வேந்தராகவே குறிப்பாயுணர்த்துதல் காண்க. சிபி என்பதன் தமிழ் வடிவம் சிம்பி அல்லது செம்பி என்றிருந்திருக்கலாம். வரலாற்றிற்கு முந்திய காலத்தில், சோழனுக்குப் பனிமலைவரையும் ஆட்சியிருந்ததாகத் தெரிகின்றது. ஏறத்தாழ ஈராயிரங்கல் தெற்கே நீண்டிருந்த குமரிக் கண்டம் பழம்பாண்டி நாடாயிருந்ததை நோக்கும்போது, பனிமலைவரை சோழனாட்சி பரவியிருந்தது வியப்பாய்த் தோன்றாது. வேங்கடத்திற்கு வடக்கிலுள்ள கொடுந்தமிழ்நாடு வடுக நாடாய்த் திரிந்தபின், அந்நாட்டுச் சோழர் குடியினர் சோடர் எனப்பட்டார்.

**சேரன்**

மேற்புறமாயினும் கீழ்ப்புறமாயினும், சேரநாடு முழுவதும் பெரும்பாலும் மேற்குத் தொடர்ச்சி கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் அடிவாரச் சரிவே. மலையடிவாரம் சாரல் எனப்படும்.

"சாரல் நாட செவ்வியை யாகுமதி"

(குறுந். 18 : 2)

"சாரல்நாட நடுநாள்" (குறுந். 9)

"சாரல் நாட வாரலோ எனவே" (குறுந். 141 : 8)

என்பன, மலைப்பக்க நாட்டைச் சாரல் நாடு எனக் கூறுதல் காண்க.

சாரல் - சேரல் - சேரலன் - சேரன். மலையரணைக் குறிக்கும் குறும்பு என்னும் சொற்போல், சேரல் என்பதும் இடவாகு பெயராய் அரசனை உணர்த்தும்.

சேரலன் – கேரளன்.

செங்குட்டுவனிலும் சிறந்த மாவலி என்னும் சேர வேந்தனின் ஆட்சி, வேம்பாய் (Bombay) வரையும் பரவியிருந்தது.

# பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்

## I. பண்டைத் தமிழ் நாகரிகம்

### 1. மொழி

**பொதுமக்கள் அமைப்பு:** ஒரு நாட்டுமக்களின் நாகரிக நிலையைக் காட்டுவது அவர் தாய் மொழியே. எந்நாட்டிலும், மொழி பொதுமக்கள் அமைப்பென்றும் இலக்கியம் புலமக்கள் அமைப்பென்றும், அறிதல் வேண்டும்.

இடுகுறி யெதுவுமின்றி ஒரு பொருட் பல சொற்களும் நுண்பொருட் பாகுபாட்டுச் சொற்களும் நிறைந்து, பகுத்தறிவிற் கொத்த சிறந்த இலக்கணம் அமைந்து, எல்லாக் கருத்துக்களையும் தன் சொற்களாலேயே தெள்ளத் தெளிவாகத் தெரிவிப்பது தலை சிறந்த மொழியாம்.

முழுகிப் போன குமரிக் கண்டத் தென் கோடியடுத்து, நிலவளமும் நீர்வளமும் உணவுவளமும் பொன் வளமும் மணி வளமும் நிறைந்திருந்த பழந் தமிழ்நாட்டில், வாழ்ந்துவந்த முதற்காலத் தமிழ் மக்கள் இக்காலப் புலவரினும் சிறந்த நுண்மாண் நுழை புலத்தினராதலின், காட்சி, கருத்து என்னும் இருவகைப் பொருள்களையும் கூர்ந்து நோக்கியும் நுணுகியாராய்ந்தும், அவற்றின் சிறப்பியல்பிற் கேற்ப அழகிய பொருட் (கரணியக்) குறிகளாகவே எல்லாச் சொற்களையும் வேறுபடுத்தல், ஒன்று படுத்தல் இனப்படுத்தல் என்னும் மும்முறையில் அமைத்திருக்கின்றனர்.

**வேறுபடுத்தல்**

நால்வகையிலை :

சில பூண்டுகளிலும், செடி கொடிகளிலும், வாழை மா புளி முதலிய மரங்களிலும், கிளை நுனியிற் காம்புடன் தனித்தும் அடர்ந்தும் பெரும்பாலும் முட்டை வடிவில் மெல்லிதாயிருப்பது **இலை.**

புல்லிலும் நெல் வரகு போன்ற பயிர்களிலும், நுனியிலும் தண்டையொட்டியும் ஈட்டிபோல் ஒடுங்கி நீண்டு சுரசுரப்பாயிருப்பது **தாள்.**

கரும்பிலும், சோளம் நாணல் போன்ற பெருந் தட்டைகளிலும், நுனியிலும் கணுவொட்டியும் பெருந் தாளாக ஓங்கி மடிந்து தொங்குவது **தோகை.**

தென்னை பனை முதலியவற்றிற் போல், நுனியையும் அடியையும் ஒருங்கே ஒட்டியே தனித்தனி மட்டையோடு தோன்றி, விசிறி வடிவில் அல்லது தூவு வடிவில் முரடாயிருப்பது **ஓலை.**

ஐவகை மலர் நிலை :

தோன்றும் நிலை **அரும்பு** ; மலரத் தொடங்கும் நிலை **போது** ; மலர்ந்த நிலை **மலர்** ; கீழே விழுந்த நிலை **வீ** ; வாடிச் சிவந்த நிலை **செம்மல்.**

அரும்பு, மொட்டு, முகை, மொக்குள் என்பன, பருமன் பற்றிய வெவ்வேறு அரும்பு வகைகளைக் குறிப்பன.

மூவகைக் காய்ப்புநிலை :

இளங்காய் **பிஞ்சு** ; முதிர்ந்தது **காய்** ; பழுத்தது **பழம்** அல்லது **கனி.**

ஆங்கிலம் மிகுந்த வளர்ச்சியுற்று, ஏறத்தாழ மூன்றிலக்கம் சொற்களைக் கொண்டுள்ளது. ஆயினும் இன்னும் அதில் காயைக் குறிக்கச் சொல் அமையவில்லை; பழுக்காத பழம் என்று வட்ட வழியே குறிக்கின்றனர்.

சில வகைப் பிஞ்சுகட்குச் சிறப்புப் பெயருமுள. தென்னை பனை முதலியவற்றின் பிஞ்சு **குரும்பை;** மாம்பிஞ்சு **வடு** ; பலாப்பிஞ்சு **மூசு;** வாழைப் பிஞ்சு **கச்சல் ;**

இங்ஙனமே நிலைத்திணையின் (தாவரத்தின்) எல்லா வுறுப்புக்களையும், நுண்பாகுபாடு செய்து, வெவ்வேறு

பெயரிட்டிருக்கின்றனர் பண்டைத் தமிழப் பொது மக்கள்.

இடங்கர் (Alligator), கராம் (Gavial), முதலை (Crocodile) என மூவகையாக முதலைகள் வகுக்கப் பட்டிருக்கின்றன.

குதிரை முதற் கடல்கோளுக்கு முன்பே அரபி நாட்டினின்று குமரி நாட்டிற்குக் கொண்டுவரப் பட்டது. அது அயல்நாட்டு விலங்கேனும், அதைப் பல்வேறு வகைப்படுத்தி வெவ்வேறு பெயரிட்டிருக் கின்றனர்.

புரவி, பாடலம், கோடகம், இவுளி, வன்னி, குதிரை, பரி, கந்துகம் என்னும் எண்வகைக் குதிரை களும் அவற்றின் சிறப்பிலக்கணமும், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்திற் கூறப்பட்டுள (நரிபரி. 87-94).

பாண்டியன் குதிரை **கனவட்டம்;** சோழன் குதிரை **கோரம்;** சேரன் குதிரை **பாடலம்;** குறுநில மன்னர் குதிரை **கந்துகம்.**

உன்னி, கண்ணுகம், கலிமா, கிள்ளை, குந்தம், கூந்தல், கொக்கு, கொய்யுளை, கோடை, கோணம், துரங்கம், தூசி, பாய்மா, மா, மண்டிலம், வயமா முதலி யன குதிரையின் பொதுப் பெயர்கள். மட்டம் என்பது சிறுவகைக் குதிரை. தட்டு என்பது நாட்டுக் குதிரை. மட்டத்தினும் சிறுவகை இளமட்டம். தேசி என்பது பெருங் குதிரை.

குதிரை என்பது ஒரு சிறப்பு வகையின் பெயராகக் கூறப்பட்டிருப்பினும், உலக வழக்கிற் பொதுப் பெய ராய் வழங்குவது அஃதொன்றே. குதிப்பது குதிரை. குதித்தல் தாண்டுதல். "கூற்றங் குதித்தலுங் கைகூடும்" என்னும் குறளடியை நோக்குக. (குறள். 269).

உண்மை, வாய்மை, மெய்ம்மை என்னும் முச் சொல்லும், உள்ளம் வாய் மெய் (உடம்பு) என்னும் முக்கரணத்தையும் முறையே தழுவினவாகச் சொல்லப்

படுவதுண்டு. இவற்றிற்கு வேறு பொருட்காரணியமும் உள.

சொல்லுதலின் வகைகளைக் குறிக்க, ஏறத்தாழ நாற்பது சொற்கள் தமிழில் உள்ளன. அவை யாவன :—

| சொல் | சிறப்புப் பொருள் |
|---|---|

அசைத்தல்—அசையழுத்தத்துடன் சொல்லுதல்.
(அசையழுத்தம்—(accent)
அறைதல்—அடித்து (வன்மையாய் மறுத்து)ச் சொல்லுதல்.
இசைத்தல்—ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல்.
இயம்புதல்—இசைக்கருவி யியக்கிச் சொல்லுதல்.
உரைத்தல்—அருஞ்சொற்கு அல்லது செய்யுட்குப் பொருள் சொல்லுதல்.
உளறுதல்—ஒன்றிருக்க ஒன்றைச் சொல்லுதல்.
என்னுதல்—என்று சொல்லுதல்.
ஓதுதல்—காதிற்குள் மெல்லச் சொல்லுதல்.
கத்துதல்—குரலெழுப்பிச் சொல்லுதல்.
கரைதல்—அழைத்துச் சொல்லுதல்.
கழறுதல்—கடிந்து சொல்லுதல்.
கிளத்தல்—இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல்.
கிளத்துதல்—குடும்ப வரலாறு சொல்லுதல்.
குயிலுதல், குயிற்று—குயில்போல் இன்குரலிற் சொல்லுதல்.
குழறுதல்—நாத் தளர்ந்து சொல்லுதல்
கூறுதல்—கூறுபடுத்திச் சொல்லுதல்.
சாற்றுதல்—பலரறியச் சொல்லுதல்.
செப்புதல்—வினவிற்கு விடை சொல்லுதல்.
நவிலுதல்—நாவினால் ஒலித்துப் பயிலுதல்.
நுதலுதல்—ஒன்றைச் சொல்லித் தொடங்குதல்.
நுவலுதல்—நூலின் நுண்பொருள் சொல்லுதல்.
நொடித்தல்—கதை சொல்லுதல்.
பகர்தல்—பண்டங்களைப் பகுத்து விலை சொல்லுதல்.
பறைதல்—மறை (இரகசியம்) வெளிப்படுத்திச் சொல்லுதல்.
பன்னுதல்—நிறுத்தி நிறுத்திச் சொல்லுதல்.

பனுவுதல்—செய்யுளிற் புகழ்ந்து சொல்லுதல்.
புகலுதல்—விரும்பிச் சொல்லுதல்.
புலம்புதல்—தனக்குத்தானே சொல்லுதல்.
பேசுதல்—ஒரு மொழியிற் சொல்லுதல்.
பொழிதல்—இடைவிடாது சொல்லுதல்.
மாறுதல்—உரையாட்டில் மாறிச் சொல்லுதல்.
மிழற்றுதல்—மழலைபோல் இனிமையாய்ச் சொல்லுதல்.
மொழிதல்—சொற்களைத் தெளிவாகப் பலுக்கிச் சொல்லுதல்.
வலத்தல்—கேட்பார் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல்.
விடுதல்—மெள்ள வெளிவிட்டுச் சொல்லுதல்.
விதத்தல்—சிறப்பாய் எடுத்துச் சொல்லுதல்.
விள்ளுதல்—வெளிவிட்டுச் சொல்லுதல்.
விளத்துதல்—(விவரித்துச்) சொல்லுதல்.
விளம்புதல்—ஓர் அறிவிப்பைச் சொல்லுதல்.

ஒருவனிடத்தில் ஒன்றைக் கேட்கும் போது, தாழ்ந்தவன், "ஈ" என்றும், ஒத்தவன், "தா" என்றும், உயர்ந்தவன், "கொடு" என்றும், சொல்லவேண்டுமென்பது தமிழ் மரபு.

**ஒன்றுபடுத்தல்**

யானைக்கும் தேன் வண்டிற்கும் முகத்தின் முன் ஓர் உறிஞ்சி (Proboscis) உள்ளது. இந்த ஒப்புமையைக் கண்ட முதற்காலத் தமிழர், இரண்டிற்கும் தும்பி எனப் பொதுப் பெயர் இட்டனர். தூம்பு—தும்பு—தும்பி = தூம்பு (குழாய்) போன்ற உறுப்பையுடையது.

**இனப்படுத்தல்**

ஒரு பொருளை, உடம்பின் அல்லது உறுப்பின் வடிவில், ஒத்த வேறு பொருள்களைக் கண்ட பண்டைத் தமிழர், முன்னதன் பெயர்க்கு அடை கொடுத்துப் பின்னவற்றிற்கிட்டு, அவற்றையெல்லாம் ஓரினப் படுத்தியிருக்கின்றனர்.

எ. டு: வேம்பு, கறிவேம்பு, நாய்வேம்பு, நிலவேம்பு, நீர்வேம்பு.

வேம்பைப் பிறவற்றோடு ஒப்புநோக்கி நல்ல வேம்பு என்றனர்.

**இடுகுறியின்மை**

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" என்பது தொல்காப்பியம் (640). ஆனால், பல சொற் கட்டுப் பார்த்தமட்டில் பொருள் தோன்றாது. அவற்றை ஆழ்ந்து ஆராய வேண்டும். இதனையே,

"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்று தொல்காப்பியம் (877) குறிப்பிடுகின்றது.

பலா, பனை, பொன், மரம் முதலியவற்றை மொழி நூலறிவும் சொல்லாராய்ச்சியுமில்லா இலக்கண வுரையாசிரியர், இடுகுறியென்று குறிப்பது வழக்கம்.

பலா பருத்த பழத்தையுடையது. பல்—பரு—பருமை.

ஒப்பு நோக்க: சில்—சின்—சிறு. சின்மை—சிறுமை.

"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கு" (குறுந். 18).

பனை கருக்குமட்டையுடையது. பல்—பன் = அறு வாட்பல், பன்னறுவாள், பன்வைத்தல் என்னும் வழக்குக்களை நோக்குக. பன்—பனை = கூரிய பற்போன்ற கருக்குள்ளது.

பொன் பொற்பு அல்லது பொலிவுள்ளது. பொல்—பொலி—பொலிவு. பொல்—பொற்பு = அழகு. பொல்—பொலம்—பொலன். பொல்—பொன். பொற்ற = அழகிய (சீவக. 270). பொல்லா = அழகில்லாத (ஔவையார்). பொற்றது = பொலிவுற்றது (சீவக. 649).

மரம் உணர்ச்சியற்றது. கால் உணர்ச்சியற்றால், மரத்துப் போய்விட்டது என்பது வழக்கம். உணர்ச்சியற்றவனை மரம்போலிருக்கிறான் என்பர். மதமதப்பு = உணர்ச்சியின்மை, திமிர். மதம்—மரம். மதத்தல் = மரத்தல்.

த. நோ: விதை—விரை.

இடுகுறியில்லாமலே ஒரு பெருந் தாய்மொழியை ஆக்கியது, பண்டைத் தமிழரின் நுண்மாண் நுழை புலத்தைச் சிறப்பக் காட்டும்.

**இயற்கைச் சொல்லாக்கம்**

தமிழில் எல்லாச் சொற்களும் இயற்கையான முறையில் அமைந்தவை. வடமொழியில் 'ஆ' என்னும் முன்னொட்டால் எதிர்ப்பொருள் வினைச்சொற்களை அமைத்துக் கொள்வர்.

எ. டு: கச்சதி = செல்கிறான். ஆகச்சதி = வருகிறான். தத்தே = கொடுக்கிறான், ஆதத்தே = எடுக்கிறான். இத்தகைய செயற்கையமைப்பு தமிழில் இல்லை.

**தூய்மை**

குமரிக் கண்டத்தில் தமிழ் தவிர வேறொரு மொழியும் வழங்கவில்லை. வெளிநாட்டிலிருந்து பொருள்கள் வரின், அவற்றிற்கு உடனுடன் தூய தமிழ்ப் பெயர்கள் அமைக்கப்பட்டன.

கரும்பு சீன நாட்டினின்று அதிகமானின் முன்னோரால் கொண்டு வரப்பட்டது.

**"அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்**
**அருப்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்**
**நீரக விருக்கை யாழி சூட்டிய**
**தொன்னிலை மரபின்நின் முன்னோர் போல"**

என்று ஔவையார் பாடியிருத்தல் காண்க (புறம். 99). சீன நாட்டை வானவர் நாடென்பது பண்டை வழக்கு. கருப்பு நிறமானது கரும்பு.

மிளகாய் அமெரிக்காவினின்று வந்ததாகக் கருதப்படுகின்றது. மிளகு + காய் = மிளகாய். மிளகுபோற் காரமுள்ள காய் மிளகாய். இவ்வழக்கைப் பின்பற்றியே, உருளைக்கிழங்கு, புகையிலை, நிலக்கடலை, வான்கோழி முதலிய பெயர்களும் பிற்காலத்தில் ஏற்பட்டுள்ளன.

**இலக்கண அமைப்பு**

**இருதிணை :** பொருள்களையெல்லாம், பகுத்தறிவுள்ளது, பகுத்தறிவில்லது எனப் பகுத்தது தமிழப் பொதுமக்களே. காளையும் ஆவும் அஃறிணையில் ஆண்பாலும் பெண்பாலுமாயினும், காளை வந்தான், ஆவு வந்தாள் என்று யாரும் சொல்லும் வழக்கமில்லை. காளை வந்தது, ஆவு வந்தது என்று இரண்டையும் ஒன்றன்பாலிற் கூறுவதே மரபு.

முருகன் வந்தான், வள்ளி வந்தாள் என்று ஆண்பால் பெண்பால் (பகுத்தறிவுள்ள) மக்களுக்கே வகுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வுலகிற் பகுத்தறிவுள்ள மக்களும் இறைவனுமே உயர்ந்த வகுப்பென்றும், பிறவெல்லாம் உயிருள்ளவையாயினும் இல்லவையாயினும் தாழ்ந்த வகுப்பே யென்றும், ஏற்கெனவே பொது மக்கள் வகுத்த இரு வகுப்பிற்கும், இலக்கணியர் முறையே உயர்திணை, அஃறிணை யென்று பெயர் மட்டும் இட்டிருக்கின்றனர். இலக்கணம் என்பது, ஏற்கெனவே ஏற்பட்டுள்ள மொழியமைதிகளுள் நல்லவற்றை மட்டும் கொண்டு, அவற்றிற்குப் பெயரிட்டுக் காட்டும் முறையேயன்றி, புதிதாக ஏற்பட்ட புலவர் படைப்பன்று. பகுத்தறிவை அளவையாகக் கொண்டு பொருள்களைப் பகுத்த இஃதொன்றே, பண்டைத் தமிழரின் அகக் கரண வளர்ச்சியைக் காட்டப் போதிய சான்றாகும்.

**ஓரியலொழுங்கு**

யான், யாம், யாங்கள்; நான், நாம், நாங்கள்; நீன், நீம், நீங்கள்; தான், தாம், தாங்கள் என்னும் மூவிடப் பகரப் பெயர்களும்;

| | | | |
|---|---|---|---|
| அவன் | இவன் | உவன் | எவன் |
| அவள் | இவள் | உவள் | எவள் |
| அவர் | இவர் | உவர் | எவர் |
| அது | இது | உது | எது |
| அவை | இவை | உவை | எவை |

என்னும் சுட்டுப் பெயர் வினாப் பெயர்களும்; ஒன்றுமுதல் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்

பது வரைப்பட்ட எண்ணுப் பெயர்களும், கொண்டுள்ள ஓரியலமைப்பை வேறெம்மொழியிலும் காண முடியாது.

**பொருட்பால்**

ஆரிய மொழிகளிற்போல் ஈறுபற்றிய பாலமைப் பின்றி, பொருள்களின் ஆண்மை பெண்மையும் ஒருமை பன்மையும் பற்றிய பாலமைப்பே தமிழிலுள்ளது.

வடமொழியில், மனைவியைக் குறிக்கும் தார, பார்யா, களத்திர என்னும் முச்சொற்களுள், முதலது ஆண்பால்; இடையது பெண்பால்; கடையது அலிப்பால். பொத்தகத்தைக் குறிக்கும் சொற்களுள், 'கிரந்த' ஆண்பால்; 'ச்ருதி' பெண்பால்; 'புஸ்தக' அலிப்பால். இதினின்று அம்மொழியின் ஒழுங்கை அறிந்து கொள்க.

**பாலிசைவு**

தமிழ்ச் சொற்றொடர்களில், எழுவாயும் பயனிலையும் பெரும்பாலும் திணைபால் எண் இடம் ஒத்தேயிருக்கும். திணைபால் எண் இட மயக்கம் இருப்பினும் தெளிவாய்த் தெரியும்.

வடமொழியில், 'தத் கச்சதி' என்பது அவன் போகிறான், அவள் போகிறாள், அது போகிறது, என்று பொருள்படுவது போன்ற சொற்றொடரமைப்பு தமிழில் இல்லை.

**புலமக்கள் அமைப்பு**

உரைநடை, செய்யுள் என மொழிநடை இருவகைப் படும். இவற்றுள் செய்யுள் புலமக்கள் அமைப்பாகும். அது பாட்டும் பாவும் என இரு வகையாம். உரைநடை பண்பட்டு இசைப் பாட்டாகவும், இசைப் பாட்டு பண்பட்டுச் செய்யுளாகவும், திருந்தும். ஆகவே, செய்யுளே மொழியின் உச்ச நிலையாம்.

குமரிக்கண்டத் தமிழர், செய்யுட் கலையின் கொடு முடியேறி, அறுவகை வெண்பாக்களையும், நால்வகை அகவற்பாக்களையும், நாலும் ஐந்தும் ஆறுமான

உறுப்புக்களையுடைய நால்வகைக் கலிப்பாக்களையும், இருவகை வஞ்சிப்பாக்களையும், யாத்திருந்தனர். யாத்தல் — கட்டுதல்.

வெண்பாவும் கலிப்பாவும் போன்ற செய்யுள் வகைகளை, வேறெம்மொழியிலும் காண்டலரிது.

### எ. டு: வெண்பா

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

### கலிப்பா

(தரவு)

"அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேஎளினி ;

(தாழிசை)

1

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே;

2

இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொண் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே;

3

**கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்**
**துன்னரூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்**
**இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்**
**தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே;**

(தனிச் சொல்)

எனவாங்கு,

**இனைநல முடைய கானம் சென்றோர்**
**புனைநலம் வாட்டுநர் அல்லர் மனைவயிற்**
**பல்லியும் பாங்கொத் திசைத்தன**
**நல்லெழில் உண்கணும் ஆடுமால்இடனே."** (கலித். 11)

இது, காட்டு வழியாய்த் தொலைவான இடத்திற்குப் பொருள் தேடச் சென்ற கணவனார், காட்டிலுள்ள ஆண் யானை பெண்யானைக்கும், ஆண் புறு பெண் புறுவிற்கும், ஆண் மான் பெண் மானிற்கும் காட்டும் அன்பை ஏற்கெனவே தனக்குச் சொல்லியிருத்தலால், அவற்றை நேரிற் கண்டபின் நீண்டநாள் வேற்றிடத்தில் தங்கியிராது விரைந்து வருவாரென்றும், அதற்கேற்ற நற்குறிகளும் தோன்றுகின்றனவென்றும், மனைவி தன் தோழிக்குச் சொல்லியது.

இது நாலுறுப்பமைந்த நேரிசை யொத்தாழிசைக் கலி. ஐயுறுப்பமைந்த அம்போதரங்க வொத்தாழிசைக் கலியும், ஆறுறுப்பமைந்த வண்ணக வொத்தாழிசைக் கலியும் இலக்கண நூல்களுட் கண்டு கொள்க. காதலையும் கடவுளையும் வண்ணித்துப் பாடுவதற்கு அவற்றிலும் சிறந்த செய்யுள் வகை எதிர்காலத்திலும் இருக்க முடியாது. அம்போதரங்கம், வண்ணகம் என்னும் இரண்டும் தென் சொற்களே.

**அம்போதரங்கம்**

அம்முதல் - பொருந்துதல், ஒட்டுதல்.

அம் = (ஒட்டும்) நீர். "அம்தாழ் சடையார்"
(வெங்கை கோ. 35).

அம்—ஆம்=நீர். "ஆம்இழி அணிமலை" (கலித். 48).

அம்—அம்பு=நீர், கடல் "அம்பேழும்" (திருப்பு. 32).

ஒ. நோ: கும்—கும்பு, செம்—செம்பு, வெம்—வெம்பு.

தரங்கு=1. ஈட்டி போன்ற குத்துக் கருவி.

2. கரையைக் குத்தும் அலை.

"தரங்காடுந் தடநீர்" (தேவா. 463, 1).

தரங்கு—தரங்கம்=அலை. "நீர்த்தரங்க நெடுங் கங்கை" (பெரிய பு. தடுத்தாட். 165).

தரங்கம்பாடி—அலை யிரையும் ஒரு கடற்கரையூர்.

'ஓ' என்பது ஒரு சாரியை.

அம் என்பது அப் என்று திரிந்தும், அம்பு என்பது திரியாதும், வடமொழிச் சென்று வழங்கும்.

**வண்ணம்**

வள்—வளை. வளைத்தல்=எழுதுதல், வரைதல்.

"உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ" (நெடுநல். 113).

வள்—வரி. வரிதல்=எழுதுதல், ஓவியம் வரைதல்.

வரித்தல்=எழுதுதல், சித்திரமெழுதுதல்.

வரி=எழுத்து.

வரி+அணம்—வரணம்=எழுத்து, எழுதும் நிறம், நிறம் பற்றிய குலம்.

வரணம்—வர்ண (வ).

வரி என்னும் சொல்லின் பொருள், அதற்கு மூலமான வள் (வண்) என்னும்அடியாலும் உணர்த்தப் பெறும்.

வள்—வண்—வண்ணம்=எழுத்து, நிறம், வகை, ஓசைவகை, உருட்டு வண்ணம், சிறப்போசைப் பாட்டு.

வண்ணம்—வண்ணகம்—வர்ணக (வ).

வண்ணம்—வண்ண (பிராகிருதம்).

வண்ணிகன்—வர்ணிக (வ) எழுத்தாளன்.

வண்ணம் என்பது வரணம் என்பதன் திரிபன்று; வள் என்னும் அடிச் சொல்லின் திரிபேயாகும்.

ஒ. நோ: திள்—திண்—திண்ணை திரண்ட மேடு.

திள்—திரு—திரள்—திரளை—திரணை, திண்ணை, திரணை என்னும் இரண்டும் ஒரே வேரினின்று தோன்றிய ஒருபொருட்சொற்கள். ஆயின், திண்ணை என்பது திரணை என்பதன் திரிபன்று; திண் என்னும் அடிப்படைச் சொல்லினின்று திரிந்தது. இங்ஙனமே வண்ணமும் வரணமும் என்க. முற்காலத்தில் தொழிற் பெயராயிருந்த பல சொற்கள், பிற்காலத்தில் துணைவினை சேர்ந்தும் சேராதும் வினை முதனிலைகளாக வழங்குகின்றன. எ. டு: களவு செய், நகை. நிலம் பல படையாய் ஒன்றன்மேலொன்று அமைவதுபோல், சொற்களும் அமைகின்றன. திள் வள் என்னும் ஈரடிகளும் சொல்லாக்கத்தில் ஒத்திருத்தலைப் பின்வருஞ் சொற்களாற் காண்க.

திள்—திண்—திண்ணம்—திண்ணகம்.

"—திண்—திண்டு—திண்டி. திண்—திணர்.

"—திட்டு—திட்டம், திட்டை.

வள்—வண்—வண்ணம்—வண்ணகம்.

"—வண்—வண்டு—வண்டி. வண்—வணர்.

"—வட்டு—வட்டம், வட்டை.

வரணம்—வரணி. வரணித்தல்=வண்ணத்தால் வரைதல்போற் சொல்லாற் புகழ்தல். அல்லது விரித்துக் கூறுதல்.

வரணி—வரணனை. வருணம், வருணி, வருணனை என்பன வடசொல்லைப் பின்பற்றிய வழு வடிவங்கள். வரணம் என்பதே பாண்டிநாட்டுலக வழக்கு.

வர்ணி—வர்ண (வ.) வரணனை—வர்ணனு (வ.)

வண்ணம்—வண்ணி = வரணி. வண்ணி—வண்ணனை = வரணனை.

அடிப்படைச் சொல் தமிழில் மட்டும் அமைந்திருப்பதும், வடமொழியில் மேற்படைச் சொல்லே அமைந்திருப்பதும், அவற்றின் முன்மை பின்மையைக் காட்டுதல் காண்க.

இனி, "காக்கைக் காகா கூகை" என்னும் ஒரெழுத்துப் பாட்டும், "சென்னி முகமாறுளதால்" என்னும் காளமேகம் மும்மடி யிரட்டுறலும், இராமலிங்க அடிகளின் மாணவர் தொழுவூர்—வேலாயுத முதலியார் பாடிய பதின்பங்கி (தசபங்கி), பதிற்றுப் பதின்பங்கி (சதபங்கி) என்னும் சொல்லணிகளும், அருணகிரியார் பாடிய திருப்புகழ் வண்ணங்களும், பட்டினத்தார் பாடிய உடற்கூற்று வண்ணமும், அகப்பொருட் செய்யுட்களில் வரும் உள்ளுறை யுவமையும், போன்ற அருஞ்சுவையின்பக் கூறுகள் வேறெம்மொழியிலக்கியத்திலும் காணக் கிடையா.

**"முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று**
**மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்**
**குறங்கறுத் திடுவான்போல் கூர் நுதி மடுத்ததன்**
**நிறஞ்சாடி முரண்தீர்ந்த நீள்மருப் பெழில்யானை**
**மல்லரை மறஞ்சாய்த்த மால்போல்தன் கிளைநாப்பண்**
**கல்லுயர் நனஞ்சாரல் கலந்தியலும் நாடகேள்"**

என்னும் 52-ஆம் கலித்தொகைச் செய்யுளின் தரவு, யானையின் செவி மறைவில் பின்னிருந்து வந்து பாய்ந்த புலியை அந்த யானை சினந்தது, காதலனின் களவொழுக்கத்தைப்பற்றிப் பழிதூற்றிய அயலாரைக் கடிந்ததாகவும்; யானை புலியைக் குத்தி மாறுபாடு தீர்ந்தது காதலன் காதலியை மணந்து கொண்டு அயலாரை வாயடக்குவதாகவும்; யானை தன் இனத்தின் நடுவே உலாவித் திரிதல், காதலன் தன் உறவினருடன் கூடியிருந்து இல்லறம் நடத்துவதாகவும், உள்ளுறைப் பொருள்படத் தோழி கூறிய கூற்ருக அமைந்திருத்தல் காண்க.

பண்டைத் தமிழர் செய்யுட்கலையிற் சிறந்திருந்ததனால், செய்யுளுக்கும் நூற்பாவிற்கும் பொருள்கூறும் உரை உட்பட, எல்லா இலக்கியத்தையும் செய்யுளிலேயே இயற்றியிருந்தனர்.

**"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே**
**அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்**
**.............................................**
**யாப்பின் வழிய தென்மனார் புலவர்."**

என்று தொல்காப்பியம் (செய். 78) கூறுதல் காண்க.

**2. துப்புரவு**

பண்டைத் தமிழ் மக்கள் விடிகாலையில் எழுந்தவுடன், ஊருக்கு வெளியே சென்று காலைக்கடன் கழித்து, ஆற்றில் அல்லது கால்வாயில் அல்லது குளத்தில் கால் கழுவுவர். ஆற்றிற்குப் போதல், கால்வாய்க்குப் போதல், குளத்திற்குப் போதல், கொல்லைக்குப் போதல், வெளிக்குப் போதல் என்னும் உலக வழக்கு இதை யுணர்த்தும். இத்தகைய வழக்கும் ஒன்றுக்குப் போதல் இரண்டுக்குப் போதல் என்னும் இடக்க ரடக்கலும் தமிழர் நாகரிகத்தைக் காட்டும்.

கல்வித் தொழிலாளர், காவலர், வணிகர் முதலிய உடலுழைப்பில்லா வகுப்பார் காலையிலும்; உழவர், கைத்தொழிலாளர், கூலிக்காரர் முதலிய உழைப்பாளி வகுப்பார் மாலையிலும்; நாள்தோறும் குளித்து வந்தனர். அழுக்கைத் தேய்ப்பதற்கு ஆடவர் பீர்க்கங் கூட்டைப் பயன்படுத்துவதுண்டு. பெண்டிர் மஞ்சள், சுண்ணம் முதலியவற்றைத் தேய்த்துக் குளிப்பர்.

சுண்ணம் என்பது பலவகை நறுமணப் பொருள்களைச் சேர்த்து இடிக்கும் பொடி. அதை இடித்து வைப்பது பண்டைக் காலத்து இளமகளிர்க்குப் பெருவழக்கமாயிருந்தது. சுண்ணமிடிக்கும் போது பாட்டுப் பாடுவர். இச்செயல் மாணிக்கவாசகர் மனத்தைக் கவர்ந்ததினால், 'திருப்பொற்சுண்ணம்' என்னும் திருவாசகப் பாடல் தில்லையில் அருளிச் செய்யப் பெற்றது.

அரண்மனையில் வாழும் அரச மகளிரும், மாளிகைகளில் வாழும் செல்வப் பெண்டிரும், மாதவி போலும் நாடகக் கணிகையரும், கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் என்னும் ஐவகை விரையும் (நறுமணப் பொருளும்); நாவல் அல்லது பூவந்தி, கடு, நெல்லி, தான்றி, ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு அல்லது கருங்காலி, மாந்தளிர் என்னும் பத்துவகைத் துவரும்; இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதாவரிசி, தக்கோலம், நன்ஞரி, வெண்கோட்டம், காசறை (கத்தூரி), வேரி, இலாமிச்சம், கண்டில் வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக் கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, புன்னை நறுந்தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், நுண்ணேலம், கொடுவேரி என்னும் முப்பத்திருவகை ஓமாலிகையும்; ஊறவைத்த நன்னீரிற் குளித்து வந்தனர்.

ஆடவர் அறிவன் (புதன்) காரியும் (சனியும்), பெண்டிர் செவ்வாய் வெள்ளியும், ஒழுங்காய் எண்ணெய் தேய்த்துத் தலை முழுகினர். குளிப்பு நீராட்டு என்றும், தலைமுழுக்கு நெய்யாட்டு என்றும், சொல்லப் பெறும். நெய்யாட்டில் எண்ணெயையும் உடம்பழுக்கையும் போக்க, சீயற்காய் அரையல், அரைப்பு அரையல், உசிலைத் தூள், பாசி (பச்சை)ப் பயற்றுமா, களிமண் முதலியவற்றைப் பயன்படுத்தினர்.

சீயற்காய் அல்லது சீக்காய் என்பது, அழுக்கைப் போக்குங் காய் என்று பொருள்படுவது; சிகைக்காய் என்பதன் மரூஉ அன்று.

சீத்தல் 1. துடைத்தல்.

"மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப"
(மதுரைக். 685).

2. போக்குதல்.

"இருள்சீக்குஞ் சுடரேபோல்" (கலித். 100: 24).

3. துப்புரவாக்குதல் (சூடா).

"ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே
கூழைக் கேர்மன் கொணர்கஞ் சேறும்"

என்னும் குறுந்தொகைச் செய்யுள் (113), பண்டைத் தமிழ மகளிர் ஊருக்கணித்தான குடிநீர்நிலையிற் குளிக்காமல் சற்று அப்பாலுள்ள காட்டாற்றிற்குச் சென்று குளித்ததையும், கூந்தலழுக்குப் போக்கக் களிமண் எடுத்துச் சென்றதையும், கூறுதல் காண்க.

இரு பாலாரும் குளித்தவுடனும் தலைமுழுகியவுடனும், வெளுத்த துவர்த்து முண்டினால் தலையையும் உடம்பையும் துவர்த்தி, வெளுத்தாடை அல்லது புத்தாடை யுடுப்பர். மாற்றுடை யில்லாவிடின், முன்பு அணிந்திருந்த ஆடையைத் துவைத்துக் கொள்வர்.

பெண்டிர் காரகிற் புகையாலும் சந்தனக் கட்டைப் புகையாலும் தம் கூந்தலின் ஈரம் புலர்த்துவர்.

காலையிற் குளிப்பினும் குளியாவிடினும், பல் துலக்காமல் ஒருவரும் உண்பதில்லை.

சோறுண்பவர், வாயும் முகமும் கைகாலும் கழுவிய பின், துப்புரவான இடத்தில் தடுக்கில் அல்லது பலகையில் அமர்ந்து சப்பளித்திருந்து (சம்மணங்கூட்டி உட்கார்ந்து), கழுவிய வாழை இலையில் அல்லது வெண்கல வட்டிலில் வலக்கையாலேயே எடுத்து உண்பர். அரசர் பொற்கலத்திலும் செல்வர் வெள்ளிக் கலத்திலும் உண்பது வழக்கம். பெற்றோரும் பெற்ற சிறு பிள்ளைகளுமா யிருந்தாலொழிய, ஒரே கலத்தில் அல்லது இலையிற் பலர் உண்பதில்லை. உண்டெழுந்தபின், உண்ட இடம் இலையகற்றித் தண்ணீர் அல்லது சாணநீர் தெளித்துத் துப்புரவாக்கப்பெறும். இலையில்விட்ட மிச்சிலைப் பெற்றோரும் மனைவியரும் இரப்போரும் தவிரப் பிறர் உண்ணார். சில உணவு வகையால் ஏற்படும் வாய் நாற்றத்தைப் போக்குதற்கு, நறுமணச் சரக்கை வாயிலிடுதல், வெற்றிலை தின்னுதல், மார்பிற் சந்தனம் பூசுதல் முதலியவற்றைக் கையாள்வர். இவற்றைச் செரிமானத்தின் பொருட்டென்று சொல்வதுமுண்டு.

விடிந்தவுடன் பெண்டிர் முற்றங்களிற் சாணந் தெளித்து வீடு வாசலைப் பெருக்கிக் கோலமிடுவர். செவ்வாயும் வெள்ளியும் தப்பாது வீடு முழுதும் ஆவின் சாணத்தால் மெழுகுவர். ஆண்டிற்கொரு முறையும் திருமணம் நிகழும் போதும், வீடு முழுதும் ஒட்டடை போக்கி வெள்ளையடித்துச் செம்மண் கோலமிடுவது வழக்கம். ஆண்டிற்கொரு முறையென்றது பொங்கற் பண்டிகை. பொங்கற்கு முந்தின நாள், இன்றுபோல் அன்றும் வீட்டிலுள்ள அழுக்குக் கந்தல்களையும் உதவாப் பொருள்களையும் கொளுத்தி விடுவர். அதோடு தங்களைப் பிடித்த பீழை போய்விட்டது என்னுங் கருத்தில், அதைப் போகி என்றனர். போகுதல் போதல். போகியது போகி. அச் சொல்லை வேந்தன் (இந்திரன்) பெயராகக் கொண்டு, அவனை நோக்கிச் செய்யும் விழா என்பது பொருந்தாது. "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்னும் பழமொழி, போகி என்னுஞ் சொற்பொருளை வலியுறுத்தும்.

வாடகை வீடுகளிற் புதுக் குடி புகும்போதும், ஒட்டடை போக்கி வெள்ளையடிக்கப்பெறும்.

வெளிச் சென்று வந்த வீட்டாரும் வெளியாரும், வீட்டிற்குள் புகுமுன் பாதத்தைக் கழுவிவிட வேண்டும் என்பது ஒழுக்க நெறி.

வெப்பமில்லாத நாளிலும் வேளையிலும் முள்ளில்லாத இடத்திலும் கூட, வீட்டை விட்டு வெளிச் செல்லின், அடியில் மண்ணும் மாசும் படாதபடி செருப்பணிந்தே செல்வர் உயர்ந்தோர். செருப்பு வாசற்கு வெளியே அல்லது வாசலண்டைதான் விடப்பெறும். எக் கரணியம் பற்றியும் உள்ளே கொண்டு செல்லப் படுவதில்லை.

பிள்ளை பெற்ற வீட்டிற்கு ஏழு நாளும், மாதவிடாய் வந்தவளுக்குப் பன்னிரு நாளும், இழவு வீட்டிற்குப் பதினைந்து நாளும் தீட்டாம்.

தீட்டுள்ள பெண்டிர் "கலந்தொடா மகளிர்" (புறம். 299) எனப்படுவர்.

### 3. ஊண்

உலகில் முதன் முதல் உணவை நாகரிகமாய்ச் சமைத்துண்டவன் தமிழனே. ஏனைய நாட்டாரெல்லாம், தம் நாட்டில் விளைந்த உணவுப் பொருள்களைப் பச்சையாகவும் சுட்டும் வெறுமையாய் அவித்தும் உண்டுவந்த காலத்தில் உணவைச் சோறும் கறியும் என இரண்டாக வகுத்து, நெல்லரிசியைச் சோறாகச் சமைத்தும், கறி அல்லது குழம்பு வகைகளை, சுவையூட்டுவனவும் உடம்பை வலுப்படுத்துவனவும் நோய் வராது தடுப்பனவுமான பலவகை மருந்துச் சரக்குகளை உசிலை (மசாலை) யாகச் சேர்த்து ஆக்கியும், உயர்வாக உண்டு வந்த பெருமை தமிழனதாகும்.

காய் வகைகளைக் காம்பு களைந்து சீவ வேண்டுபவற்றைச் சீவிக் கழுவியும்; பித்தமுள்ளவற்றை அவித்திறுத்தும்; மஞ்சள், மிளகு அல்லது மிளகாய் வற்றல், சீரகம், கொத்துமல்லி, தேங்காய் முதலியவற்றை மைபோல் அரைத்துக் கலந்தும்; இஞ்சி, வெங்காயம், வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், கராம்பூ (கருவாப்பூ), கருவாப்பட்டை, ஏலம், சோம்பு முதலியவற்றை வேண்டுமளவு சேர்த்தும்; வெந்தபின் புளி அல்லது எலுமிச்சஞ்சாறு விடவேண்டியவற்றிற்கு விட்டும்; கடுகு, கறிவேப்பிலை முதலியன தூவி ஆவின் நெய்யில் தாளித்தும், முதன் முதற் குழம்பு காய்ச்சப்பெற்றது தமிழகத்திலேயே. தாளிப்பு இலக்கிய வழக்கில் குய் எனப்படும். "குய்யுடை யடிசில்" (புறம். 127).

உலகில் அரிசியுள்ள தவசங்களிற் பலவகையுள்ளன. அவற்றுள் நெல்லரிசிச் சோறுபோல் வேறொன்றும் சுவையாய்க் குழம்பொடு பொருந்துவதில்லை. தமிழகத்திலேயே, காடைக் கண்ணியரிசி, குதிரைவாலியரிசி, சாமையரிசி, தினையரிசி, வரகரிசி என ஐவகை யரிசியுள. அவை நெல்லரிசிக்கீடாகா. கம்பும் சோளமும் கஞ்சியும் கூழுமே சமைத்தற்குதவும். கேழ்வரகால் களியும் கூழும்தான் ஆக்க முடியும். கோதுமை, வாற்கோதுமை போன்ற பிற நாட்டுத் தவசங்கள் (தானியங்கள்), அப்பமும் (ரொட்டியும்) சிற்றுண்டியும்தான் அடவும் சுடவும் ஏற்கும்.

நெல்லரிசியுள்ளும் பலவகை யுள. அவற்றுள் தலை சிறந்தது சம்பா. அதுவும் அறுபது வகைப்பட்டதாம். அவற்றுட் சிறந்தன சீரகச் சம்பாவும் சிறுமணிச் சம்பாவும்.

பச்சரிசி, புழுங்கலரிசி என்னும் இரு வகையுள், தமிழர் விரும்பியது பின்னதே. அது சூட்டைத் தணிப்பதனால் வெப்பநாட்டிற்கேற்றதாகும்; குழம்பின் சுவையையும் மிகுத்துக் காட்டும். அதற்காகவே, அதற்குரிய தனி முயற்சியை மேற்கொண்டனர். அதனால் ஏற்படும் வலுக் குறைவிற்குக் கறி வகைகளாலும் நெய்யாலும் ஈடு செய்யப் பெறும்.

"இருங்கா ழுலக்கை யிரும்புமுகந் தேய்த்த
அவைப்புமாண் அரிசி அமலைவெண் சோறு"
(சிறுபாண். 193—4).

என்பது, தூய வெள்ளையாய் அரிசி தீட்டப்பட்டதைத் தெரிவிக்கும்.

பொதுவாக, காலைச் சிற்றுண்டியும் நண்பகல் மாலைப் பேருண்டியும் ஆக மூவுண்டிகளே பண்டைத் தமிழர் உண்டு வந்தனர்.

காலையுணவும் நண்பகலுணவும், உழவர்க்கும் கூலியாளர்க்கும் பழஞ்சோறும் பழங்கறியும் ஊறுகாயுமாகும். புதுக் கறியாயின் நெருப்பில் வாட்டியதும் துவையலுமாயிருக்கும். இராவுணவே அவருக்குப் புதுச் சமையலாகும்.

**"மென்புலத்து வயலுழவர்**
**வன்புலத்துப் பகடுவிட்டுக்**
**குறுமுயலின் குழைச்சூட்டொடு**
**நெடுவாளைப் பல்லுவியற்**
**பழஞ்சோற்றுப் புகவருந்தி"**

என்பது புறம் (395).

உழவர் மங்கல வினைநாளும் விழா நாளும் விருந்து நாளும் போன்ற சிறப்பு நாளிலன்றி, மூவேளையும் நெல்லரிசிச் சோறுண்பதில்லை. வரகு, சாமை, கம்பு,

சோளம், கேழ்வரகு முதலிய அவ்வக்காலத்து விளைந்த தவசத்தையே அவ்வக்காலத்துப் பகலுணவாய் உண்பர்.

இல்லத்திலும் நிழலிலுமிருந்து வேலை செய்வோ ரெல்லாம், பெரும்பாலும், காலையிற் பழையதும் நண்பகல் மாலையிற் சுடுசோறும், உண்பர். அரசரும் செல்வரும் எல்லா நாளும், பிறரெல்லாம் சிறப்புநாளும், காலையிற் பலகாரமும் பொங்கலும் போன்ற சுடு சிற் றுண்டி வகைகளை உண்பர்.

இருவேளைப் பேருண்டிகளுள், தமிழர்க்குச் சிறந் தது நண்பகலதே. குழம்புச் சோறும் மிளகு நீர்ச் சோறும் மோர் அல்லது தயிர்ச் சோறும் என, முக் கடவையுள்ளது பேருண்டி. அதை அறுசுவையுண்டி யென்பது வழக்கு. முக்கனிகளுள் ஏதேனுமொன்று இனிப்பும், பாகற்காய் அல்லது சுண்டைவற்றல் கசப்பும், காரவடை உறைப்பும், புளிக்கறியும் தயிரும் ஊறுகாயும் புளிப்பும், மாதுளங்காய் அல்லது கச்சல் துவர்ப்பும், உப்பேறி உவர்ப்பும், ஆகும். இத்தகைய உண்டி, தமிழரின் சுவை முதிர்ச்சியையும் தலைசிறந்த நாகரிகத்தையும் மருத்துவ அறிவையும் உடல்நல வுணர்ச்சியையும் ஒருங்கே காட்டும். அறுசுவையுள்ளும் தமிழர்க்குச் சிறந்தவை இனிப்பும் புளிப்பும் ஆகும். இது வெப்ப நாட்டியல்பு.

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்**
**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே."**

என்னும் குறுந்தொகைச் செய்யுளும் (164).

**"வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ**
**ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை"** *(215)*

**"புறவுக்கரு வன்ன புன்புல வரகின்**
**பாற்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்**

குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு
..........................................
அமலைக் கொழுஞ்சோ ருர்ந்த பாணர்க்கு'' (34)

''பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி'' (381)

என்னும் புறப்பாட்டடிகளும் இங்குக் கவனிக்கத் தக்கன. புன்கம் = சோறு. மிதவை = கூழ்.

தமிழர் விருந்துள் தலைசிறந்தது திருமண விருந்து. அதிற் பதினெண்வகைக் கறியும் கன்னலும் (பாயசம்) படைக்கப்பெறும். பதினெண் வகைக் கறிகள்: அவியல் (உவியல்), கடையல், கும்மாயம், கூட்டு (வெந்தாணம்), துவட்டல், புரட்டல், பொரியல், வறுவல், புளிக்கறி, பச்சடி (ஆணம்), அப்பளம், துவையல், ஊறுகாய், வற்றல், உழுந்து வடை, கார வடை, தேங்குழல், முக்கனிகளுள் ஒன்று என்பன.

கும்மாயம் குழைய வெந்த பருப்பு, அல்லது பயறு. வெந்தாணம் (வெந்த ஆணம்) என்பது இன்று வெஞ்சணம் என மருவி வழங்குகின்றது. இதை வடமொழியாளர் கடன்கொண்டு வ்யஞ்சன என்று திரித்தும், வ்ய + அஞ்சன என்று பிரித்தும், உத்திக்குப் பொருந்தாத பொருள் கூறியும், வட சொல்லாகக் காட்டுவர்.

திண்மை நிலைபற்றி நீர், சாறு, தீயல், இளங் குழம்பு, குழம்பு, கூட்டு எனக் குழம்பு பலவகைப்படும். சோறும், சருக்கரைப் பொங்கல் (அக்காரடலை, அக்கார வடிசில்), வெண்பொங்கல், மிளகுப் பொங்கல், நெய்ப் பொங்கல், தேங்காய்ச் சோறு, பாற்பொங்கல், கடும்புச் சோறு, ஊன்சோறு (புலவு), ஊன்றுவையடிசில் எனப் பலவகைப்படும்.

ஊன் சோறு அல்லது புலவு பண்டைக் காலத்தில் தமிழகத்திலேயே தோன்றிப் பின்பு வழக்கற்றது; முகம்மதியர் வந்தபின் அவரிடமிருந்து புதிதாய்க் கற்றுக் கொண்டதன்று.

**"மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்**
**அட்டான் ருனுக் கொழுந்துவை யூன்சோறும்**
**பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி"**

என்றும் (113),

**"புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த**
**மலரா மாலைப் பந்துகண் டன்ன**
**ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்**
**செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை"**

என்றும் (33), வரும் புறப்பாட்டடிகளைக் காண்க.

"அமிழ்தன மரபின் ஊன்றுவை யடிசில்"

என்பது (புறம். 360: 17), புலவின் சிறப்பு வகையாகத் தோன்றுகின்றது.

இறைச்சி வகைகளுள் உடும்பிறைச்சியைத் தலை சிறந்ததாகத் தமிழர் கொண்டமை, "முழுவுடும்பு, முக்காற்காடை, அரைக்கோழி, காலாடு" என்னும் பழமொழியால் தெரிய வருகின்றது.

**"உடும்பிழு தறுத்த ஒடுங்காழ்ப் படலைச்**
**சீறின் முன்றில் கூறுசெய் திடுமார்**
**கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்**
**மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து"**

என்னும் புறப் பாட்டடிகளும் (325: 7-10),

**" நாய்கொண்டால், பார்ப்பாரும் தின்பர் உடும்பு "**

என்னும் பழமொழி நானூற்றடியும் (35), இதை வலி யுறுத்தும்.

சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் கபிலர் கையைப் பிடித்து, "உம் கை மெல்லிதாயிருக்கிறதே! காரணியம் என்ன?" என்று வினவியதற்கு, அவர்,

**"புலவுநாற்றத்த பைந்தடி**
**பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்றுவை**
**கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது**

**பிறிதுதொழி லறியா வாகலின் நன்றும்**
**மெல்லிய பெரும தாமே......**
**..................................**
**செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே.''**

என்று கூறிய விடையால் (புறம். 14:12—19), கடைக் கழகக்காலத்துப் பிராமணனும் ஊனுண்டமை அறியப் படும்.

**''நெய்கனி குறும்பூழ் காய மாக**
**ஆர்பதம் பெறுக தோழி யத்தை**
**பெருங்கல் நாடன் வரைந்தென அவனெதிர்**
நன்றோ மகனே யென்றனன்
நன்றே போலும் என்றுரைத் தோனே.''
(குறுந். 389)

என்பதில், நெய்யிற் பொரித்த குறும்பூழ்க் கறி கூறப் பட்டது.

குறும்பூழ் வேட்டுவன் 214-ஆம் புறப்பாட்டிற் குறிக்கப் பட்டான். குறும்பூழ்=காடை. மனைக்கோழி 395-ஆம் புறப்பாட்டிற் குறிக்கப்பட்டுள்ளது. ஆட்டில் வெள்ளாட்டுக் கடாவையே பண்டைத்தமிழர் சுவை யுள்ளதென விரும்பியுண்டனர்.

''மாடந் தோறும் மைவிடை வீழ்ப்ப'' (புறம். 33).

''மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்''
(ஷ 113).

''நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்'' (ஷ262).

''மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்தி''
(ஷ 365).

''விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப'' (ஷ 366).

''மரந்தோறும் மைவீழ்ப்ப''
(மதுரைக் காஞ்சி, 754).

''மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி''
(பெரும்பாண். 143).

"செங்கண் மழவிடை கெண்டி"
(பெரும்பொருள் விளக்கம்).

மை = காராடு, வெள்ளாடு. விடை = கடா, வெள் ளாட்டுக் கடா.

இக்காலத்தில் மரக்கறி வகையைச் சேர்ந்த மோர்க் குழம்பு, அக்காலத்தில் ஊன்கறி வகையாகவும் இருந் தது.

**"செம்புற் றீயலின் இன்னளைப் புளித்து**

**.................................**

**இரவலர்க் கீயும் வள்ளியோன் நாடே."**

என்று கபிலர் பாரியின் பறம்புநாட்டைப் பற்றிப் பாடி யிருத்தல் (புறம். 119) காண்க. அளை = மோர்.

விடை என்பது முழு வளர்ச்சியடைந்த இள விலங் கின் அல்லது பறவையின் பெயர். விடைத்தல் = பருத் தல், விறைத்தல் முறுக்காயிருத்தல். விலங்கினத்தில் ஆணையும் பறவையினத்தில் இருபாலையும் விடையென் பது மரபு.

விடை = 1. காளை.

"தோடுடைய செவியன் விடையேறி"
(திருஞான. தேவா).

2. எருமைக்கடா.

"மதர்விடையிற் சீறி" (பு. வெ. 7 : 14).

3. ஆட்டுக்கடா.

4. ஆண்மரை.

"மரையான் கதழ்விடை" (மலைபடு. 331).

5. ஆண் வெருகு.

"வெருக்குவிடை யன்ன வெகுள்நோக்கு"
(புறம். 324).

6. ஆண் குதிரை.

7. இளங்கோழி.

கோழிவிடை, சேவல்விடை, விடைக்கோழி, என்பன உலக வழக்கு.

விடை என்பது காளையைக் குறிப்பதால், அதன் பெயரைக் கொண்ட ஓரையையும் (இராசியையும்) குறிக்கும்.

இங்ஙனம் இருவகை வழக்கிலும் தொன்றுதொட்டு வழங்கி வரும் இத்தூய தமிழ்ச் சொல்லை, வடமொழியில் வ்ருஷ என்று வரி பெயர்த்து, அப்பெயர்ப்பையே தென் சொல்லின் மூலமாகக் காட்டுவர் வடமொழியாளர்.

விடை என்பதினின்று திரிந்ததே விடலை என்னும் பெயரும். ஒ. நோ: கடை—கடலை. விடலை = இளங் காளை, இளைஞன், மறவன், பாலைநிலத் தலைவன். இளந் தேங்காயை விடலை என்பர் நாஞ்சில் நாட்டார்.

ஒ. நோ: L. Vitula, Calf.

நெய்யிற் பொரித்த கறியைத் தமிழரெல்லாரும் விரும்பியுண்டனர். வெள்ளரிப் பிஞ்சைக் குறுக்கே யறுத்தால் தோன்றும் விதை போன்ற வெளிறிய நறு நெய்யையே அவர் பயன்படுத்தினர்.

**"அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட**
**காழ்போல் நல்விளர் நறுநெய்"**

என்று பூதப்பாண்டியன் தேவி கூறுதல் (புறம். 246) காண்க.

பொரித்த கறியோடு உண்பதற்குப் புலவரிசிச் சோறுபோல் நீண்ட பருக்கைச் சோற்றையே விரும்பினர். நீண்ட பருக்கை கொக்கின் விரல் போலிருத்தலால், "கொக்குகிர் நிமிரல்" எனப்பட்டது.

**"மண்டைய கண்ட மான்வறைக் கருனை**
**கொக்குகிர் நிமிரல் ஒக்கல் ஆர"** *(புறம். 398:24-5)*

தமிழகத்தில், முதலில், துறவியரே புலாலுணவை நீக்கி வந்தனர். திருவள்ளுவர், 'அருளுடைமை' 'புலான் மறுத்தல்' 'கொல்லாமை' என்னும் மூவதிகாரங்களையும், துறவறவியலில் வைத்திருப்பதும் கண்ணப்ப

நாயனுர் படையலும் இங்குக் கவனிக்கத் தக்கன. சமணம் தமிழ் நாட்டிற்கு வந்த பின்னரே, இல்லறத் தாரும், சிறப்பாகச் சிவநெறியர், புலாலுணவை நீக்கத் தலைப்பட்டனர். அதனுல், மரக்கறியுணவு சைவம் எனப் பட்டது.

மரக்கறி யுணவினராயினும் ஊனுணவினராயி னும், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் என்னும் ஆனைந்தை மிகப் பயன்படுத்தி வந்தனர்.

"நறுநெய்க் கடலை விசைப்ப" (புறம். 120:14).

கறி பொரிக்கக் காய்ச்சிய நெய்யுலையோசைக்கு மதயானையின் பெருமூச்சையும், கொதிக்கின்ற நெய் யில் துள்ளி வேகும் கறியோசைக்கு ஆழ்ந்த நிறை குளத்தில் பெருமழைத் துளிகள் விழும் ஓசையையும் பண்டைப்புலவர் உவமை கூறியிருப்பது மிக மகிழ்ந்து பாராட்டத்தக்கது.

**"மையல் யானை அயாவுயிர்த் தன்ன**
**நெய்யுலை"** (புறம். 261.8-9)

**"நெடுநீர் நிறைகயத்துப்**
**படுமாரித் துளிபோல**
**நெய்துள்ளிய வறை"** (புறம். 386:13)

யானைக்குக் கொடுக்கும் கவளமும் நெய்யில் மிதித் துத் திரட்டப்பட்டதினுல், நெய்ம்மிதி எனப் பெயர் பெற்றது. சமையல் வகைக்கெல்லாம் ஆவின் நெய் யையே அக்காலத்தில் பயன்படுத்தினர். நல்லெண் ணெய் என்னும் எள் நெய் தலைமுழுக்கிற்கு மட்டும் பயன்படுத்தப்பட்டது.

அரசரும் மறவரும் பாணரும் கூத்தரும் பொரு நரும் புலவர் சிலரும் உழவரும உழைப்பாளியரும், குடிப்பு வகைகளுள் கள்ளையே சிறந்ததாகக் கொண் டனர். கள் என்னுஞ் சொல், வெறிநீர், பதநீர் (தெளிவு அல்லது பனஞ்சாறு), மட்டு (சர்பத்து), தேன் என்னும் நால்வகையையுங் குறிக்கும். இந்த நான்கையும் பயன் படுத்தினர் பண்டைத் தமிழர். இவற்றுள் வெறிநீர்

வகையே வள்ளுவரால் 'கள்ளுண்ணுமை' என்னும் அதிகாரத்திற் கண்டிக்கப்பட்டது.

வெறிநீர் இயற்கைக் கள்ளும் செயற்கைக் கள்ளும் என இருவகைத்து. பனங்கள்ளும் தென்னங்கள்ளும் ஈச்சங் கள்ளும் இயற்கை; அரிசிச் சோற்று நீரைப் புளிக்க வைத்து அரிக்கப்பட்ட அரியலும், மேனுடுகளி னின்று புட்டிகளில் வந்த மதுக்கள்ளும் செயற்கை.

"யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்"

(புறம். 56 : 18).

வெப்ப நாடாகிய தமிழகத்தில், காலையிலிருந்து கதிரவன் அடையும் வரை காட்டில் கடுவெயிலில் வருந்தியுழைக்கும் உழவர்க்கு, உழைப்பு நோவைப் போக்கவும் நீர் வேட்கையைத் தணிக்கவும், வெறிப்பும் குளிர்ச்சியும் புளிப்புமான குடிப்பு வேண்டியதாயிருந் தது. அதனால், அவர்க்கென்று தனிக் கள் உண்டாக்கப் பட்டது.

"களமர்க் கரித்த விளையல் வெங்கள்" என்பது (புறம். 212:2) இதையுணர்த்தும்.

கள்ளின் புளிப்பையும் வெறிப்பையும் மிகுக்க, அதைக் கண்ணுடிக் கலங்களிலும் மூங்கிற் குழாய் களிலும் இட்டு மூடிப் பன்னுள் மண்ணிற் புதைத்து வைப்பதும் வழக்கம். அத்தகைய கள்ளின் கடுமைக் குத் தேட்கொட்டும் பாம்புக் கடியும் உவமை கூறப் பட்டுள்ளன.

"நிலம்புதைப் பழுனிய மட்டின் தேறல்"

(புறம். 120).

"தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்"

(புறம். 392:16).

"பாப்புக்கடுப் பன்ன தோப்பி" (அகம். 348:7).

தேறல் = தெளிந்தகள். தோப்பி = நெற்கள்.

"இன்கடுங்கள்" (புறம். 80) என்பதனாலும், "பூக் கமழ் தேறல்" (பொருநர். 157) என்பதனாலும், செயற்

கைக் கள் இனிமையும் மணமும் ஊட்டப் பெற்றிருந் தமை அறியலாம்.

காட்படாத இயற்கைக் கள்ளை உடலுழைப் பாளி கள் வெறி யுண்டாகாவாறு அளவாக உண்பதாற் கேடில்லை யென்பதும் நன்றென்பதும், ஆராய்ச்சி யாளர் கருத்து. வேனிற் காலத்திற்குக் குளிர்ச்சியான பனங்கள்ளையும் மாரிக் காலத்திற்கு வெப்பமான தென்னங் கள்ளையும், இயற்கை வகுத்திருப்பது கவனிக்கத் தக்கது.

## 4. உடை

தமிழகத்திற் பழங்காலத்திலேயே நெசவு தோன்றி விட்டதென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். வயவர் யோவான் மார்சல் (Sir John Marshall) தம் 'மொகொஞ்சோ-தாரோவும் சிந்து நாகரிகமும் Mohenjo-Daro and the Indus Civilization) என்னும் நூலில் கி.மு. 3000 ஆண்டுகட்குமுன் மேனுடுகட்கு இந்தியா வினின்றே துணி ஏற்றுமதியானதென்று கூறியிருக் கின்றார். அக்காலத்திந்தியா தமிழகமே.

பருத்தி தொன்று தொட்டுத் தென்னாட்டில் விளைந்து வருகின்றது மூதாட்டியரும் கைம் பெண் டிரும் பண்டைக் காலத்தில் மேற்கொண்ட தொழில் களுள் பெருவழக்கானது நூல்நூற்றல். அதனால் அவர் பருத்திப் பெண்டிர் எனப்பட்டார்.

> "பருத்திப் பெண்டிர் பனுவ லன்ன" (புறம். 125:1).
> "ஆளில் பெண்டிர் தாளிற் செய்த
> நுணங்குநுண் பனுவல்" (நற். 353).
> "பஞ்சிதன சொலலாப் பனுவல் இழையாகச்
> செஞ்செற் புலவனே சேயிழையா—எஞ்சாத
> கையேவா யாகக் கதிரே மதியாக
> மையிலா நூன்முடியு மாறு" (நன். பாயிரம்).
> பனுவல் = நூல்

நூற்பதற்குப் பஞ்சைச் சுருளாகத் திரட்டி வைப் பதனால், நூல்நூற்றலைக் கொட்டை நூற்றல் என்பது

வழக்கு. நூற்குங் கருவி, சுற்றும் சக்கர முடைமை யால் இருட்டு அல்லது இருட்டை எனப்பட்டது.

இறத்தல் = வளைதல், இறகு = வளைந்த தூவு.

இறவு = கூரையின் சாய்ப்பு, இற—இறப்பு = கூரையின் சாய்ப்பு. இது இறவாணம், இறவாரம் என்றும் சொல்லப்படும். இறவு—இறவுள் = மலைச் சரிவு.

இறை = 1, வீட்டிறப்பு,

"குறியிறைக் குரம்பை" (புறம்.129)

2. பெண்டிரின் வளைந்த முன்கை.

"எல்வளை யிறையூ ரும்மே" (கலித். 7:16).

இறைதல் = வளைதல், வணங்குதல்.

"இணையடி யிறைமின்" (பதினே, ஆளு. திருக் கலம். 48).

இறை—இறைஞ்சு. இறைஞ்சுதல் = வணங்குதல்.

இற—இரு = வளைந்த பெருங் கூனி.

இரு—இருல் = 1. வட்டமான தேன்கூடு.

2. பெருங்கூனி.

இரு—இறவு = 1. பெருங்கூனி.

"கடலிறவின் சூடுதின்றும்" (பட்டினப். 63).

2. தேன்கூடு (ஞானவா.)

இரு—இருட்டு = 1. பெருங்கூனி.

2. தேன்கூடு.

3. நூற்கும் சக்கரம்.

இருட்டு—இருட்டை = நூற்கும் சக்கரம்.

இருட்டு—இருட்டினம் = 1. நூற்கும் சக்கரம்.

2. நீரிறைக்கும் உருளை.

3. ஏறிவிளையாடும் குடையிருட்டினம் அல்லது இருட்டினவூஞ்சல்.

நூற்கும் சக்கரம் கையினுற் சுற்றப்படுவதனுல், அது கையிருட்டு அல்லது கை யிருட்டை, அல்லது கையிருட்டினம் என்று சொல்லப்படும். இருட்டு என்னும் சொல்லே, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலியில் இல்லை. இராட்டு என்னும் வழூஉச் சொல் மட்டும், தேன்கூடு என்னுப் பொருளிற் குறிக்கப் பட்டுளது.

இருட்டு, இருட்டை, இருட்டினம் என்னும் மூவடிவும், இந்தியில் ரஹட் அல்லது ரஹண்ட்டா என்னும் வடிவில் நூற்குங் கருவியைக் குறித்து வழங்குகின்றன. ஆயின், இந்திச் சொல்லே தமிழ்ச் சொற்கு மூலமாகச் சென்னை அகர முதலியிற் குறிக்கப்பட்டுள்ளது.

நூல் என்னுஞ் சொல்லே நுண்ணியது என்னும் வேர்ப் பொருளுடையது. "நுணங்கு நுண் பனுவல்" என்பது மிக நுண்ணிய நூலைக்குறிக்கும்.

அக்காலத்தில், பட்டு, பருத்திப் பஞ்சு, விலங்கு மயிர் ஆகிய மூவகைக் கருவியாலும் ஆடை நெய்து வந்தனர். இது,

"நூலினு மயிரினும் நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறும்டி செறிந்த அறுவை வீதியும்"

என்னும் சிலப்பதிகார அடிகளால் (14:205-7) அறியலாம். "மயிரினும்" என்பதற்கு "எலி மயிரினுலும்" என்று உரை வரைந்துள்ளார் அடியார்க்கு நல்லார்.

மயிர் நிறைந்த ஒருவகை மலையெலி பண்டைத் தமிழ் நாட்டிலிருந்த தென்பதும், அதன் மயிரால் சிறந்த தாவளி (கம்பளம்) நெய்யப்பட்ட தென்பதும்,

**"புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற் பெரியன**
**பவழமே யனையன பன்மயிர்ப் பேரெலி."**
**"செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயி**
**ரந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்."**

என்று சீவகசிந்தாமணி (1898, 2686) கூறுவதால்

அறியப்படும். ஆயினும், எலிமயிரால் மட்டுமன்றி ஆட்டுமயிராலும் ஆடை நெய்யப் பட்டமை.

**"எலிப்பூம் போர்வையொடு மயிர்ப்படம் விரித்து"**

என்னும் பெருங்கதை யடியால் (உஞ்சைக் **47: 179**) அறியலாம்.

பண்டைத் தமிழ் நாட்டில் நெய்யப்பட்ட ஆடை வகைகளுள், "கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க் காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத் தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப் பொத்தி" என **36** வகைகள் அடியார்க்கு நல்லாரால் குறிக்கப் பெற்றுள. இவையல்லாமல், கம்பலம், கலிங் கம், காழகம், சீரை, துகில், தூசு, படம் முதலிய பலவுள.

அறுக்கப்படுவதனுல் அறுவை என்றும், துணிக் கப்படுவதனுல் துணி என்றும், சவண்டிருப்பதனுல் சவளி யென்றும், ஆடை பல பொதுப் பெயர் பெறும். சவளுதல் துவளுதல். மென்காற்றிலும் ஆடுவது (அசைவது) ஆடை.

சவளி என்னும் தமிழ்ச்சொல், த்ஜவளி என்று தெலுங்கிலும் ஜவளி என்று கன்னடத்திலும் எடுப் பொலியுடன் ஒலிக்கப் படுவதாலும், தமிழிலும் அங்ஙனம் இற்றைத் தமிழர் ஒலிப்பதாலும், வட சொல்லென்று தவருகக் கருதப்படுகின்றது. வடமொழி யில் இச்சொல் இல்லை.

**"சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி**
**சளிசகடு சட்டை சவளி—சவிசரடு**
**சந்து சதங்கை சழக்காதி ஈரிடத்தும்**
**வந்தனவாற் சம்முதலும் வை,"**

என்னும் மயிலைநாதர் எடுத்துக் காட்டுச் செய்யுளால்,

சவளி என்பது தூய தென்சொல்லாதல் அறியப் படும்.

அக்காலத்து மெல்லாடை, பாம்புச் சட்டை போன்றும், மூங்கிலின் உட்புற மீந்தோல் போன்றும், புகை விரிந்தாற் போன்றும், நீராவி படர்ந்தாற் போன்றும், இழை யோடியது தெரியாமலும், பூத் தொழிலுடன் நுண்ணிதாய் நெய்யப்பட்டிருந்த தென்று பண்டைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி யன்ன அறுவை" (பொருநர். 82-83)

"பாம்புரி யன்ன வடிவிள காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண் பூங் கலிங்கம்" (புறம். 383:9:11

காம்புசொலித் தன்ன அறுவை" (சிறுபாண். 236)

"புகைவிரிந் தன்ன பொங்குதுகில்"

"ஆவி யன்ன அவிர் நூற்கலிங்கம்" (பெரும்பாண். 469)

"கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண அறுவையர்" (மணி. 28:52-3)

"இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்" (மலைபடு. 561)

"நீலக் கச்சைப் பூவா ராடை" (புறம். 274)

"போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்கம்" (ஷை 393)

"திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ" (ஷை 390)

இக்காலக் காஞ்சிபுரப் பட்டுச் சேலை போன்றே, அக்காலப் பட்டாடையும் முன்றானை யோரத்தில் அழகிய மணிபோன்ற நூன் முடிச்சுக்களை யுடையதா யிருந்தது.

"கொட்டைக் கரைய பட்டுடை நல்கி" (பொருநர். 155)

அக்காலத்தில், உயர்குடி ஆடவர் வேட்டியும் மேலாடையும், உயர் குடிப் பெண்டிர் சேலையும் கச்சும் (இரவுக்கையும்), அணிந்திருந்தனர். தாழ்குடியாடவர் வேட்டியொடு தலை முண்டும், தாழ்குடிப்பெண்டிர்

கச்சின்றிச்சேலை முன்றானையாலமைந்த மார்யாப்பும், கொண்டிருந்தனர். ஊராட்சித் தலைவரும் பெரியோரும் மேலாடையொடு வட்டத் தலைப்பாகையும் அணிந்திருந்தனர்.

அரசர்க்கும் அரசியல் அதிகாரிகட்கும் அரண்மனை அலுவலர்க்குமே, சட்டையணியும் உரிமையிருந்தது. சட்டை உடம்பிற்குப் பை போன்றிருப்பதால், மெய்ப்பை என்றும் பெயர் பெறும்.

**"நுண்வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர**
**மெய்ப்பை புக்கு வியங்குநடைச் செலவிற்**
**கைக்கோற் கொல்லனை"** (சிலப். 16 : 106-8

**ஈசனுங் கற்றுச்சொல்வோர் பின்வர விகலிற் கூடித்**
**தேசுடைச் சட்டை சாத்தி"**

என்னும் பெரும் பற்றப் புலியூர் நம்பி கூற்று பிற்காலத்ததேனும், சட்டை என்னும் சொல் முற்காலத்தே "கஞ்சுக மாக்கள்" என்னும் சிலப்பதிகாரச் சொற்கு "சட்டையிட்ட பிரதானிகள்" என்று அருஞ்சொல்லுரைகாரர் வரைந்திருத்தல் காண்க. பேடிக் கோலத்தாரும் அரசகுலப் பெண்டிரும், வட்டுடை என்னும் ஒருவகைச் சிறப்புடையை, அரையினின்று முழந்தாளளவாக அக்காலத்தணிந்திருந்தனர். (மணி: 3 : 122; பெருங் 3. 4 : 122).

வேடர், அரையினின்று அடித் தொடையளவாக, காழம் என்னும் ஒரு வகை யுடையை அணிந்திருந்தமை "காழமிட்ட குறங்கினன்" என்னும் கம்பர் கூற்றால் (கம்பரா: கங்கைப். 32) தெரியவருகின்றது. அது சல்லடம் போற் குறுகிய அரைக்காற் சட்டை போலும்!

வெயிற் காலத்திலும் வறண்ட இடத்திலும் செல்லும் வெளிப் போக்கரும் வழிப் போக்கரும், இல்லறத்தாராயின் தொடுதோல் என்னும் செருப்பும், துறவியராயின் மிதியடி என்னும் பாதக் குறடும், அணிந்து சென்றனர்.

சட்டையிட்டும் மேனாட்டார்போற் பாதக்கூடு (Boots) அணிந்தும் காட்டுவழியிற் சென்றதாகப்

பெரும்பாணாற்றுப் படையிற் கூறப்படும் வணிகர், வெளிநாட்டார் போல் தெரிகின்றது.

**"அடிபுதை யரணம் எய்திப் படம்புக்கு**

**..........................................**

**உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்"**

(பெரும்பாண் 69—76).

அடிபுதையரணம் = அடியை மறைக்கின்ற பாதக் காப்பு. படம் = சட்டை.

**5. அணி**

பண்டைத் தமிழகத்தில், சிறந்த வகையில் விரும்பிய அளவு அணிகலம் செய்வதற்கேற்ற பொன், வெள்ளி, முத்து, மணி முதலிய கருவிகளும் தேர்ந்த பொற்கொல்லரும், அணிபவரும், இருந்தனர்.

இக்காலத்தும், உலகில் மிகுதியாய்ப் பொன் கிடைக்குமிடம் ஆத்திரேலியாவும் தென்னாப்பிரிக்காவு மாகும். இவை முழுகிப்போன பழந்தமிழகமான குமரிக் கண்டத்தைச் சேர்ந்தவை. ஆதலால், குமரி நாட்டிலும் தமிழர்க்கு ஏராளமாய்ப் பொன் கிடைத்திருக்க வேண்டும்.

குமரிக் கண்டம் முழுகிய பின்பும், கொங்கு நாட்டில் மிகுதியாய்ப் பொன் கிடைத்தது. அது கொங்குப் பொன் எனக் கல்வெட்டிற் சிறப்பாய்க் குறிக்கப் பெற்றுள்ளது. இன்று தங்கச் சுரங்கமுள்ள குவளாலபுரம் (கோலார்) கொங்கு நாட்டைச்சேர்ந்ததே. அந்நாட்டில் தோன்றும் காவிரியாறு, பண்டைநாளிற் பொன் மணலைக் கொழித்ததனால் பொன்னி யெனப் பெற்றது. கொங்கு நாடு பண்டைத் தமிழகத்தின் ஒரு பகுதியாகும்.

மதுரையிலிருந்த வெள்ளியம்பலமும் தில்லையிலிருந்த பொன்னம்பலமும், பண்டைத் தமிழகத்தின் வெள்ளி பொன் வளத்தைக் காட்டும்.

முதற்காலத்தில் ஏராளமாய்ப் பொன் கிடைத்ததனால் பொன்னாலேயே காசடிக்கப்பட்டது. அதனால்,

காசிற்கு மட்டுமன்றி, தாது (உலோக) வகைகட்கும் பொன் என்பது பொதுப் பெயராயிற்று. வெண்பொன் = வெள்ளி, செம்பொன் = செம்பு, கரும்பொன் = இரும்பு. பொன் = தாது (Metal). இதனால், தமிழகத்தில் இருப்புக் காலத்திற்கு முன் பொற்காலம் ஒன்று இருந்ததோ என ஐயம் எழுகின்றது.

கடைக் கழகக் காலப் புலவர் சிலர்க்கு அளிக்கப்பட்ட பொற்பரிசிலே, அக்காலத்துப் பொன்வளத்தைக் காட்டப் போதுமானது.

காப்பியாற்றுக் காப்பியனார், களங் காய்க் கண்ணி நார் முடிச் சேரல் மீது பதிற்றுப்பத்தின் 4-ஆம் பத்தைப் பாடி, நாற்பது நூறாயிரம் பொன்னும் அவன ஆண்டத்திற்பாகமும் பெற்றார். பொன் என்பது பொற்காசு.

காக்கைபாடினியார் நச்செள்ளையார், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் மீது பதிற். 6-ஆம் பத்தைப் பாடி, அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பெற்றார்.

கபிலர், செல்வக்கடுங்கோ வாழியாதன் மீது பதிற். 7-ஆம்பத்தைப் பாடி, நூறாயிரம் பொற்காசும் அவன் மலை மீதேறிக் கண்டு கொடுத்த நாடும் பெற்றார்.

அரிசில் கிழார், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை மீது பதிற். 8-ஆம்பத்தைப் பாடி, ஒன்பது நூறாயிரம் பொற்காசும் ஆட்சியுரிமையை மறுத்து அமைச்சுரிமையும் பெற்றார்.

பெருங்குன்றூர் கிழார், குடக்கோ இளஞ் சேரலிரும்பொறை மீது பதிற். 9-ஆம்பத்தைப் பாடி, முப்பத்தீராயிரம் பொற்காசும் பல்வகைப் பரிசிலும் பெற்றார்.

கடியலூர் உருத்திரங்கண்ணனார், கரிகாற் பெருவளவன் மீது பட்டினப் பாலையைப் பாடி, பதினாறு நூறாயிரம் பொன் பெற்றார்.

பதிற்றுப் பத்தில் முதற்பத்தும் 10-ஆம்பத்தும் இன்றின்மையால், அவற்றைப் பாடிய புலவர் பெற்ற பரிசும் தெரியவில்லை.

மாதவிபோல் ஆடல்பாடல் அரங்கேறிய நாடகக் கணிகையின் மாலை விலை ஆயிரத் தெண் கழஞ்சு பொன்னக மதிக்கப்பட்டிருந்தது.

**"கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய**
**நுண்வினைக் கொல்லர்** *(சிலப். 16 : 105-6)*
**"மத்தக மணியொடு வயிரம் கட்டிய**
**பத்திக் கேவணப் பசும்பொற் குடைச்சூல்**
**சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்**
**பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துடன் நோக்கிக்**
**கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்பு**
**யாப்புற வில்லை யென"** *(ஷை., ஷை. 117-122)*

"பலவுறு கண்ணுள் சிலகோல் அவிர்தொடி"
(கலித். 85:7)

என்னும பகுதிகள் அக்காலத்து அணிகலவினைத்திறத்தைக் காட்டும்.

**"மலைபயந்த மணியும் கடறுபயந்த பொன்னும்**
**கடல்பயந்த கதிர்முத்தமும்"** *(புறம். 377 ; 16–7)*

என்பது தமிழகத்தின் பொன்மணி முத்து வளத்தைக் காட்டும்.

பாண்டி நாட்டைச் சேர்ந்த கீழைக் கடல் முத்து, தொன்று தொட்டு உலகப் புகழ் பெற்றது.

**"விளைந்துமுதிர்ந்த வெண்முத்தின்**
**இலங்குவளை இருஞ்சேரிக்**
**கட்கொண்டிக் குடிப்பாக்கத்து**
**நற்கொற்கையோர் நசைப்பொருந"** (மதுரைக். 135-138)
**"மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும்**
**கொற்கையம் பெருந்துறை முத்தின் அன்ன"** *(அகம். 27:8-9)*

"இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை" (அகம். 130: 9-11)

"வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து (அகம். 201: 3-5)

"இலங்கிரும் பரப்பின் எறிசுறு நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்
ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்
(அகம், 350 : 10-13)

"கான்டொறுங் கலுழ்தலன்றியும் ஈண்டுநீர்
முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை" (நற். 23: 5-6)

"தென்கடல் முத்தும் குணகடல் துகிரும் (பட்டினப். 189).

அணிகலத்திற்குரிய பொன், இயற்கையாகத் தூயதும், புடமிடப் பட்டுத் தூயதாக்கப் பெற்றதும், என இருவகை. இவற்றுள் முன்னது ஓட்டற்ற பொன் எனப்படும்.

"ஓட்டற்ற செம்பொன் போலே" (ஈடு, 1, 10, 9)

"மாற்றறியாத செழும் பசும் பொன்"

என்று இராமலிங்க அடிகள் கூறியதும் இதுவே.

புடமிடப்பட்டது மாற்றுயர்ந்த பொன் எனப் படும். பத்தரை மாற்றுத் தங்கம் சிறந்த தெனக் கூறுவது உலகவழக்கு. தாயுமான அடிகள் இதைப் பத்துமாற்றுத்தங்கம் என்பர்.

"பத்துமாற்றுத் தங்க மாக்கியே பணிகொண்ட" (சின்மயா.7)

அபரஞ்சி என்னும் ஆயிரத்தெட்டு மாற்றுப் பொன்னும் உள்ளதாக நூல்கள் கூறும்,

"ஆயிரத்தெட்டு மாற்றின் அபரஞ்சி" (பச்சபு.தாரகாசுரவ 26).

"அயோக்கியர் அழகு அபரஞ்சிச் சிமிழில் நஞ்சு."

என்றொரு பிற்காலப் பழமொழியும் உளது.

பொன்னின் மாற்றுரைக்குங் கல் கட்டளைக்கல் என்றும், உரைக்கும் கம்பி உரையாணி என்றும், பெயர் பெற்றன.

மாதவி, விரலணி (கான் மோதிரம்), பரியகம் (காற்சவடி), நூபுரம் (சிலம்பு), பாடகம், சதங்கை, அரியகம் (பாத சாலம்), குறங்குசெறி (கவான்செறி), விரிசிகை, கண்டிகை (மாணிக்கவளை), தோள்வளை, சூடகம், கைவளை (பொன்வளை), பரியகம் (பாசித் தாமணி, கைச்சரி), வால்வளை (சங்க வளை, வெள்ளி வளை), பவழவளை, வாளைப் பகுவாய் மோதிரம், மணி மோதிரம், மரகதத்தாள் செறி (மரகதக் கடை செறி), சங்கிலி (மறத் தொடரி), நுண்ஞாண், ஆரம், கயிற்கடை யொழுகிய கோவை (பின்றாலி), இந்திர நீலக்கடிப்பிணை (நீலக்குதம்பை), தெய்வவுத்தி (திருத் தேவி), வலம்புரி, தொய்யகம் (தலைப்பாளை, பூரப் பாளை), புல்லகம் (தென்பல்லியும் வடபல்லியும்) என 27 வகை அணிகள் அணிந்திருந்ததாகச் சிலப்பதி காரக் கடலாடு காதை கூறுகின்றது. இவற்றுள் அடங்காத வேறுசில அணிகலம் அக்காலத்திருந்தன. அவற்றுள் ஒன்று சூடை அல்லது சூடாமணி. பெண்டிர் அரைப் பட்டிகை மட்டும் மேகலை, காஞ்சி: கலாபம், பருமம், விரிசிகை, என ஐவகைப் பட்டிருந்தது.

**"எண்கோவை காஞ்சி எழுகோவை மேகலை**
**பண்கொள் கலாபம் பதினாறு—கண்கொள்**
**பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு**
**விரிசிகை யென்றுணரற் பாற்று."**

என்பது பழஞ் செய்யுள்.

இக்கால அணிகளே ஏறத்தாழ ஐம்பது வகைப் பட்டிருப்பதால், முதன்மையான அணியினையே இளங்கோவடிகள் குறித்திருத்தல் வேண்டும். இக் காலத்து அரைப்பட்டிகை ஒட்டியாணமாகும். இங் ஙனமே சில அணிகள் வடிவும் பெயரும் மாறியுள.

இக்காலத்துப் பாண்டி நாட்டுப் பழ நாகரிக மகளிர் போல், அக்காலத்தில் எல்லாத் தமிழப் பெண்டிரும்

காது வளர்த்திருந்தனர். காது வளர்க்கும் போது அணிவது குதம்பையும், வளர்த்தபின் அணிவது குழையும் கடிப்பிணையுமாகும். குதம்பை இன்று குணுக்கு என வழங்குகின்றது.

"கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்"
(சிலப். 4 : 50)

"வள்ளைத் தாள்போல் வடிகா திவைகாண்
உள்ளூன் வாடிய உணங்கல் போன்றன"
(மணி. 20 : 53-4).

என்பன காண்க.

அக்காலத்தில் ஆடவரும் அணிகலன் அணிவது பெருவழக்கு. வணிகர் காதிற் குண்டலமும் தோளில் (புயத்தில்) கடகமும், மார்பில் மணிக் கண்டிகையும், அணிந்திருந்தனர். பிற வகுப்பார் காதிற் கடுக்கனும், கையிற் காப்பும் அணிந்திருந்தனர். கடுக்கனைப் பின்பற்றியே பிற்காலக் கமலம் (கம்மல்) என்னும் மகளிர் காதணி எழுந்தது. மறவர் தோளிற் கடகமும் காலிற் கழலும் அணிந்திருந்தனர். கழல் பிற்காலத்தில் வெண்டையம் எனப்பட்டது. கை மோதிரம் இரு பாலார்க்கும் பொதுவாம்.

அரசர், பாணனுக்குப் பொற்றாமரையும், அவன் மனைவியாகிய பாடினிக்கு அல்லது விறலிக்குப் பொன்னணிகலமும், பரிசிலாக அளித்து வந்தனர். விறலி விறல் (சத்துவம்) பட ஆடுபவள். விறல் உள்ளக் குறிப்பால் உடம்பில் தோன்றும் வேறுபாடு. அவை கண்ணீர் வார்தல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலியன.

**13** ஆம் நூற்றாண்டில் பாண்டி நாட்டைப் பார்க்க வந்த மார்க்கோ போலோ என்னும் வெனிசு நகர வணிகர், சுந்தரபாண்டியன் தன் கழுத்தில் விலைமதிக்க வொண்ணாத பன்மணி மாலையும், மார்பில் விலையேறப் பெற்ற இருமணியாரமும், தோளில் மூன்று பன்முத்தக் கடிகையும், காலிற் கழலும், கால் விரல்களில் மோதிரமும் அணிந்திருந்ததாகக் கூறியுள்ளார்.

**"மைதீர் பசும்பொன் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினும் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினும் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப படும்."**

என்னும் நாலடிச் செய்யுளால், பண்டை மூவேந்தரின் செருப்பு எத்தகையதாயிருக்கும் என்பதை உய்த்துணரலாம்.

மயிலுக்குத் தோகைபோலப் பெண்டிர்க்குக் கூந்தல் அழகு தருவதால், அக்காலத்துப் பெண்டிர் தம் கூந்தலை நன்றாய்ப் பேணி, குழல், கொண்டை, பனிச்சை, சுருள், முடி என்னும் ஐவகையில் அழகுபெற முடித்து வந்தனர். அவை ஐம்பால் எனப்படும். அவற்றைக் குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என நச்சினார்க்கினியரும்; சுருள், குரல், அளகம், துஞ்சு குழல், கொண்டை எனச் சாமுண்டி தேவநாயகரும்; சிறிது வேறுபடக் கூறுவர். கூந்தலுக்கு மணம் இயற்கை என்னும் அளவிற்கு நறுமணம் ஊட்டுவது ஒருதனிக் கலையாயிருந்தது. "நாறைங் கூந்தல்" என்றார் இளங்கோவடிகளும் (சிலப். 10 : 43).

பெண்டிர் தம் கண்ணிற்கு மையூட்டுவது பெரு வழக்கமாயிருந்தது.

**"எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து."**

என்னும் குறள் (1285) இதைத் தெரிவிக்கும். மையூட்டுவதன் பெருவழக்கினால், உண்கண் என்னுந் தொடரே மையுண்ட கண்ணைக் குறிக்கும்.

**இருநோக் கிவளுண்கண் ணுள்ளது"** (குறள் 1091).

மையூட்டல் கண்ணிற்கு அழகு மட்டுமன்றிக் குளிர்ச்சியும் தருமென்பது, அறிஞர் கருத்து.

இக்காலத்து மேனாட்டுப் பெண்டிர் போல், அக்காலத் தமிழப் பெண்டிரும் தம் உதடுகட்குச் செஞ்சாயம் ஊட்டி வந்தனர். அது அவரழகைச் சிறப்பித்ததனால் பெண்டிரழகை வண்ணிக்கும் இடமெல்லாம்

"இலவிதழ்ச் செவ்வாய்" (சிலப். 14:136) என்றும், "கொவ்வைச் செவ்வாய்" (திருவாச. 6:2) என்றும், "துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" (சீவக. 550) என்றும், பிறவாறும், கூறுவது புலவர் வழக்க மாயிற்று.

இனி, உள்ளங்காற்கும் செந்நிறம் பெறச் செம் பஞ்சுக் குழம்பு ஊட்டி வந்தமை.

"அலத்தக மூட்டிய அடி" (மணி. 6:110) என்பதால் அறியலாம். அலத்தகம் செம்பஞ்சுக் குழம்பு.

மகளிர் மார்பிலும் தோளிலும் காதலர் சந்தனக் குழம்பால் வரையும் ஓவியங்களும், இருபாலாரும் நெற்றியிலும் கையிலும் குத்துவிக்கும் பச்சைக் கோலமும், ஓவிய வுணர்ச்சியை யன்றி நாகரிகத்தைக் காட்டா.

## 6. உறையுள்

உறையுள் என்பது குடியிருக்கும் வீடு.

குறிஞ்சிநில வாணரான குறவர் குன்றவர் இறவுளர் முதலிய வகுப்பாரும், பாலைநில வாணரான மறவர் எயினர் வேடர் முதலிய வகுப்பாரும், இலை வேய்ந்த குடிசைகளிலும் குற்றில்களிலும்; முல்லைநில வாணரான இடையர் கூரை வேய்ந்த சிற்றில்களிலும் மருத நிலச் சிற்றூர் வாணரான உழவர். மண்சுவர்க் கூரை வீடுகளிலும்; வதிந்தாரேனும்; மருதநிலப் பேரூர் வாணர் ஏந்தான (வசதியான) பச்சைச் செங் கற்சுவர்க் கூரை வீடுகளிலும் சுட்ட செங்கற்சுவர்க் காரை வீடுகளிலும் வாழ்ந்துவந்தனர். சுட்ட செங்கல், சுடுமண் என்றும் சுடுமட் பலகை என்றும் சொல்லப் பட்டது. பச்சைச் செங்கல் மட்பலகை யெனப்பட்டது.

"சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பில்"
(பெரும்பாண். 405).

"சுடுமட் பலகைபல கொணர்வித்து"
(பெரிய பு. ஏயர்கோன். 49).

சிறு செங்கல் இட்டிகை எனப்பட்டது.

"கண்செரீஇ இட்டிகை தீற்று பவர்" (பழ. 108).

இட்டிது = சிறிது (குறள். 478). இட்டிமை = சிறுமை (திவா,). இட்டிய = சிறிய (ஐங்குறு. 215).

இட்டிகை என்பது, வடமொழியில் இஷ்டிகா என்று திரிந்து தன் சிறப்புப் பொருளையிழந்து, செங்கல் என்று மட்டும் பொருள்படும்.

சிறியதும் பெரியதும் உயர்ந்ததும் தாழ்ந்ததும் அல்லாது நடு நிகர்த்தான உறையுள், குடி, மனை, இல், வீடு என்னும் சொற்களுள் ஒன்றுற் குறிக்கப்பெறும். இல்லம், வளமனை, மாளிகை, நகர் என்பன, பெருஞ் செல்வர் வாழும் சிறந்த உறையுளைக் குறிக்கும். அரசர் வாழும் மாளிகை அரண் பெற்றிருக்குமாதலால், அரண்மனை யெனப் பெறும்; அரசன் மனை என்னும் பொருளிற் கோயில் என்றும் சொல்லப்பெறும்.

குடி, நகர், மாளிகை என்னும் தூய தமிழ்ச் சொற்கள் வடமொழிச் சென்றும் வழங்குகின்றன. ஆயின், வடமொழியாளர் உண்மையை ஒப்புக்கொள்ளும் நேர்மையரல்லர்.

மேனிலையுள்ள வீடு மாடம் எனப்பட்டது அது உலக வழக்கில் மாடி வீடு எனவும் மெத்தை வீடு எனவும் வழங்கும். இருநிலை முதல் எழுநிலை வரை அக்காலத்து மாடங்கள் கட்டப்பட்டன.

"இன் அகில் ஆவிவிம்மும் எழுநிலைமாடஞ்
சேர்ந்தும்" (சீவக. 2840).

ஒவ்வொரு மாடமும் அல்லது மாளிகையும், சுற்றுச் சுவர், முகமண்டபம், தலைவாசல், இடைகழி, (நடை), முன்கட்டு, உள்முற்றம், பின்கட்டு, கூடம், அடுக்களை (சமையலறை), புழைக்கடை (கொல்லைப் புறம்), மணைக்கிணறு, குளிப்பறை, சலக்கப்புரை (கக்கூசு), சாலகம் அல்லது அங்கணம் என்னும் பகுதிகளையுடையதாயிருந்தது. மேனிலையில் நிலாமுற்றமிருந்தது.

**"வகைபெற எழுந்து வானம் மூழ்கிச்**
**சில்காற் றிசைக்கும் பல்புழை நல்இல்"**

என்னும் மதுரைக் காஞ்சி அடிகட்கு (357-8).

"மண்டபம் கூடம் தாய்க்கட்டு அடுக்களை என்றாற் போலும் பெயர்களைப் பெறுதலின், வகைபெற வெழுந் தென்றூர்" என்று நச்சினார்க்கினியர் சிறப்புரை வரைந் திருத்தல் காண்க:

வணங்கு—வாங்கு—வங்கு—அங்கு. ஒ. நோ : வளை—அளை. அங்குதல் = வளைதல், சாய்தல், அங்கு— அங்கணம். ஒ. நோ : சாய்கடை—சாக்கடை.

காற்று வரும்வழி, காலதர், சாளரம், பலகணி என் னும் பெயர்களைப் பெற்றிருந்தது.

காரை வீடுகள் உச்சியில் ஓடு வேய்ந்ததும் மச்சுப் பாவியும் இருவகையா யிருந்தன. ஓடும் இலக்கிய வழக் கில் சுடுமண் எனப்பட்டது.

**"சுடுமண் ஏறா வடுநீங்கு சிறப்பின்**
**முடியரசொடுங்கும் கடிமனை"**

என்பதற்கு (சிலப். 14 : 146-7), 'ஓடு வேயாது பொற் றகடு வேய்ந்த மனை' என்று அருஞ்சொல்லுரைகாரர் ஓர் உரை வரைந்திருப்பது கவனிக்கத்தக்கது. முடி வேந்தரும் விரும்பும் நாடகக் கணிகையர் மனைகளாத லின், பொற்றகடு வேய்ந்ததாகவும் இருந்திருக்கலாம். காஞ்சி நகரிற் பலர் கூடுதற்குரிய பொது அம்பலமும் பொன்னால் வேயப்பட்டிருந்ததாக மணிமேகலை கூறு தல் காண்க.

**"சாலையுங் கூடமும் தமனியப் பொதியிலும்"** *(மணி. 28:66)*
**"மழைதோயும் உயர்மாடத்து"**

என்னும் பட்டினப்பாலை (145) யடியும்,

**"மாடம் அழிந்தக்கால் மற்றும் எடுப்பதோர்**
**கூடம் மரத்திற்குத் துப்பாகும்."**

என்னும் பழமொழிச் செய்யுளும் (71) மாடத்தின் பெருமையை உணர்த்தும்.

**7. ஊர்தியும் போக்குவரத்தும்**

ஊர்தல் ஏறிச் செல்லுதல். ஊர்தி ஏறிச் செல்லுங் கருவி.

நிலவூர்திகள் அணிகம் வண்டி, விலங்கு என மூவகைப்படும்.

அணிகம், சிவிகை, பல்லக்கு, மேனு, சப்பரம் என்பன.

சிவிகை, இருவர் காவிச் செல்லும் கூண்டுப் பல்க்கு. பல்லக்கு எண்மருக்குக் குறையாது தோளில் தாங்கிச் செல்லும்திறந்ததண்டையப் படைப் பல்லக்கு. சப்பரம் உருளியின்றி ஒற்றைத் தட்டுள்ள சப்பை (மொட்டை)த் தேர்.

சிவிகை என்பது சிபிக்கா என்றும், பல்லக்கு என் பது பர்யங்க என்றும், வடமொழியில் திலியும். சப்பரம் இன்று தெய்வப் படிமையைக் கொண்டு செல்லவே பயன்படுத்தப் பெறும்.

வண்டி : சகடம், கூடாரப்பண்டி, கொல்லாப் பண்டி, வையம், பாண்டில், வங்கம், தேர் என்பன. சகடம் பொதுவகையான மாட்டு வண்டி, கூடாரப் பண்டி கூண்டு வண்டி. கொல்லாப் பண்டி சிறந்த காளைகள் பூட்டப் பெற்றதும் பெருமக்கள் ஏறிச் செல் வதுமான நாகரிகக் கூண்டு வண்டி, வையம் இரு குதிரை பூண்டிழுக்கும்தேர் போன்ற வண்டி. பாண்டில் ஈருருளியுள்ள குதிரை வண்டி. வங்கம் பள்ளியோட வண்டி: அது பள்ளி யோடம் போன்றது. தேர் இக் காலத் தேர் போற் சிறியது.

விலங்கு: காளை, குதிரை, கோவேறு கழுதை, யானை, ஒட்டகம் என்பன.

நீரூர்திகள்: புணை, பரிசல், கட்டுமரம், ஓடம், அம்பி, திமில், பஃறி, தோணி. படகு, நீர்மாடம் (பள்ளி யோடம்) நாவாய் (கப்பல்) என்பன. நாவாய், வங்கம், கப்பல்என்பன சிறிது வேறுபட்டவையாயுமிருக்கலாம்.

தமிழ் நாட்டிலும் வட நாடுகளிலுமுள்ள பேரூர் கட்கும் கோ நகர் கட்கும், தடிவழி என்னும் பெருஞ்

சாலைகள் சென்றன. இச்சாலைகள் காடுகளிற் கூடும் கவர்த்த இடங்களில், அவ்வந் நாட்டு வேந்தனின் விற் படைகள், வணிகச் சாத்துக்கட்கு வழிப்பறிக்கும் கள்வராலும் கொள்ளைக்காரராலும் பொருட்சேதமும் ஆட்சேதமும் நேராவாறு இரவும் பகலும் காத்து நின்றன.

"உடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்
... ... ... ... ... ... ... ...
அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின் வியன்காட் டியவின்"

(பெரும்பாண். 76—82)

என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் தொண்டை நாட்டைப் பற்றிக் கூறுதல் காண்க.

நாடு கைப்பற்றற்கும் வாணிகத்திற்கும் அயல் நாடு பார்த்தற்கும், அரசரும் வணிகரும் பொது மக்களும் செல்லக் கூடிய நாவாய் என்னும் பெருங் கலங்கள், கீழ்கடலிலும் மேல்கடலிலும் அடிக்கடி சென்று கொண்டிருந்தன.

"வாணியைந்த இருமுந்நீர்ப்
பேஎநிலைஇய இரும் பவ்வத்துக்
கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடி மிசையிதையெடுத்
தின்னிசை முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
துறைமுற்றிய துளங்கிருக்கைத்
தெண்கடற் குண்டகழிச்
சீர்சான்ற வுயர்நெல்லின்
ஊர்கொண்ட வுயர்கொற்றவ."

என்று மதுரைக் காஞ்சி (75-88), வடிம்பலம்ப நின்ற பாண்டியன் சாலி (சாவக)த் தீவைக் கைப்பற்றியதை, அவன்வழித் தோன்றலான தலையாலங்கானத்துச்செரு வென்றநெடுஞ்செழியன் மீது ஏற்றிக்கூறுதல் காண்க.

> "கலந்தந்த பொற்பரிசம்
> கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
> மலைத்தாரமும் கடற்ருரமும்
> தலைப்பெய்து வருநர்க்கீயும்
> புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
> முழங்குகடல் முழவின் முசிறி யன்ன"
>
> (புறம். 343:5—10)

என்பது வணிகம் பற்றியது.

> "சாதுவன் என்போன் தகவில ஞகி
> ... ... ... ... ... ... ...
> வங்கம் போகும் வணிகர் தம்முடன்
> தங்கா வேட்கையின் தானும் செல்வுழி"

என்பது, (மணி. 16: 4-12) அயல் நாடு காணச் சென்றமை பற்றியது.

## 8, வாழ்க்கை வகை

உலகவாழ்க்கை, இல்லறம் துறவறம் தனி வாழ்க்கை என மூவகைப்படும்.

ஒரு கற்புடைப் பெண்ணை மணந்து இல்லத்தி லிருந்து அறஞ்செய்து வாழும் வாழ்க்கை இல்லற மாகும். உலகப் பற்றை யொழித்து வீடுபேற்று முயற்சியில் ஈடுபடுவது துறவறமாகும். மணஞ்செய் யாது உலகப்பற்ருேடு தனியாயிருப்பது தனிவாழ்க்கை (Celibacy)ஆகும். இவற்றுள் இல்லறத்தையே சிறந்த தாகக் கொண்டனர் தமிழர். இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய் படைத்திருப்பதே, அவர்கூடி வாழ்தற் பொருட்டே. இல்லறத்தாலும் ஒருவர் வீடு பேற்றை அடையமுடியும்.

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின்
புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்" (குறள். 46)

**"அறன்எனப் பட்டதே யில்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று."** *(குறள். 49)*

என்றார் தமிழ் அறநூலாசிரியர் திருவள்ளுவர். இவற்றையே,

**"இல்லற மல்லது நல்லற மன்று"**

எனச் சுருங்கச் சொன்னார் பிற்காலத்து ஔவையார். ஆடவரும் பெண்டிரும் கூடாது வாழ்வது அரிதாயிருப்பதுடன், துறவறத்திற்கும் இல்லறமே இன்றியமையாத துணையாகின்றது.

மேற்கூறிய மூவகை வாழ்க்கையுள், ஒவ்வொன்றும் நல்லதும் தீயதும் என இருதிறப்படும். இல்லறத்தில் ஒரே மனைவியுடன் வாழ்வது நல்லது; பல மனைவியருடன் அல்லது பல பெண்டிரைக் காதலித்து வாழ்வது தீயது. துறவறத்தில் உண்மையாயிருப்பது நல்லது; உள்ளொன்றும் புறம் பொன்றுமாயிருப்பது தீயது; அது கூடாவொழுக்கம் எனப்படும். தனி வாழ்க்கையில் ஒரு பெண்ணையும் காதலியாதிருப்பது நல்லது; மறைவாய்க் காதலித் தொழுகுவது தீயது. இவற்றுள் நல்லவற்றையே தமிழ மேலோர் போற்றினர்.

உலகவாழ்க்கைக்கு இன்றியமையாத் துணையாயிருப்பதால் மனைவிக்கு வாழ்க்கைத் துணைவி என்று பெயர்.

### இல்லறம்

மணப் பருவம் வந்த பின்பே, பலவகையிலும் ஒத்தஓர் இளைஞனும் இளைஞையும், தாமாகக் கூடியோ தம் பெற்றோரால் கூட்டப்பட்டோ, கணவனும் மனைவியுமாகி வாழ்வது, ஆரிய வருகைக்கு முற்பட்ட பண்டைத் தமிழ மரபு. மணமானமைக்கு அடையாள

மாக, மனைவியின் கழுத்தில் தாலி என்னும்மங்கலவணி அணியப் பெறும்.

கணவனும் மனைவியும் எங்ஙனம் கூடியிருப்பினும் காதல் அவர்க்குஇன்றியமையாததாகும் காதல்என்பது இறக்கும் வரையும் ஒருவரை யொருவர் இன்றியமையாமை. கணவன் மனைவியரிடைப் பட்ட காதல், காமம் என்னும் சிறப்புப் பெயர் பெறும். அச்சொல் இன்று பெண்ணாசை என்னும் தீயபொருளில் வழங்கி வருகின்றது.

காமத்தை ஒரு தலைக்காமம், இருதலைக்காமம், பொருந்தாக் காமம் என மூவகையாய் வகுத்தனர் முன்னோர். ஓர் ஆடவனும் பெண்டுமாகிய இருவருள், ஒருவர் மட்டும் காதலிப்பது ஒரு தலைக் காமம்; இருவரும் காதலிப்பது இரு தலைக் காமம்; யாரேனும் ஒருவர் நெறி தவறிக் காதலிப்பது பொருந்தாக் காமம். இவற்றுள் இரு தலைக் காமமே சிறந்ததாகவும் நெறிப் பட்டதாகவும் கொள்ளப்பட்டது.பெற்றோரும் மற்றோருமின்றித் தாமாகக் கூடுவதெல்லாம், பெரும்பாலும் இரு தலைக் காமமாகவேயிருக்கும்.

காமத்தை அகப்பொருள் என்றும், ஒருதலைக் காமத்தைக் கைக்கிளை என்றும், இருதலைக் காமத்தை அன்பின் ஐந்திணை என்றும்; பொருந்தாக் காமத்தைப் பெருந்திணை என்றும இலக்கணம் கூறும். அன்பின் ஐந்திணையே நெறிப்பட்டதாகக்கொள்ளப் பட்டதினால் அதையே அகம் என்று சிறப்பித்தும், ஏனையிரண்டையும் அகப்புறம் என்று இழித்தும், கூறுவர் இலக்கணியர்.

கைக்கிளை, குறிப்பு என்றும் மணம் என்றும் இரு வகையாய்ச் சொல்லப்படும். ஒருவன் காமவுணர்ச்சி யில்லாத ஒரு சிறுமியிடம் அல்லது காதலில்லாத ஒரு பெண்ணிடம், சில காதற்குறிப்புச் சொற்களை மட்டும் தானே சொல்லியின்புறுதல் கைக் கிளைக் குறிப் பாம். பெற்றோராற் கூட்டப் பெற்ற கணவன் மனைவியருள், யாரேனும் ஒருவர் காதலில்லாமலே இசைந்திருப்பின் அது கைக்கிளை மணமாம். கைக்கிளை ஒரு பக்கக் காதல். கை பக்கம். கிளை காதல்.

ஒரு பெண்ணை மணவுறவு முறை தப்பியோ, வலிந்தோ, ஏமாற்றியோ, தூக்க நிலையிலோ, நோய் நிலையிலோ, இறந்த பின்போ பூப்பு நின்ற பின்போ கூடுவதும், தன்பாலொடும் விலங்கொடும் கூடுவதும், பெருந்திணையாம். இது இங்ஙனம் பலவகையாய்ப் பெருகியிருப்பதாற் பெருந்திணை யெனப்பட்டது. தமிழுக்குச் சிறப்பான பொருளிலக்கணம் ஆரிய வருகைக்கு எண்ணாயிரம் ஆண்டுகட்கு முன்பே அமைந்து விட்டதனால், ஆரிய வொழுக்க நூல்களிற் சொல்லப்பட்ட எண்வகை மணத்துள் தான் ஒன்றே நால்வகை பெற்றதினால் பெருந்திணை யெனப்பட்ட தென்பது, காலமலை வும் நூன் மலைவுங் கலந்த பெருவழுவாம்.

பெற்றோர் செய்து வைக்கும் மணம், பேச்சு மணமும் அருஞ்செயல் மணமும் என இருதிறப்படும். மணவாளப் பிள்ளை வீட்டார் போய்க் கேட்க, பெண் வீட்டார் இசைந்து பெண் கொடுப்பது பேச்சு மணம்; பெண்ணின் பெற்றோர் குறித்த ஓர் அறவினையோ மறவினையோ செய்து பெண்ணைக் கொள்வது அருஞ்செயல் மணம். பண்டைத் தமிழகத்தில் கொல்லேறு தழுவி அதற்குரிய பெண்ணை மணப்பது; முல்லை நில வழக்கமாயிருந்தது. மணமான அன்றே மணமக்கள் கூடுவர்.

கொடுப்பாரும் அடுப்பாருமின்றிக் காதலர் தாமாகக் கூடும் கூட்டம், மறைவாகத் தொடங்குவதும் வெளிப்படையாய்த் தொடங்குவதும் என இருவகைப் படும். மறைவான கூட்டம் களவு என்றும், வெளிப் படையான கூட்டம் கற்பு என்றும், சொல்லப்பெறும். களவு பெரும்பாலும் இருமாதத்திற்குட்பட்டேயிருக்கும். அது வெளிப்பட்டபின் கற்பாம். கற்பெல்லாம் கரணம் என்னும் தாலிகட்டுச் சடங்கோடும் பந்தலணி, மணமுழா, வாழ்த்து, வரிசை உற்றுருடன் உண்ணும் உண்டாட்டு முதலியவற்றோடும் கூடிய மணவிழா வொடு தொடங்கும். களவுக் காலத்தில் கூட்டம் தடைப்படினும், பெண்ணின் பெற்றோர் பிறர்க்குப் பெண் கொடுக்க இசையினும், காதலன் காதலியைக் கூட்டிக் கொண்டு வேற்றூர் சென்றுவிடும் உடன் போக்கும் உண்டு. அவர் திரும்பி வந்தபின், காதலன்

வீட்டிலேனும் காதலி வீட்டிலேனும் வதுவை என்னும் மணவிழா நிகழும்.

இனி, களவுக்காலத்தில் கூட்டம் தடைப்படுவதால், காதலி தன் காதலனைக் காணப் பெருமல் மனம் வருந்தி மேனி வேறுபடும்போது, பெற்ரோர் வேலன் என்னும் மந்திரக்காரனை வரவழைத்து தம் மகள் நோய்க்குக் கரணியம் (காரணம்) வினவுவதும், அவன் அது முருகனல் நேர்ந்ததென்று கூறி, வெள்ளாட்டுக் கறியும் கள்ளும் விலாப்புடைக்க வுண்டு வெறியாட்டு என்னும் கூத்தை நிகழ்த்தி அந்நோயைப் போக்குவதாக நடிப்பதும் உண்டு. அன்று காதலி நேராகவோ தன் தோழி வாயிலாகவோ, தன் பெற்ரோரிடம் உள்ளதைச் சொல்லி விடுவாள். அது அறத்தொடு நிற்றல் எனப் படும். தன் காதலனன்றி வேறு யார்க்கும் தன்னைப் பேசினும், காதலி அறத்தொடு நிற்பாள்; அதன்பின் காதலனுக்கு மணஞ் செய்து வைக்கப் பெறுவாள். மணமகன் அல்லது அவன் வீட்டார் மணமகளுக்குப் பரிசம் கொடுப்பர். மணமகன் பரிசம் பெறும் அநாகரிக மானங்கெட்ட ஆரிய இழிவழக்கு அக்காலத் தில்லை.

தமிழப் பெண்டிர் கற்பிற் சிறந்தவராதலின், ஒருவரை மணந்தபின் அல்லது காதலித்த பின் வேருெருவரையும் கனவிலும் கருதுவதில்லை; வேறு எவரையேனும் மணக்க நேரின், உடனே உயிரை விட்டு விடுவர்.

காதலர் கூடும் கூட்டம், உடம்பாற் கூடுவதும் உள்ளத்தாற் கூடுவதும் என இருவகை. இவற்றுள் முன்னது மெய்யுறு புணர்ச்சி என்றும், பின்னது உள்ளப்புணர்ச்சி என்றும், சொல்லப்பெறும். கற்புடைப் பெண்டிர்க்கு இரண்டும் ஒன்றே. இதனுலன்ரூ, திலகவதியம்மையார் தமக்குப் பேசப் பெற்றிருந்த கலிப்பகையார் போர்க் களத்திற் பட்டபின் இறக்கத் துணிந்ததும், அதன் பின் தம் ஒற்றைக் கொரு தம்பியார் திருநாவுக்கரசரின் பொருட்டு உயிர் தாங்கியதும், இறுதி வரை மணவாதிருந்ததும், என்க.

(ஆரியர் வருமுன்) கரணம் என்னும் தாலி கட்டுச் சடங்கை, ஊர்த் தலைவன், குடி முதியோன், மங்கல முது பெண்டிர், குலப் பூசாரி முதலியோர் நடத்தி வைத்தனர்.

பண்டையரசரும் பெருஞ் செல்வரும் பெரும்பாலும் சிற்றின்பவுணர்ச்சி சிறந்து, பல தேவியரையும் காமக் கிழத்தி இற்பரத்தை காதற்பரத்தை முதலியோரையும் கொண்டிருந்தமையால், ஓருயிரும் ஈருடலுமான இரு தலைக் காம இன்ப வாழ்க்கை, பூதப்பாண்டியனும் அவன் தேவியும் போன்ற ஒரு சில அரசக் குடும்பங் களிடையும், உழவரும் இடையரும் போன்ற பொது மக்களிடையும். புல மக்களிடையும்தான் பெரும்பாலும் இருந்து வந்தது.

''மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்
தென்னொடு பொருதும் என்ப அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொ
டவர்ப்புறங் காணே னாயின் சிறந்த
பேரம ருண்கண் இவளினும் பிரிக''

என்று பூதப்பாண்டியன் தன் பகைவரை நோக்கிக் கூறிய வஞ்சினமும் (புறம். 71), அவன் இறந்தபின் உடன்கட்டையேறிய அவன் தேவி யாடிய,

''பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
... ... ... ... ... ... ...
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயும் ஓரற்றே.''

என்னும் பாட்டும் (புறம். 246), அறிஞர் உள்ளத்தை என்றும் உருக்குந் தன்மைய.

ஒருவனுடைய மனைவி உரிமைப் பெண்ணாயினும் பெருமைப் பெண்ணாயினும் உழுவற் பெண்ணாயினும், மூவகையும் ஊழின் பயனே என்று முன்னோர் கருதினர். "தாரமும் குருவும் தலைவிதி" (ஆசிரியனும் மனைவியும் அமைவது ஊழ்முறை) என்னும் பிற்காலப் பழமொழியும், எங்கே முடிபோட்டு வைத்திருக்கிறதோ அங்கேதான் முடியும் என்று கூறும் வழக்கச் சொல்லும், "Marriages are made in heaven", "Marriage and hanging go by destiny" என்னும் ஆங்கிலப் பழமொழிகளும் இங்குக் கருதத்தக்கன. வாழ்க்கைத் துணையாகிய மனைவிக்கு ஊழ்த்துணை என்றும் பெயர்.

அம்மான் மகளும் அக்கை மகளும்போல், மணக்கக்கூடிய உறவுமுறைப் பெண் உரிமைப் பெண்; உறவு முறையின்றிச் செல்வக் குடும்பத்தினின்று எடுக்கும் பெண் பெருமைப் பெண்; இரண்டுமன்றி ஒருவன் தானே கண்டவுடன் காதலித்து மணக்கும் பெண் உழுவற் பெண். பல பிறப்பாகத் தொடர்ந்து மனைவியாய் வருபவள் உழுவற் பெண் என்பது, பிறவித் தொடர் நம்பிக்கையாளர் கருத்து. உழுவலன்பைப் "பயிலியது கெழீஇய நட்பு" என்பர் இறையனார் (குறுங். 2). ஊழால் ஏற்பட்ட ஆவலை உழுவல் என்றனர். இதைத் தெய்வப்புணர்ச்சி யென்றும், இயற்கைப் புணர்ச்சி யென்றும், நூல்கள் கூறும்.

> "இவன்இவன் ஐம்பால் பற்றவும் இவள்இவன்
> புன்றலை யோரி வாங்குநள் பரியவும்
> காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிரா
> தேதில் சிறுசெரு வுறுப மன்னோ
> நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
> துணைமலர்ப் பிணையல் அன்னஇவர்
> மணமகிழ் இயற்கை காட்டி யோயே."

என்பது (குறுங். 229), உரிமைப் பெண்ணை ஊழ் இணைத்து வைத்ததாகக் கூறியது.

> "செங்கோல் வேந்தன் உழவ ளாகி
> இராமழை பெய்த ஈர வீரத்துள்
> பனை நுகங் கொண்டு யானையோர் பூட்டி

**வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும்**
**வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே**
**செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து**
**கன்றுகாத்துக் குன்றில் உணக்கி**
**ஊடுபதர் போக்கிமுன் உதவினோர்க் குதவிக்**
**காடுகழி யிந்தனம் பாடுபார்த் தெடுத்துக்**
**குப்பைக் கீரை யுப்பிலி வெந்ததைச்**
**சோறது கொண்டு பீற லடைத்தே**
**இரவல் தாலம் பரிவுடன் வாங்கி**
**ஒன்றுவிட் டொருநாள் தின்று கிடப்பினும்**
**நன்றே தோழிநம் கணவன் வாழ்வே.''**

என்பது, பெருமைப் பெண் தன் கணவனொடு தான் வாழும் இன்ப வாழ்க்கையை எடுத்துக் கூறியது.

**''வளைபயில் கீழ்கடல் நின்றிட மேல்கடல் வான்நுகத்தின்**
**துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல லோன்கயிலைக்**
**கிளைவயின் நீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த**
**விளைவையல் லால்விய வேன்நய வேன்தெய்வம் மிக்கனவே.''**

என்னும் திருக்கோவைச் செய்யுள் (6), உழுவற் பெண்ணைக் கூட்டி வைத்த தெய்வத்தைக் காதலன் பாராட்டியது.

**''யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே.''**

என்பது (குறுந். 40), காதலன் தன் உழுவற் பெண்ணை நோக்கிக் கூறியது. மூவகைப் பெண்களுள்ளும் உழுவற் பெண்ணை மணப்பதே குலமத நிலச்சார்பு கடந்ததாகலின், தெய்வத்தால் நேர்ந்ததாக விதந்து கூறப்பெறும்.

காதலன் களவுக் காலத்தில் தன் காதலியை நோக்கி, உலக முழுவதையும் பெற்றாலும் நான் உன்னைக் கைவிடேன் என்று (குறுந். 300) உறுதி கூறிய

தற்கு ஏற்ப, கற்புக் காலத்தில், நீ தொட்டது நஞ்சாயிருந்தாலும் எனக்குத் தேவர் அமுதமாகும். (தொல், கற்பியல், 5) என்றும், நீ எனக்கு வேப்பங்காயைத் தந்தாலும் அது தீஞ்சுவைக் கற்கண்டு போல் இனிக்கும் (குறுங். 166) என்றும், உன் கூந்தலைப்போல் நறுமணமுள்ள மலரை நான் உலகில் எங்குங் கண்டதில்லை யென்றும், (குறுங். 2) பலபடப் பாராட்டி அவளை மேன்மேலும் ஊக்கி இன்புறுத்துவது வழக்கம்.

காதல் மனைவியும், தன் கணவனைத் தெய்வம் போற் பேணி, அவன் இட்ட சூளை (ஆணையை) நிறைவேற்றுவிடத்து அதனால் அவனுக்குத் தீங்கு நேராதவாறு தெய்வத்தை வேண்டிக் கொள்வதும், அவன் சூள் தப்பவில்லை யென்பதும் (குறுங். 87), தன் தலைவன் குற்றத்தைப் பிறர் எடுத்துரைப்பின் அதை மறுத்து அவனைப் புகழ்வதும், (குறுங் 3), தன் கணவனும் தானும் ஒருங்கே இறக்க வேண்டுமென்று விரும்புவதும் (குறுங். 57), வழக்கம்.

அரசரும் மறவரும் போர் செய்தற்கும், முனிவரும் புலவரும் தூதுபற்றியும், வணிகர் பொருளீட்டற்கும், வேற்றூரும் வேற்று நாடும் செல்ல நேரின், அவர் திரும்பி வரும்வரை அவர் மனைவியர் ஆற்றியிருப்பதும், சுவரிற் கோடிட்டு நாளெண்ணி வருவதும், அவர் குறித்த காலத்தில் வராவிடின் விரைந்து வருமாறு தெய்வத்தை வேண்டுவதும், இயல்பாம்.

கணவனுக்குக் கற்புடை மனைவியும், பெற்றோருக்கு அறிவுடை மக்களும், சிறந்த பேறாகக் கருதப் பட்டனர்.

> **"என்னொடு பொருதும் என்ப அவரை**
> **ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு**
> **அவர்ப்புறங் காணே னாயின் சிறந்த**
> **பேரமர் உண்கண் இவளினும் பிரிக"**

என்று பூதப்பாண்டியன் வஞ்சினங் கூறுதலும், "சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ" என்று (பதிற். 88), குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையும்,

"செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" என்று (புறம். 3), பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும் பெயர் வழுதியும், பாராட்டப் பெறுதலும் காண்க.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்."

என்றார் திருவள்ளுவர் (குறள். 54).

இனி மக்கட் பேறுபற்றி,

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழும் நாளே."

என்று (புறம். 188) பாண்டியன் அறிவுடை நம்பியும்,

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களையீங் கில்லா தவர்."

என்று புகழேந்திப் புலவரும் (நளவெண்பா,
கலிதொடர். 68).

"பெறுமவற்றுள் யாமறிந்த தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

என்று திருவள்ளுவரும் (குறள். 61), கூறியிருத்தல் காண்க. பெண் மக்களால் பல தொல்லைகள் நேர்வதால், ஆண் பிள்ளையையே தமிழர் சிறப்பாக விரும்பினர். "சாண்பிள்ளை ஆண்பிள்ளை மாண்பிள்ளை". "பெண்ணைப் பெற்றவன் பேச்சுக் கேட்பான்" என்பன பழமொழிகள்.

கணவன் தவற்றாலோ மனைவியின் பேதைமையாலோ, சில சமையங்களில் அவரிடைப் பிணக்கு நேர்வதுண்டு. அன்று மனைவி ஊடிக் கணவனொடு பேசா

திருப்பாள். ஊடுதல் சடைவு கொள்ளுதல். அது கணவனால் எளிதாய்த் தீர்க்கப்படும். அதுசற்றுக் கடுமையானால் புலவி எனப்படும். அது குழந்தையைக் கணவன் எடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பதனாலும், வீட்டிற்கு விருந்தினர் வந்திருப்பதாலும், உறவினரும் நண்பரும் தலையிடுவதாலும், தீர்க்கப்படும். புலவி முற்றி விட்டால் துனி எனப்படும். அதை ஒருவராலும் தீர்க்க முடியாது. நீண்ட நாட்சென்று அது தானே தணியும். பழகப் பழகப் பாலும் புளிப்பது போல், கணவன் மனைவியரிடைப்பட்ட காமவின்பம் சற்றுச் சுவை குறையும்போது அதை நிறைத்தற்குப் புலவியும் வேண்டுமென்றும், அது உணவிற்கு உப்பிடுவது போன்றதென்றும், ஊடல் உப்புக் குறைவதும் துனி உப்பு மிகுவதும் போன்றவை யென்றும், உப்பு மிகையாற் சுவை கெடுவதுபோல் துனியால் இன்பங் கெடுமாதலால் அந்நிலையை அடையாதவாறு புலவியைத் தடுத்துவிட வேண்டுமென்றும், திருவள்ளுவர் கூறுவர்.

> **"உப்பமைந் தற்றாற் புலவி அதுசிறிது**
> **மிக்கற்றால் நீள விடல்."** *(குறள். 1302)*

பெண்டிர் எத்துணைக் கல்வி கற்றவராயிருப்பினும், உழத்தியரும் இடைச்சியரும் மறத்தியரும் குறத்தியரும் பண்டமாற்றுப் பெண்டிரும் கூலியாட்டியரும் வேலைக்காரியரும் வறியவருமாயிருந்தாலொழிய, மணமானபின், மூப்படையுமட்டும், கணவரோடும் பெற்றோரோடும் அண்ணன் அக்கைமாரோடும் மாமியாரோடும் பாட்டன் பாட்டிமாரோடுமன்றி, வீட்டை விட்டு வெளியே தனியே செல்லப் பெறார்.

கணவனைப் பேணுதலும் சமையல் செய்தலும் பிள்ளை வளர்த்தலும் கணவனில்லாதபோது வீட்டைக் காத்தலுமே, பெண்டிர்க்கு இயற்கையால் அல்லது இறைவனால் வகுக்கப்பட்ட பணியென்பது, பண்டைத் தமிழர் கருத்து. மணமான பெண் வீட்டிலேயேயிருந்து வேலை செய்வதனாலேயே, அவளுக்கு இல்லாள், இல்லக் கிழத்தி, மனைவி, மனையாள், மனையாட்டி, மனைக் கிழத்தி, வீட்டுக்காரி என்னும் இடம்பற்றிய பெயர்

களும், இல், மனை, குடி என்னும் இடவாகு பெயர்களும் ஏற்பட்டன.

வீட்டிற்கு அல்லது இல்லத்திற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் கணவனே ஈட்ட வேண்டு மென்பதும், அதனால் மனைவியும் இள மக்களும் இன்பமாய் வாழவேண்டுமென்பதும், பண்டையோர் கருத்து.

**"வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்**
**மனையுறை மகளிர்க் காடவர் உயிர்."**

என்னும் குறுந்தொகைச் செய்யுளடிகள் (135 : 1-2), இதனைப் புலப்படுத்தும்.

இக்காலத்திற் காலைமுதல் மாலை வரை ஆடவர் கடுமையாய் உழைத்தும், குடும்பத்திற்குப் போதிய அளவு பொருள் தேடவோ உணவுப் பொருள் கொள்ளவோ முடியவில்லை. இதனாலேயே, பெண்டிர் வெளியேறி ஆசிரியப் பணியும் அரசியலலுவற் பணியும் ஆற்ற வேண்டியதாகின்றது. ஆகவே, இன்று அவர் கடமை இரு மடங்காய்ப் பெருகியுள்ளது. இந்நிலைமை மக்கட் பெருக்கையும் உணவுத் தட்டையும் காட்டு மேனும், இதற்கு அடிப்படைக் கரணியம் அரசியல் தவறே.

பெண்டிரைத் தனியே வீட்டைவிட்டு வெளிப் போக்காமைக்கு இன்னொரு கரணியமுமுண்டு. அவர் பொதுவாக ஆடவரால், சிறப்பாகக் காமுகரால், நுகர்ச்சிப் பொருளாகக் கருதப்படும் நிலைமை இன்னும் மாறவில்லை. ஆடவரை நோக்க, அவர் மென்மையர், வலுவற்றவர். இதனால் அவர்க்கு மெல்லியல், அசையியல், தளரியல், என்னும் பெயர்கள் இலக்கியத்தில் ஏற்பட்டுள்ளன. தீயோரால் அவர்க்கும் அவருறவினர்க்கும் சேதமும் மானக் கேடும் நேராவண்ணமே, அவர் துணையோடன்றி வெளியே அனுப்பப்படுவதில்லை. ஆடவர் நான்முழ வேட்டியுடுக்கும் போது, பெண்டிர் பதினெண் முழச் சேலை யணிவதும், இக் கரணியம் பற்றியே.

ஆகவே, பெண்டிரை வெளி விடாதிருப்பது, அவருடைய நலம் பேணலேயன்றி அவரைச் சிறைப் படுத்தலாகாது. கடைகட்கும் கோயிற்கும் திருவிழா விற்கும் உறவினர் வீட்டு மங்கல அமங்கல நிகழ்ச்சிகட்கும் பிற இடங்கட்கும், துணையொடு போய் வர அவர்க்கு நிரம் பவாய்ப்புண்டு.

பூப்படைந்த கன்னிப் பெண்களையும் தக்க துணை யின்றி வெளியே விடுவதில்லை.

கணவன், பொருளீட்டல் பற்றியோ தீயொழுக்கம் பற்றியோ பிரிந்திருக்கும் போது, கற்புடை மனைவி தன்னை அணி செய்து கொள்வதில்லை; மங்கலவணி தவிர மற்றவற்றை யெல்லாம் கழற்றி விடுவாள்.

**"அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்**
**கொங்கை முன்றிற் குங்குமம் எழுதாள்**
**மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்**
**கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்**
**திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்**
**பவள வாணுதல் திலகம் இழப்பத்**
**தவள வாணகை கோவலன் இழப்ப**
**மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்**
**கையறு நெஞ்சத்துக் கண்ணகி"**

என்று (சிலப். 4 : 47-57), இளங்கோவடிகள் கூறுதல் காண்க.

இனி, அக்காலத்தில், இல்வாழ்க்கைக்குரிய அறங் களையும் செய்வதில்லை.

**"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்**
**துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை."**

என்று (சிலப். 16 : 71-73), கண்ணகி மதுரையில் தன் கணவனை நோக்கிக் கூறுதல் காண்க.

மறுமுகம் பாராத கற்பென்பது கணவன் மனைவி யிருவர்க்கும் பொதுவேனும், பூதப்பாண்டியன் போன்ற ஒரு சிலரே அவ்வறத்தைக் கடைப்பிடித்த ஆடவராவர்; பெண்டிரோ பற்பல்லாயிரவர். காதலிலும் ஆடவர் பெண்டிர்க்கு ஈடாகார். உடன்கட்டை யேறுதலும் உடனுயிர் விடுதலுமே இதற்குப் போதிய சான்றாகும். மறுமணஞ் செய்யாத கைம்மை நிலையும் பெண்டிர் சிறப்பைக் காட்டும்.

புலவர், அரசர், வணிகர், வெள்ளாளர் ஆகிய வகுப்புக்களைச் சேர்ந்த பெண்டிர், கணவன் இறந்த பின், எட்டாம் நாள் இறுதிச் சடங்கில் மங்கலவணியும் பிறவணிகளும் நீக்கப்பெறுவர். அது 'தாலியறுப்பு' எனப்படும். அதன் பின் வெள்ளாடையணிந்து வேறெவரையும் மணவாமல் தம் எஞ்சிய காலத்தைக் கழிப்பர். அவர் உயர்குடிப் பிறந்தவர் எனப் படுவர்.

வீட்டைவிட்டு வெளியேறி உழவும் கைத்தொழிலும் அங்காடி விற்பனையும் கூலி வேலையும் தெருப் பண்டமாற்றும் செய்யும் பிற வகுப்புப் பெண்டிரெல்லாம், கணவன் இறந்தபின் தாலியறுப்பினும் மறுமணம் செய்து கொள்வர். அது 'அறுத்துக் கட்டுதல்' எனப்படும். இனி, சில வகுப்புப்பெண்டிர், கணவன் உயிரோடிருக்கும் போதே தீர்வை என்னும் கட்டணத்தைக் கொடுத்துத் தீர்த்துவிட்டு வேறொருவனை மணந்து கொள்வதும் உண்டு. அது, 'தீர்த்துக் கட்டுதல்' எனப்படும். அது எத்தனை முறையும் நிகழும்.

அரசர் போர்க்களத்தில் தோற்றுத் தற்கொலை செய்து கொண்டாலும், பகைவராற் கொல்லப் பட்டாலும், அவர் தேவியரும் மகளிரும் பகையரசர்க்கு அடிமையாகாதவாறு தீக்குளித்து இறப்பது முண்டு.

கணவன் உயிரோடிருக்கும் வரை அவனுக்கு உண்மையான மனைவியாயிருந்து, அவன் இறந்தபின் வேறொருவனை மணப்பதும், கணவன் இறந்தபின் மறு மணம் செய்யாதிருப்பதும், கற்பின் பாற்படுமேனும், அவற்றைத் தமிழகம் கற்பெனக் கொள்ளவில்லை.

தமிழகக் கற்பு உலகத்திலேயே தலைசிறந்ததாகும். அது பண்பாட்டுப் பகுதியிற் கூறப்படும். இங்குக் கூறியவையெல்லாம் நாகரிகக் கூறுகளே.

குடும்பத் தலைவன் இறந்தபின், ஈமக் கடனும் இறுதிச் சடங்கும் அவன் புதல்வரால், புதல்வன் இல்லாவிட்டால் அவன் உடைமைக்கு உரிமை பூணும் உறவினரால், நடத்தப்பெறும். ஈமம் என்பது சுடலை.

பிணத்தைப் புதைப்பதே தமிழர் வழக்கம். எரிப்பது ஆரிய வழக்கமே. ஆரியர்குலப் பிரிவினையால் பிராமணர்க்கு ஒப்புயர்வற்ற தலைமை ஏற்பட்ட பின், தமிழரும் அவர் பழக்க வழக்கங்களைப் பின்பற்றலாயினர். மக்கட் பெருக்கமும் நிலத்தட்டும் ஏற்பட்டுள்ள இக்காலத்தில், எரிப்பது பொருளாட்சி நூற்படி சிறந்ததாகத் தோன்றும்.

பெண் மக்கள், திருமணத்தின் போது அணிகலமும் வெண்கல பித்தளை செப்பேனங்களும் பெறுவதனாலும், பிற்காலத்திற் பெற்றோரை ஆண் மக்கள்போல் உணவளித்துக் காக்கும் உரிமையின்மையாலும், பெற்றோர் உடைமைக்கு உரிமையுள்ளவராகார்.

## துறவறம்

பட்டினத்துப் பிள்ளையார் போல் உலக வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்தோ, தாயுமானவர் போல் குருவினால் அறிவுணர்த்தப் பெற்றோ, சிவப் பிரகாசர் போல் இயல்பாகவே இல்லறத்தில் வெறுப்புக் கொண்டோ, இராமலிங்க அடிகள் போல் இளமையிலேயே கடந்த அறிவடைந்தோ, இளங்கோவடிகள் போல் உடன் பிறந்தார்க்குக் கேடுவராது தடுத்தற் பொருட்டோ, கோவல கண்ணகியர் தந்தையரும் மாதவி மணிமேகலையரும் போல் கண்ணன்ன உறவினர் நெடும் பிரிவைத் தாங்க முடியாமலோ, துறவு பூணுவது தொன்று தொட்ட வழக்கமாகும்.

குடும்பச் சண்டையாற் சடைவு கொண்டும், குடும்பப் பொறுப்பை நீக்கிக் கொள்ளவும், துறவு

பூணுவதுமுண்டு. இவற்றுள் முன்னது சிறப்புடையதன்று; பின்னது பெருங்குற்றமாகும்.

ஆண்டி, பண்டாரம், அடிகள், முனிவன், சித்தன் எனத் துறவியர் பலவகையர். ஆண்டி இரப்போன்; பண்டாரம் அறிவு நூல்களை நிரம்பக்கற்ற பண்டிதன்; அடிகள் உள்ளத் தூய்மையும் ஆவிக்குரிய (Spiritual) செய்திகளிற் பட்டறிவும் வாய்ந்தவர், பட்டினத்தாரும் தாயுமானவரும் இராமலிங்கரும் போல். இம்மூவரும் நாட்டிலிருப்பவர். முனிவரும் சித்தரும் மலையிலிருப்பவர்.

முனிவர் அல்லது முனைவர் உலகப்பற்றை முற்றும் வெறுத்தவர். முனிதல் வெறுத்தல். முனைதல் வெறுத்தல்.

## ஐயன் என்னும் சொல் விளக்கம்

அள் = செறிவு. அள்ளல் = நெருக்கம். அள்ளாடுதல் = செறிதல். அள்ளிருள் = செறிந்த இருட்டு. அள்ளுதல் = செறிதல்.

**"சேரே திரட்சி,"** (தொல். 846) என்னும் நெறிமொழிப்படி, செறிவுக்கருத்தினின்று பெருமைக் கருத்துத் தோன்றும்.

எ—டு: மொய்த்தல் = நெருங்குதல். மொய் = நெருக்கம், பெருமை.

ளகர மெய்யீறு யகர மெய்யீறுகத்திரிதல் பெருவழக்கு.

எ-டு: எள் (இளை)—எய், கொள்—கொய், சேழ் (சேள்)—சேய்—சேய்மை, தொள்—தொய், நெள் (நள்)-நெய், பள்-(பய்) - பயம்பு, பொள்-பொய். வெள்-வெய்-வெய்ம்மை-வெம்மை = வேண்டல் (தொல். சொல். 334).

**"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்**
**ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"**

என்னும் தொல்காப்பிய (56) நெறிமொழிப்படி, அய் என்பது ஐயாகும்.

ஒப்பு நோக்க : வள்—(வய்)—வை = கூர்மை.
பொள் — பொய்— (பய்)—பை = உட்டுளையுள்ளது.

இந்நெறி முறைகளின்படி, அள்-(அய்) ஐ என்றாகும். ஐ=பெருமை, பெரியோன், தந்தை, ஆசிரியன், தலைவன், அரசன், கணவன். இப்பொருள்கட்கெல்லாம் அடிப்படை பெரியோன் என்பதே.

இனி **"ஐவியப் பாகும்."** (தொல், 868) என்பதால், ஐ=வியக்கத்தக்க பெருமையுடையோன் என்றுமாம். ஐயள் = வியக்கத்தக்கவள் (ஐங்குறு. 255).

ஒரே சொல் பண்புப் பெயராகவும் பண்பாகு பெயராகவுமிருப்பதை அடிமை, அண்ணல், செம்மல் என்னும் சொற்களாலும அறிக. அடிமை = அடிமைத் தன்மை, அடியான். அண்ணல் = பெருமை, பெரியோன்.

செம்மல் = 1, தலைமை.

**"அருந்தொழில் முடித்த செம்மற் காலை"**
**(தொல். பொருள், 146).**

2: தலைவன்.

**"அறவோன் மகனே மறவோர் செம்மால்!"** **(புறம். 366).**

ஐ—ஐயன் = பெரியோன், தந்தை, அண்ணன், தலைவன், அரசன், ஆசிரியன், முனிவன், அடிகள், இறையடியான், தெய்வம், கடவுள்.

உறவினரல்லாத மூத்தோரையும் உயர்ந்தோரையும் ஐயா என்று விளிப்பதே தொன்றுதொட்ட தமிழ் மரபு. இது ஆரியர் இந்தியாவிற்கு வரு முன்னும் ஆரிய இனமே உலகத்தில் தோன்று முன்னும், பழம் பாண்டி நாடும் தமிழன் பிறந்தகமுமான குமரிக் கண்டத்தில் தோன்றிய வழக்காகும். ஐயா என்பது ஐயன் என்பதன் விளிவேற்றுமை.

காதலும் மதிப்பும் பற்றி, உறவினரும் அல்லாருமான இளையோரையும் ஐயா என்று விளிப்பது மரபு வழுவமைதியாம்.

எ—டு: ஐயா, ஏஐயா—ஏயா, ஏ ஐயோ—ஏயோ, ஓ ஐயா—ஓயா, வாஐயா—வாயா. ஓயா என்பது பெரும்பாலும் இகழ்ச்சியும் சினமும் பற்றிவரும்.

மகனை, 'என் அப்பன் வந்தான்' என்பது போல் 'என் ஐயன் வந்தான்' என்று முதல் வேற்றுமையிலும், ஐயன் என்னும் சொல் மரபு வழுவமைதியாக வரும்.

தாழ்த்தப் பட்டவர் முதல் தலையாயார் வரை, தமிழரெல்லாரும் பெரும்பாலும் தந்தையை ஐயா என்றே தொன்று தொட்டு விளித்து வருகின்றனர்.

இரங்கல், நோதல், வியத்தல் முதலிய குறிப்புப் பற்றிய இடைச் சொல்லாக, ஐயன் என்னும் தந்தை முறைப் பெயரே பல்வேறு விளிவடிவில் தனித்தும் இரட்டியும் வழங்கி வருகின்றது.

எ—டு: ஐய, ஐயா, ஐயே, ஐயோ, ஐயவோ--ஐயகோ; ஐயைய, ஐயையோ.

"தந்தைக்குப் பின் தமையன்" என்னும் நெறி முறைப்படி ஐயன் என்பது அண்ணனையுங் குறிக்கும். எமையன் நுமையன் தமையன் என்று, எம் நும் தம் என்னும் மூவிடம் குறித்த முன்னொட்டுப் பெற்றுவழங்கிய அண்ணன் முறைப் பெயர்களுள், இறுதியது மட்டும் இன்று முன்னொட்டுப் பொருளிழந்து வழங்குகின்றது. தமையன் = தம் அண்ணன், அண்ணன்.

எக்குலத்தாராயினும், ஆசிரியரை ஐயர் என்பது மேலை வடார்க்காட்டு மாவட்டத்தார் வழக்கு.

ஆக்க வழிப்பாற்றல் பற்றி, மக்கள் வகுப்பாருள் சிறந்தாராகக் கருதப் பெறும் முனிவரை, விதந்து ஐயர் என்றல் தமிழ் மரபு. பிங்கலவுரிச் சொற்றொகுதியில், முனிவரைப் பற்றியது ஐயர் தொகுதி என்று பெயர் பெற்றிருத்தல் காண்க.

துறவியருள், காட்டில் வதியும் முனிவரைப் போன்றே, நாட்டில் வதியும் (திருவெண் காட்டடிகளும்

தாயுமான அடிகளும் இராமலிங்க அடிகளும் போன்ற) அடிகளாரும் ஆதனியல் (ஆத்மீக) வளர்ச்சியும் ஆக்க வழிப்பாற்றலும் அருள் வடிவும் பெற்றவராதலின். ஐயர் என்றழைக்கப் பெறுவர்.

> **"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
> **ஐயர் யாத்தனர் கரணம் என்ப."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் (1088) குறிக்கப் பெற்ற ஐயர் என்பார் இராமலிங்க அடிகள் போலும் அருள் வடிவத் தமிழத் துறவியரே.

இனி, இறைவ னடியாரும் பெரியோராதலாலும், நாயனுர் என்றும் தேவர் என்றும் பெயர் பெற்றிருத்தலாலும், துறவியர் போல் இறைவன் பற்றுடைமையாலும், ஐயர் என்னும் பெயருக்குரியர்.

"சார்வலைத் தொடக்கறுக்க ஏகும்ஐயர்" என்று, கண்ணப்ப நாயனுர் புராணத்தில் (70) அந்நாயனுரையும், "ஐயரே! அம்பலவர் அருளாலிப் பொழுதணைந்தோம்" என்று, திருநாளைப் போவார் நாயனுர் புராணத்தில் (30) அந்நாயனுரையும்; "அளவிலா மகிழ்ச்சியினுர் தமைநோக்கி ஐயர்நீர்" என்று, திருஞானசம்பந்த நாயனுர் புராணத்தில் (133) திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுரையும்; உயர்வுப்பன்மை வடிவில் ஐயர் என்று சேக்கிழார் குறித்திருத்தல் காண்க.

மக்களினும் உயர்ந்த வகுப்பார் தேவராதலின், ஐயன் என்னும் சொல் தேவன் என்றும் கடவுள் என்றும் பொருள்படும். தேவன் என்னும் பொருளில் அது சாத்தனையும், கடவுள் என்னும் பொருளில் சிவனையும் குறிக்கும். சாத்தனை ஐயனுர் என்பது மரபு.

இல்லறத்தாருள் ஒருவனுக்கு அரசன், ஆசிரியன், தந்தை, தாய், தமையன் என்றுஐவகைப் பெரியோரிருப்பதால், அவர் ஐங்குரவர் என்றும்; அவருட் சிறந்த பெற்ருேரிருவரும் இருமுதுகுரவர் என்றும்; அழைக்கப் பெறுவர். குரவன் பெரியோன்.

தந்தையைக் குறிக்கும் ஆயான், ஆஞான்என்னும் முறைப் பெயர்களும், ஐயன் என்பதன் திரிபாகவே தோன்றுகின்றன. ஆயான் = தந்தை, அண்ணன். ஆயான்—ஆஞான் = தந்தை. ஒ. நோ: வலையன்—வலைஞன்.

ஐயன் என்னும் சொல், மாகதி என்னும் பிராகிருதச் சிதைவான பாளிமொழியில் அய்ய என்று திரியும்.

ஐ என்னும் தந்தை முறைப் பெயரினின்றே ஆய் என்னும் தாய் முறைப் பெயர் திரியும்.

ஐ—ஆய் = அன்னை.
எம் + ஆய் = யாய் (எம் அன்னை)
உம் + ஆய் = மோய்—மொய் (உம் அன்னை)
நம் + ஆய் = (நாய்)—ஞாய் (நம் அன்னை)
தம் + ஆய்—தாய் (தம் அன்னை, அன்னை)

அன்னையைக் குறித்த அவ்வை என்னும் சொற் போன்றே, ஆய் என்னும் சொல்லும் பாட்டியைக் குறிக்கும். இது ஆயாள் என்றும் வழங்கும்.

அம்மை—அவ்வை = அன்னை, பாட்டி.

அப்பாய் (அப்பனைப் பெற்ற பாட்டி), அம்மாய் (அம்மையைப் பெற்ற பாட்டி) என்னும் முறைப்பெயர்களில், ஆய் என்பது அன்னையைக் குறித்தல் காண்க.

அன்னையைக் குறிக்கும மாயி, மா என்னும் இந்திச் சொற்கள், மோய் என்னும் தென் சொல்லின் திரிபே. மோய்—மாய்—மாயி, மா. வடநாட்டுப் பழந் திரவிட மாகிய திரிமொழியே பிராகிருதமென்றும், சூரசேனிப் பிராகிருத வழிவந்த சிதைமொழியே இந்தியென்றும், அறிக.

நாய் என்னும் வடிவம் ஒரு விலங்கையும் குறித்தலால், அம் மயக்கை நீக்குதற்கு ஞாய் எனத் திரிந்தது. தலைவி 'எம் ஆய்' என்னும் பொருளில் யாய் என்றும், தோழி 'நம் ஆய்' என்னும் பொருளில் ஞாய்

என்றும், நற்றாயைக் குறித்தலை 7-ஆம் முல்லைக் கலியுட் காண்க.

"யாயும் ஞாயும் யாராகியரோ" என்னும் குறுந் தொகையடியில் (40 : 1) வரும் "ஞாயும்" என்னும் சொல், "மோயும்" என்றிருந்திருத்தல் வேண்டும். இத்தகைய மரபு வழுக்கள் கடைக்கழகக் காலத்திலேயே தோன்றி விட்டன.

தாய் என்னும் பெயர் தன் முன்னொட்டுப் பொரு ளிழந்து வழங்குவது, தமப்பன், தமையன், தமக்கை, தவ்வை, தங்கை முதலிய சொல்வழக்குப் போன்றது. தமப்பன்—தகப்பன். தம் அவ்வை—தவ்வை. அப்பன் பெயர் அண்ணனையும் குறித்தது போல், அம்மை பெயர் அக்கையையும் குறித்தது.

ஐயன் என்பதன் பெண்பால் 'ஐயை'. ஐயை - தலைவி, ஆசிரியை, ஆசிரியன் மனைவி, துறவினி, காளி, சிவை (மலைமகள்). காளியை அம்மையென்றும், அவ்வை (கொற்றவை) யென்றும், கூறுதலை நோக்குக.

தாய், அரசி முதலிய பிற பொருள்களைக் காட்டும் இலக்கியம் இறந்துபட்டது.

பிராமணர் தென்னாட்டிற்கு (தமிழகத்திற்கு) வந்த பின், அவருள் இல்லறத்தார் பார்ப்பாரென்றும், துறவி யர் போன்றவர் ஐயர் அல்லது அந்தணர் என்றும், அழைக்கப்பெற்றனர். நாளடைவில் எல்லாப் பிராமண ரும் அந்தணர் என்பதைக் குலப் பெயராகவும், ஐயர் என்பதைப் பட்டப் பெயராகவும், கொண்டு விட்டனர். 'ஐயர் அவர்கள்' என்று பொருள்படும் 'ஐயரவர்' என்பது, தெலுங்கில் ஐயவாரு என்றும் ஐயகாரு என் றும் திரிந்தது. ஐயகாரு—ஐயங்கார்.

பிராமணரைப் பின்பற்றி, வீர சைவரும் சௌராட் டிரர் என்னும் பட்டுநூற்காரரும் ஐயர் என்பதைக் குலப்பட்டப் பெயராக மேற்கொண்டுள்ளனர்.

சமயக் குரவர் என்னும் பொருளில், கிறித்தவக் குருமாரும் ஐயர் என அழைக்கப்பெற்றனர்.

இங்ஙனம் ஐயன், ஐயை என்னும் சொற்கள், குமரி நாட்டுக் காலத்தினின்றே ஐம்பதினாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்திருக்கும் தூய தென் சொல்லாயிருப்பவும், அவற்றை முறையே ஆர்ய, ஆர்யா என்னும் (ஆரிய இனத்தைக் குறிக்கும்) இருபாற் பெயரினின்று தோன்றியிருப்பதாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலியிற் குறித்திருப்பது, பிராமணரின் குறும்புத் தனத்தையும், தலைமைப் பதவி தாங்கும் தமிழ்ப் பேராசிரியரின் அறியாமையையும் அடிமைத் தனத்தையும், எத்துணைத் தெளிவாகக் காட்டுகின்றது!

முனிவரான ஐயர் அந்தணர் என்றும் பெயர் பெறுவர்; பெரும்பாலும் ஆடையின்றியிருப்பர்.

அந்தணர் என்பது, எல்லாவுயிர்களிடத்தும் அழகிய குளிர்ந்த அருளையுடையவராய் முற்றத் துறந்த முனிவரைக் குறிக்கும் சொல்; ஒரு குலத்திற்கோ ஓர் ஆரிய வகுப்பிற்கோ உரிய பெயரன்று.

**"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்."** *(குறள். 30)*

என்று திருவள்ளுவர் 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரத்திற் கூறுதல் காண்க. நீத்தார்—துறந்தோர்.

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்" (கலித். 38) என்பது சிவனைக் குறித்தது.

**"நூலே கரகம் முக்கோல் மணையே**
**ஆயுங் காலை அந்தணர்க் குரிய."** *(71)*

என்று தொல்காப்பிய மரபியலிற் கூறியிருப்பது, தமிழ் மரபிற்கு முற்றும் மாறாகும். இது ஆரியர் தமிழ்நாட்டிற்கு வந்தபின் ஏற்பட்ட கருத்தே.

**"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க**
**லுற்றார்க் குடம்பும் மிகை."**

என்னும் குறளை (345) நோக்கி உண்மை தெளிக. முனிவரிடம் உடம்பன்றி வேறொன்றுமிராது.

பண்டாரம் என்னும் சொல்லும் தென் சொல்லே.

பண்டாரம் களஞ்சியம். பல நூல்களைக் கற்ற பண்டிதன் ஓர் அறிவுக் களஞ்சியம் போலிருப்பதால், உவமையாகு பெயராய்ப் பண்டாரம் எனப்பட்டான்.

"திருக்காளத்தி ஞானக் களஞ்சியமே" என்று இராமலிங்க அடிகள் இறைவனை விளித்தலையும் (அருட்பா, 1. விண்ணப்ப. 255), ஆங்கிலத்திலும் ஒரு பேரறிஞனை 'Repository of curious information' என்று கூறும் வழக்கையும், கூர்ந்து நோக்குக. வண்ணம் பாடுவதிற் சிறந்த பாவலனை வண்ணக் களஞ்சியம் என்று கூறுதலும் காண்க.

பண்டம் பொருள். பண்டம்+ஆரம்=பண்டாரம். ஒ. நோ : வட்டம்+ஆரம்=வட்டாரம். ஆரம் என்பது ஓர் இடப் பொருளீறு.

வடமொழியார், இயற்பொருளில் வரும்போது பண்டாரம் என்னும் சொல்லைப் பாண்டார (bhandara) என்றும், ஆகுபெயர்ப்பொருளில் வரும்போது அச் சொல்லைப் பிண்டார என்றும், வேறுபடுத்தியும் வேர்ப் பொருளின்றியும் காட்டுவர்.

சித்தர் மலையிலிருப்பவராயினும், எங்கும் இயங்குபவர். அவர் அறிவர் என்றும் சொல்லப்படுவர். சித்து அறிவு.

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்."**

என்று தொல்காப்பியம் (புறத். 20) கூறுவது சித்தரைப் பற்றியே.

செத்தல்=கருதுதல், கருதியறிதல், அறிதல்.
செத்து=கருதி (இ. கா. வி. எ.).
"அரவுநீ ருணல் செத்து" (கலித். 45).
செ—செத்து (தொழிற்பெயர்)=கருத்து, அறிவு.

ஒ. நோ: ஒ—ஒத்து = 1. இ. கா. வி. எ.
2. தொழிற்பெயர்.

செத்து—சித்து. ஒ. நோ: செந்துரம்—சிந்துரம். சித்து என்னும் தென் சொல்லும் சித்தி (Siddhi) என்னும் வடசொல்லும் வெவ்வேறாம். சித்து அறிவு; சித்தி கைகூடுதல். சித்தன் ஆற்றல் சித்து எனப்படும். அதைச் சித்தி என்பது தவறு. 'சித்து விளையாடுதல்' என்னும் உலக வழக்கை நோக்குக.

தமிழ் இலக்கண மருத்துவ முதனூல்களை இயற்றியவர் முனிவரும் சித்தருமே.

**"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்."** (தொல். மரபியல், 95).

தமிழ் மருத்துவம் சித்த மருத்துவம் எனப்படும். பொன்னாக்கமும் (இரசவாதமும்) சித்தர் கலையே.

கிறித்துவிற்குப் பிற்பட்ட சித்தருள் பதினெண்மர் பெயர் பெற்றவர். அவர் அறிவுப் பாடல்களைப் பதினெண் சித்தர் ஞானக் கோவையிற் காணலாம்.

சித்தரும் முனிவரும் ஒரோவொரு சமையம் நாட்டிற்கும் வந்து செல்வதாகச் சொல்லப்படுவர்.

ஆசை, செருக்கு, அறிவு மயக்கம் என்னும் மூன்றும் அடியோடு நீங்கப்பெறுவதே, துறவறத்தின் பழுத்த நிலையாம்.

**"காம வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்."**

என்றார் திருவள்ளுவர் (குறள். 360).

துவராடை யணிந்த பின்பும் தன்னைப் பிறப்பில் உயர்ந்தவனாகக் கருதும் ஆரியனுக்கு, இம் மூன்றும், சிறப்பாக நான் என்னும் செருக்கு, நீங்கப் பெறுவது, முடவன் மரமேறிக் கொம்புத் தேனைக் குடிப்பதேயாம்.

தமிழர் இல்லறத்தில் வெற்றி கண்டது போன்றே துறவறத்திலும், அருளுடைமை, புலான் மறுத்தல்,

கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னுசெய்யாமை, கொல்லாமை, அவாவறுத்தல் என்னும் அறுவகை யறங்களையும்; நோன்பு (தவம்), மெய்யுணர்தல் (ஓகம்) என்னும் இருவகை வழிகளையும், கடைப்பிடித்து வெற்றி கண்டனர்.

தமிழத் துறவியருள் தலைசிறந்தவர் சித்தர். அவர் வான்வழி இயங்குதல், கூடுவிட்டுக் கூடு பாய்தல், தோன்றி மறைதல், மண்ணுள் இருத்தல், உண்ணுது வாழ்தல் முதலிய பல ஆற்றல்களை அடைந்தவர். திருமூலர் ஒரு சித்தர். பட்டினத்தாரும் இராமலிங்க அடிகளும், இறுதியில் சித்தநிலை அடைந்ததாக அவர் வரலாறு கூறும்.

நோன்பு (தவம்) என்பது இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் பொதுவாம்.

### 9. சமயவொழுக்கம்

சமயம் என்பது மதம். அது ஒருவகைச் சமைவைக் குறித்தலால் சமயம் எனப்பட்டது. சமைதல் நுகர்ச் சிக்குப் பதமாதல். அரிசி சோருகச் சமைவது உண் பதற்குப் பதமாதல். பெண்பிள்ளை மங்கையாகச் சமை வது மண நுகர்ச்சிக்குப் பதமாதல். ஆதன் (ஆன்மா) இறையடிமையாகச் சமைவது, வீடுபேற்றிற்கு அல்லது இறைவன் திருவடிகளை யடைவற்குப் பதமாதல்.

சமையம் என்பது வேளையைக் குறிக்கும்போதும், ஒரு வினைக்குப் பதமான அல்லது தக்க காலநிலை என்னும் பொருளதே. நல்ல சமையம், தக்க சமையம், ஏற்ற சமையம் என்னும் வழக்குக்களை நோக்குக. பலவகைச் சமைவுகளுள்ளும் ஆதன் இறையடிமை யாகச் சமைவது தலைசிறந்ததாதலால், சமைவு என்னும் வினை, அதனையே சிறப்பாகக் குறிக்கும் ஆயினும், பொருள் மயக்கமில்லாவாறு, சோறு சமைவது சமையல் என்றும், பெண் சமைவது சமைதல் என்றும், நேரம் சமைவது சமையம் என்னும், ஆதன் சமைவது சமயம் என்றும், வேறுபடுத்திச் சொல்லப் பெறும்.

சமையம் என்னும் சொல் அமையம் என்னும் சொல்லின் முதன்மிகை (**Prothesis**). அமைதல் பொருந்துதல் அல்லது தகுதியாதல். நல்லதொன்று வாய்ப்பின், அமைந்து விட்டது என்பர். அமையும் நேரம் அமையம்.

உயிர் முதற்சொற்கள் சொன்முதல் மெய்களுள் ஒன்றும் பலவும் பெற்றுச் சொற்களைப் பிறப்பித்தல், சொல்லாக்க நெறிமுறைமையாம்.

எ - டு: உருள்—சுருள், ஏண்—சேண்.

அமை என்னும் முதனிலையும் அம் என்னும் வேரினின்று திரிந்ததாகும். இதனால், சமயம் என்னும் சொல் தூய தென் சொல்லாதல் தெளிக. அது வட சொல்லென்று வடமொழிச் சொற் களஞ்சியங்களிலும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலியிலும் குறித்திருப்பது கொண்டு மயங்கற்க.

ஆரியர் வருமுன்பே, தமிழர் சமயத் துறையிலும் தலைசிறந்திருந்தனர். ஆயினும், எல்லாரும் அந்நிலையடையவில்லை. எந்த நாகரிக நாட்டிலும், தலையாயார் இடையாயார் கடையாயார் என்னும் முத்திறத்தார் இருக்கவே செய்வர்.

ஆகவே, தமிழர் மதமும், சிறு தெய்வ வணக்கம், பெருந் தெய்வ வழிபாடு, கடவுள் நெறி என முந்நிலைப் பட்டிருந்தது.

**சிறு தெய்வங்கள்**

(1) தென்புலத்தார் (இறந்த முன்னோர்).
(2) நடுகல் தெய்வங்கள்.
(3) பேய்கள் (பேய், பூதம், முனி, சடைமுனி, அணங்கு (மோகினி),சூரரமகளிர் முதலியன).
(4) தீய வுயிரிகள் (பாம்பு, சுறு, முதலை முதலியன).
(5) இடத் தெய்வங்கள் (ஆற்றுத் தெய்வம், மலைத் தெய்வம், காட்டுத் தெய்வம், நகர்த் தெய்வம், நாட்டுத் தெய்வம்).

(6) இயற்கைப் பூதங்கள் (காற்றும் தீயும்).
(7) வானச் சுடர்கள் (கதிரவனும் திங்களும்).
(8) செல்வத் தெய்வம் (திருமகள்).
(9) கல்வித் தெய்வம் (நாமகள் அல்லது சொன் மகள்).
(10) பால்வரை தெய்வம் (ஊழ் வகுப்பது).

**பெருந் தெய்வங்கள்**

இவை ஐந்திணைத் தெய்வங்களாகும்.

குறிஞ்சி—சேயோன்.

முல்லை—மாயோன்.

பாலை—காளி.

மருதம்—வேந்தன்.

நெய்தல்—வாரணன்.

சேயோன் சிவந்தவன். சேந்தன் என்னும் பெயரும் அப்பொருளதே. முருகன், வேலன், குமரன் என்னும் பெயர்களும் இவனுக்குண்டு. சிவன் என்பது சேயோன் என்பதன் உலக வழக்கு வடிவம். இப்பெயர் வடிவு வேறுபாட்டைக் கொண்டு, பிற்காலத்தில் ஆரியர் ஒரே தெய்வத்தை இரண்டாக்கித் தந்தையும் மகனு மாகக் கூறி விட்டனர். குமரன் என்பதற்கும் சேய் என்னும் குறுக்கத்திற்கும் மகன் என்று தவருகப் பொருள் கொண்டதே இதற்கு அடிப்படை.

சிவன் என்று ஆரியத் தெய்வம் ஒன்றுமில்லை. சிவ என்னும் சொல், நல்ல அல்லது மங்கல என்னும் பொருளில், உருத்திரனுக்கும் இந்திரனுக்கும் அக்கினிக் கும் பொதுவான அடைமொழியாகவே ஆரிய வேதத் தில் வழங்கிற்று.

புறக்கண் காண முடியாதவற்றையும் நெடுந் தொலைவிலுள்ளவற்றையும் கண்டறியும் ஓர் அறிவுக் கண் போன்ற உறுப்பு, குமரி நாட்டு மக்கள் நெற்றியி லிருந்ததென்றும், அதனாலேயே அவர்தம் இறைவனுக் கும் (சிவனுக்கும்) ஒரு நெற்றிக் கண்ணைப் படைத்துக் கூறினரென்றும், ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

வெள்ளிமலை (கைலை) யிருக்கையும் காளையூர்தியும் சிவனைக் குறிஞ்சி நிலத் தெய்வமாகக் காட்டுவது கவனிக்கத்தக்கது.

வரகுண பாண்டியனின் தலைமையமைச்சரும் பிராமணரும் சிறந்த சிவனடியாரும் வடமொழி தென் மொழி வல்லுநருமாகிய மாணிக்கவாசகர்,

**"பாண்டி நாடே பழம்பதி யாகவும்"**

(திருவாசகம், 2 : 118)

**தென்னா டுடைய சிவனே போற்றி"** (ஷை 4: 164)

என்று பாண்டி நாட்டையே சிவநெறிப் பிறப்பிடமாகக் குறித்தல் காண்க. இனி, சிவபெருமான் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் மதுரையில் அருளிச் செய்ததையும், முத்தொழில் அல்லது ஐந்தொழில் திருநடத்தைத் தில்லையில் ஆற்றுவதையும், எண்மறச் செயல்கள் செய்த இடங்கள் (அட்டவீரட்டம்) தமிழ் நாட்டிலிருப்பதையும், ஊன்றி நோக்குக.

மாயோன் கரியவன். மா கருப்பு. மாய கிருஷ்ணன் என்னும் பெயர்க்கும் இதற்கும் யாதொரு தொடர்பு மில்லை. கண்ணபிரான் பிறக்குமுன்பே, கிருஷ்ண என்னும் சொல் கருப்பு என்னும் பொருளில் இருக்கு வேதத்தில் வழங்கிற்று. கிருஷ்ண பக்ஷ (கரும்பக்கம்), கிருஷ்ண ஸர்ப்ப (கரும்பாம்பு) என்னும் பெயர்களை நோக்குக. கிருஷ்ண என்னும் சொற்கு வேத மொழியில் வேரில்லை; தமிழிலேயே உள்ளது.

கள்—கரு—கருள் = 1. கருமை.

"கருள்தரு கண்டத்து......கைலையார்"

(தேவா. 337, 4)

2. இருள் (பிங்.).

3. குற்றம்.

"கருள்தீர்வலியால்" (சேதுபு. முத்தீர்த். 5).

கருள் = க்ருஷ். ளகர மெய்யீறு வேதமொழியில் ஷகர மெய்யீறாகத் திரியும்.

எ-டு: சுள்—சுஷ் (to dry) உள்—உஷ், (to burn).

மாயோன், மால், விண்டு என்னும் பெயர்கள் ஒரு பொருட்சொற்கள்.

மால் = கருமை, முகில், திருமால்.

விண்டு = முகில், வானம், திருமால்.

விண் = வானம், முகில், மேலுலகம்.

விண்—விண்டு.

ஆரிய வேதத்தில் விஷ்ணு என்னும் பெயர் கதிரவனைக் குறித்தது. காலை எழுச்சியையும் நண்பகற் செலவையும் எற்பாட்டு (சாயுங்கால) வீழ்ச்சியையுமே மூவடியால் (மூன்று எட்டால்) உலக முழுவதையும் விஷ்ணு (கதிரவன்) அளப்பதாக முதலிற் கொண்டனர் வேத ஆரியர்.

குறிஞ்சி நிலத்தார் தம் தெய்வத்தை மலையில் தோன்றும் நெருப்பின் கூறுகவும், முல்லை நிலத்தார் தம் தெய்வத்தை வானத்தினின்று பொழியும் முகிலின் கூறுகவும், கொண்டனர். இதனாலேயே, சிவனுக்குத் தீவண்ணன், அந்திவண்ணன், மாணிக்கக் கூத்தன் என்னும் பெயர்களும்; திருமாலுக்குக் கார் வண்ணன், மணிவண்ணன் என்னும் பெயர்களும்; தோன்றின.

காளி கருப்பி. கள்—கள்வன் = கரியவன். கள்—காள்—காழ் = கருமை. காள்—காளம் = கருமை. காள்—காளி. காளி கூளிகட்குத் தலைவி. கூளி பேய். பேய் கருப்பென்றும் இருள் என்றும் பெயர் பெறும். கருப்பி, கருப்பாய் என்னும் காளியின் பெயர்களை, இன்றும் பெண்டிர்க்கிடுவது பெருவழக்கு. தாய் என்னும் பொருளில் அம்மை (அம்மன்) ஐயை என்றும், இளமை என்னும் பொருளில் கன்னி, குமரி என்றும், வெற்றி தருபவள் என்னும் பொருளில் கொற்றவை (கொற்றவ்வை) என்றும், காளிக்குப் பெயர்கள் வழங்கும். அங்காளம்மை என்பது அழகிய காளியம்மை என்னும் பொருளது.

ஆரியர் வருமுன் வட இந்தியா முழுதும் திரவிடர் பரவியிருந்ததினால், வங்க நாட்டில் காளிக் கோட்டம் ஏற்பட்டது.

வேந்தன் = அரசன். முதற்காலத்தில் அரசனும் தெய்வமாக வணங்கப்பட்டான். அதனால், இறைவன் என்னும் பெயர் அரசனுக்கும் கடவுட்கும், கோயில் என்னும் பெயர் அரண்மனைக்கும் தெய்வக் கோட்டத்திற்கும், பொதுவாயின. வேந்தன் இறந்தபின் வானவர்க்கும் அரசனாகி வானுலகத்தினின்று மழையைப் பொழிவிக்கின்றான் என்று பண்டை மருத நிலமக்கள் கருதியதால், மழைத் தெய்வத்தை வேந்தன் என்னும் பெயரால் வணங்கி வந்தனர்.

ஆரியர் வருமுன்பே, மொழி வேறுபாட்டினால் வேந்தனுக்கு வடநாட்டில் வழங்கி வந்த பெயர் இந்திரன் என்பது. இந்திரன் அரசன். ஆகவே இரண்டும் ஒரு பொருட் சொற்களே. வேத ஆரியர் இந்திர வணக்கத்தை, வடநாட்டுத் திரவிடரைப் பின்பற்றியே மேற்கொண்டிருத்தல் வேண்டும். மேலையாரிய நாடுகளில் இந்திர வணக்கமே யிருந்ததில்லையென்று, மாகசு முல்லர் (Max Muller) கூறியிருப்பது, இங்குக் கவனிக்கத்தக்கது.

கடைக் கழகக் காலம் வரை காவிரிப்பூம்பட்டினத்தில் நடைபெற்று வந்த இந்திர விழாவும், தமிழர் வேந்தன் விழாவே.

வாரணன் = கடல் தெய்வம். வாரணம் கடல். கடலுக்கு ஒரு தெய்வமிருப்பதாகக் கருதி, அதை நெய்தல் நிலமக்கள் வணங்கி வந்தனர்.

முதற்காலத் திரவிடர் வடமேற்காய்ச் சென்று கிரேக்க நாட்டிற் குடியேறியபின், வாரணம் என்னும் சொல் (Ouranos) எனத் திரிந்தது. அப்பெயர்த் தெய்வம் முதலிற் கிரேக்கர்க்குக் கடல் தெய்வமாகவே யிருந்து, பின்பு, வானத் தெய்வமாயிற்று. கிரேக்கத்திற்கு மிக நெருங்கிய மொழியைப் பேசிவந்த கீழையாரியருள் ஒரு பிரிவாரான வேத ஆரியர், கடலையறியாமல் நெடுகவும் நிலவழியாகவே வந்ததினால், மழைத் தெய்வத்தையே வருணு என அழைத்தனர். அவர் இந்தியாவிற்குட் புகுந்து வடநாட்டுத் திரவிடரோடும் தென்னாட்டுத் தமிழரோடும் தொடர்பு கொண்ட பின்னரே, வருணனைக் கடல் தெய்வமாகக் கருதத் தொடங்

கினர். ஆயினும், இன்னும் மழைக்காக வருணனை வேண்டுவதே பிராமணர் வழக்கமாயிருந்து வருகின்றது.

தொல்காப்பியத்தில் "வருணன் மேய பெருமணலுலகமும்" (அகத். 5) என்று, வாரணன் என்னும் பெயரை வடமொழி வடிவிற் குறித்திருப்பது தவறாகும். அது "வாரணன் மேய ஏர்மண லுலகமும்" என்றிருந்திருத்தல் வேண்டும்.

ஐந்திணைத் தெய்வ வழிபாடுகளுள், சேயோன் வழிபாடும் மாயோன் வழிபாடும் பிற்காலத்தில் இருபெருஞ் சமயங்களாக வளர்ச்சியடைந்துள்ளன.

ஐந்திணைத் தெய்வங்களும் தமிழ்த் தெய்வங்களேயென்றும், பிற்காலத்தில் ஆரியர் அவற்றைப்பற்றிப் பல்வேறு கதைகள் (புராணங்கள்) கட்டி விட்டனர் என்றும், என் 'தமிழர் மதம்' என்னும் நூலில் விரிவாய் விளக்கப் பெறும்.

## கடவுள் நெறி

ஊர்பேர் குணங்குறியற்று, மனமொழி மெய்களைக் கடந்து எங்கும் நிறைந்திருத்தல், எல்லாம் அறிந்திருத்தல், எல்லாம் வல்லதாதல், என்றுமுண்மை, அருள் வடிவுடைமை, இன்ப நிலைநிற்றல், ஒப்புயர் வின்மை, மாசுமறுவின்மை ஆகிய எண் குணங்களையுடையதாய் எல்லாவுலகங்களையும் படைத்துக் காத்தழித்துவரும் ஒரு பரம் பொருளுண்டென்று நம்பி, அதனை வழிபடுவதே கடவுள் நெறியாம். இது சித்தமதம் எனவும் படும்.

எல்லாவற்றையும் கடந்திருப்பதனாலேயே இறைவனுக்குக் கடவுள் எனப் பெயரிட்டனர். ஆரியர் வந்தபின், இச்சொல் முதலிற் பெருந்தெய்வங்கட்கும், பின்பு சிறுதெய்வங்கட்கும், இறுதியில் மக்களான முனிவர்க்கும் வழங்கி இழிவடைந்துள்ளது.

திருவள்ளுவர் தம் நூன்முகத்திற் கூறியிருப்பது உருவமற்ற கடவுள் வழுத்தே. தமிழரின் உருவவணக்க

மல்லாக் கடவுள் வழிபாட்டை "உளியிட்ட கல்லேயும்" "எட்டுத் திசையும்" என்னும் பட்டினத்தடிகள் பாடலே யும் "அங்கிங்கெனுதபடி", "பண்ணேன் உனக்கான பூசை" என்னும் தாயுமானவர் பாடலேயும் நோக்கி யுணர்க.

இதன் விரிவை என் தமிழர் மதம் என்னும் நூலிற் கண்டு கொள்க.

கடவுளேயும் மறுமையையும் நம்பாத ஒரு சிறு கூட்டத்தாரும் அக்காலத்திருந்தனர். ஆயின், அறிஞர் அவரைக் கண்டித்தனர்.

**"உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்**
**தலகையா வைக்கப் படும்."** (குறள். 850)

**"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்**
**இல்லே யென்போர்க் கினனு கிலியர்."** (புறம். 29: 11—12)

**"மறுமையொன் றுண்டோ மனப்பட்ட எல்லாம்**
**பெறுமாறு செய்ம்மின்என் பாரே—நறுநெய்யுள்**
**கட்டி யடையைக் களேவித்துக் கண்சொரீஇ**
**இட்டிகை தீற்று பவர்."** (பழமொழி, 108).

## 10. தொழில்கள்

### 1. உழவு

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"
(புறம். 18)

"உழுவார் உலகத்திற் காணியஃ தாற்ரு
தெழுவாரை யெல்லாம் பொறுத்து" (குறள். 1032)

"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளேப்போர்" (சிலப். 10: 151-2)

உழவர், ஆதலால், ஒருநாட்டு வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படை உழவு என்பதைப் பண்டைத் தமிழ் மக்கள் உணர்ந்திருந்தனர்.

உழவுத்தொழிற்கு இன்றியமையாதவை நிலம், நீர், விதை, எருது என்னும் நான்காம்.

பண்டைத்தமிழர், ஐந்திணைகளுள் மருதத்தையும் நெய்தலையும் மென்புலமென்றும், குறிஞ்சியையும், முல்லையையும் வன்புலமென்றும், வகுத்திருந்தனர். மருதநிலத்தை நாடு என்றும், மற்ற நிலங்களைக் காடு என்றும் அழைத்தனர். குறிஞ்சி நிலத்தில் உழத்தக்க இடத்தை ஏர்க்காடு என்றும், உழத் தகாததைக் கொத்துக் காடு என்றும், பகுத்தனர். குறிஞ்சியிலும் முல்லையிலுமுள்ள விளைநிலங்கள் கொல்லை அல்லது புனம் என்றும், மருதத்திலுள்ள விளைநிலங்கள் செய் என்றும், புதுக் கொல்லை இதை என்றும், பழங் கொல்லை முதை என்றும், சிறிது செய்யப் பெற்ற செய் புன்செய் என்றும், நன்றாய்ச் செய்யப் பெற்ற செய் நன்செய் என்றும் பெயர் பெற்றன.

செய்தல் என்பது திருத்துதல் அல்லது பண்படுத்துதல். புன்மை சிறுமை.

கொல்லை என்பது வான வாரிக் காடென்றும், புன்செய் கிணற்றுப் பாய்ச்சலென்றும், நன்செய் ஆற்று அல்லது ஏரிப்பாய்ச்சலென்றும், அறிதல் வேண்டும். எள் கொள் முதலியன கொல்லைப்பயிர்; கேழ்வரகு சோளம் முதலியன புன்செய்ப் பயிர்; நெல் கரும்பு முதலியன நன்செய்ப் பயிர்

நன்செய்களுள், பழமையானது பழனம் என்றும், போரடிக்கும் களமுள்ளது கழனி என்றும், சொல்லப் பெறும். பண்ணை என்பது பண்ணப் பட்டது (பண்படுத்தப்பட்டது) என்னும் பொருளதேனும், வழக்கில் களமர் அல்லது செறுமர் என்னும் பண்ணையாட்கள் குடியிருந்து வேலை செய்யும் பெரிய வயற்பரப்பையே (**Farm**) குறிக்கும். சேறுள்ளமையால் செறு என்றும், வைப்புப் போன்றமையால் வயல் என்றும், நன்செய்க்குப் பெயர்களுண்டு.

புனமாயினும் புன்செயாயினும், பண்டைத்தமிழர் மேட்டு நிலத்திற் பயிர் செய்ய விரும்பவில்லை. மேடு சுவல் என்றும் பள்ளம் அவல் என்றும் பெயர் பெறும்.

"மேட்டுப் புன் செயை உழுதவனும் கெட்டான், மேனி மினுக்கியை மணந்தவனும் கெட்டான்" என்பது பழமொழி.

நன்செய்ப் பாசனத்திற்கு, ஆற்றுநீர் இல்லாவிடங் கட்குக் கண்ணுறுகளும் கால்வாய்களும் வெட்டிப் பாய்ச்சினர். அது இயலா விடத்து ஏரிகளை வெட்டினர். ஏர்த் தொழிற்கு உதவுவது ஏரி. குளிப்பது குளம். இன்று ஏரியைத் தவருகக் குளமென்பர் ஒரு சாரார். இயற்கையாக உண்டான ஏரி அல்லது குளம் பொய்கை எனப்படும். முல்லை நிலத்திற் புன்செய்ப் பாசனத்திற்குக் கிணறுகளை வெட்டினர்.

எருதுகளைக் கொண்டு கிணற்று நீரை இறைக்கும் ஏற்றம் கம்மாலை எனப்பட்டது. அம் = நீர், அம்—கம் = நீர். கம் + ஆலை = கம்மாலை. ஆலை சுற்றி வருவது. கரும் பாலை என்பதை நோக்குக. ஆலுதல் ஆடுதல். முதற் காலத்தில் எருதுகள் ஒரு மரத் தூணைச் சுற்றி வந்தன கம்மாலை என்பது இன்று கமலை என்றும் கவலை என்றும் திரிந்து வழங்குகின்றது. இன்றும்கமலையாடு தல் என்னும் வழக்கை நோக்குக. இன்று எருதுகள்நேரா கச் செல்வதால் கவலை யோட்டுதல் என்றும் கூறுவர் கமலை யேற்றத்தைக் கபிலை யேற்றம் என்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலி குறித்திருப்பது தவருகும்.கபிலை(வ)யென்பது குரால் என்னும் ஆவகை. ஆவைக் கட்டி நீரிறைப்பது வழக்கத்திற்கு மாருகும்.

விதைக் கென்று முதற் காய்ப்பையும் சிறந்த மணி களையும் ஒதுக்கி வைத்தனர். அக்காலத்து உழவர் பொருளீட்டலைக் குறிக் கொள்ளாது, உணவு விளைத் தலையே குறிக்கொண்டு பதினெண் கூலங்களையும் அவற்றின் வகைகளையும், ஆண்டு தோறும் விளைத்து வந்தனர். நூற்றுக்கணக்கான நெல்வகைகள் விளைக்கப் பெற்றன. அவற்றுட் பெரும்பாலனவற்றை இன்று கண்ணுலும் காண முடியவில்லை; காதாலும் கேட்க முடியவில்லை. பொன்திணை, செந்திணை, கருந்திணை என்னும் மூவகையுள், இன்று பொன்றிணையே காண முடிகின்றது. அவரைவகைகளுட் பல ஆண்டுதோறும் ஒவ்வொன்ருய் மறைந்து வருகின்றன. இனறு

ஆட்சியை நடத்துபவருக்குப் பதவியைக் காக்க வேண்டுமென்பதேயன்றி, விதை வகைகளைப் பேண வேண்டு மென்னும் கலை நோக்கில்லை.

தமிழகத்தில் உழவுத் தொழிற்கு இன்றியமையாத் துணையாக, தொன்று தொட்டுப் பயன்பட்டுவரும் விலங்கு எருதாகும். ஏர்த் தொழிற்கு உதவுவதனால் காளை எருதெனப் பட்டது. ஏர்—ஏர்து—எருது. காட்டு மாட்டைப் பிடித்துப் பழக்கி வீட்டு விலங்காக்கி ஏர்த் தொழிற்குப் பயன்படுத்தினர்.

எருதின் இன்றியமையாமை நோக்கியே ஏர்த் தொழிலைப் பகடு என்றனர்.

"பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பி" (புறம் 35)

"பகடு நடந்த கூழ்" (நாலடி. 4)

உழவுத் தொழிலும் பாண்டியம் எனப்பட்டது.

"பாண்டியஞ் செய்வான் பொருளினும்" (கலித். 136). பாண்டி எருது.

எருதுகளை நிறம் பற்றியும் திறம் பற்றியும் பல வகையாக வகுத்து, அவற்றுள் நால்வகையைச் சிறப்பாக இறக்க வரிசையில் எடுத்துக் கூறினர். அது "முழுப்புல்லை, முக்கால் மயிலை, அரைச் சிவப்பு, கால் கருப்பு;" எனப் பழமொழியாய் வழங்கி வருகின்றது.

பண்டையுழவர் எல்லாப் பயிர் பச்சைகளையும் பருவமறிந்தே விளைத்து வந்தனர். ("சித்திரைமாத வுழவு பத்தரை மாற்றுத் தங்கம்." "பட்டந்தப்பினால் நட்டம்." "ஆடிப்பட்டம் தேடி விதை," என்பன பிற் காலத்துப் பழமொழிகளாகும்.) மாரிக்கால வேளாண் மையைக் காலம் என்றும், வேனிற்கால வேளாண்மை யைக் கோடை என்றும் கூறினர்.

இன்று நடைபெற்று வரும் வேளாண்மைவினைகள் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்பு தொட்டே பண்டாடு பழநடையாய் வருவனவாகும்.

காடு வெட்டிக் களப்புதல், கல் பொறுக்குதல், எரு விடுதல், ஆழவுழுதல், கட்டியடித்தல், பரம்படித்தல்

(தாளியடித்தல், பல்லியாடுதல், ஊட்டித்தல், படலிழுத் தல்). புழுதியுணக்கல், விதைத்தல், களையெடுத்தல், காவல் காத்தல். அறுவடை செய்தல், களஞ்சேர்த்தல், சாணையடைதல் (சூடுபோடுதல் போரமைத்தல்), சாணை பிரித்தல், காயப் போடுதல், பிணையலடித்தல் (கடா விடுதல், அதரிதிரித்தல்), வைக்கோல் அல்லது சக்கை அல்லது கப்பி நீக்கல், பொலி தூற்றல், பொலியளத் தல், விதைக்கெடுத்தல், களஞ்சியஞ் சேர்த்தல் என்பன வானவாரிப் புதுக் கொல்லை வேளாண்மை வினைகளாம். காடு வெட்டிக் களப்புதல் புதுக் கொல்லைக்கே நிகழும்.

பழங்கொல்லையாயின், உரம்போடுதற்கு எருவிடு தலோடு கிடையமர்த்தலும் குப்பையடித்தலும் நிகழும்.

புன்செய் வேளாண்மையாயின், புழுதியுணக் கற்குப் பின்னும் களையெடுத்தற்கு முன்னும், நாற்றுப் பாவல், பாத்தி பிடித்தல், நீர் பாய்ச்சி நடுதல் ஒன்றரைவாடம் நீர் பாய்ச்சல் ஆகிய வினைகள் நிகழும்.

நன்செய் வேளாண்மையாயின், நாற்றுப் பாவல், நீர் பாய்ச்சல், தொளி(சேறு)க்கலக்கல், குழை மிதித் தல், நடுதல் என்னும் வினைகளும், அவற்றிற்குப்பின் களையெடுத்தல் முதலிய வானவாரி வேளாண்மை வினைகளும், நிகழும்.

அகம் அகரம் = மருதநிலத்தூர். ஒ. நோ: **L. agros, field E. acre.**

ஏர்—**E. ear, to plough ME. eren, AS. erian, Ice. erja, Goth, arjan, L. arare, Gk. arow, I plough, Ir. araim. I plough E. arable = ploughable; earth = that which is ploughed. Root-ar**

ஏர் என்னும் சொல் வடமொழியிலின்மை கவனிக்கத்தக்கது.

கா று (கொழு)-AS. scear, ME. schar, Ger. schar, schaar, E. Share.
தொள் (தோண்டு)-E. till. A. S, tilian, ME. tilien, Du. telen,

தொள்-தொய்.தொய்யாவுலகம் = தொழில்அல்லது வினைசெய்யா விண்ணுலகம்.

தொள்—தொழு—தொழில். உலக முதல் தொழில் உழவே.

கல் (தோண்டு)-L. colere, to till. கல் என்னும் வினையினின்று கல்வி என்னும் சொல் தோன்றியது போன்றே, colo என்னும் வினையினின்று cultivation, culture என்னும் சொற்களும், ar (உழு) என்னும் வினையினின்று ars artis (art) என்னும் சொற்களும், தோன்றியுள்ளன உலக முதற் கல்வியும் உழவே புல்லம் (எருது) ME. bole, ON. boli MLG., MDu. bulle. bull E.

"புல்லமேறி தன்பூம்புகலியை" (தேவா. 76, 11)

2. **நெசவு**

நெய்—நெயவு—நெசவு.

ஆடை நெசவைப் பற்றிய செய்திகளெல்லாம் முன்பு கூறப்பட்டன.

> "மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
> படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
> கடாஅ யானைக் கலிமான் பேக."

என்று பரணர் பாடியிருப்பதாலும் (புறம். 145).

> "புதையிருட் படாஅம் போக நீக்கி"

என்னும் சிலப்பதிகார அடிக்கு (5:4), "அல்லற்காலைப் பசந்துவாரப் பனித்துப் போர்த்த இருளாகிய படாத்தை" என்று அடியார்க்கு நல்லார் உரைவரைந் திருப்பதனாலும்,

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக் காருக ரிருக்கையும்"

என்பதால் (சிலப். 5: 16-17), மயிர்நெசவும் கடைக் கழகக் காலத்திருந்தமை அறியப்படுவதாலும், படாம் என்பது சால்வை (shawl) என்னும் பாரச்கச் சொல் லாற் குறிக்கப் பெறும் மென்மயிர்ப் போர்வையாயிருக் கலாம்.

"கண்டங் குத்திய மண்டப எழினியும்"
(உஞ்சைக். 37 : 103)

"கழிப்பட மாடம் காலொடு துளங்க"

(உஞ்சைக். 44: 42), என்னும் பெருங்கதையடிகளும் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி யென்னும் பெயரும் கொண்டு, கூடாரம் அமைத்தற் குரிய முரட்டுத் துணியும் நெய்யப்பட்டமையை உய்த் துணரலாம்.

திரையால் அமைக்கப்பட்ட மண்டபம் மண்டப எழினி.

படம்-துணி, மாடம்-மாடம் போல் உயர்ந்த கூடம். படமாடத்தைப் படமாளிகை, படமண்டபம் என்பதுமுண்டு. கூடாரம் கூடம் போல் உள்ள பட மாடம், கூட ஆரம் — கூடவாரம் — கூடகாரம்— கூடாரம். 'ஆரம்' ஓர் ஈறு.

எ—டு: கொட்டாரம், வட்டாரம், கடிகையாரம்— கடிகாரம்.

## 3. கம்மியம்

கருத்தல் செய்தல். இது வழக்கற்றுப் போன ஒரு தமிழ் வினைச்சொல்.

தமிழ் நாட்டிற் கருநிறமும் புகர் (brown) நிறமும் பொன்னிறமும் உள்ளவர் தொன்று தொட்டு இருந்து வருகின்றனர். பொன்னிறத்தைச் சிவப் பென்றும் வெள்ளையென்றும் சொல்வது வழக்கம். பொன்மை கருமை ஆகிய இருநிறம் பற்றியே, வெண்களமர்

கருங்களமர், வெள்ளாளர், காராளர், வெள்ளொக்கலர் காரொக்கலர் என்னும் சொல்லிணைகள் எழுந்தன. காய்ப் பேறுமாறு வினை செய்யின் கருப்பர் அகங்கை கருப்ப தும் சிவப்பர் அகங்கை சிவப்பதும் இயல்பு. இதுபற்றி வினைசெய்தலைக் குறிக்க, கருத்தல் செய்தல் என்னும் இரு சொற்கள் தோன்றின. கைகருக்குமாறு செய்வது கருத்தல்; சிவக்குமாறு செய்வது செய்தல்.

கரு—கருமம் = செய்கை. கரு—கருவி = செய்கைக்கு வேண்டும் துணைப் பொருள். கரு—கரணம் = செய்கை, கருவி. 'அணம்' ஓர் ஈறு.

இனி, கருமைச் சொற்குப் பெருமைப் பொருளு மிருத்தலால், கருத்தல் = மிகுத்தல் என்றுமாம். புதி தாய்ச் செய்யப் பெறும் ஒரு பொருள் ஏற்கெனவே யுள்ள அதன் வகையை மிகுத்தல் காண்க. Make என் னும் ஆங்கிலச் சொல்லையும் Magnus (great) என்னும் இலத்தீன் சொல்லினின்று திரிப்பர் ஆங்கிலச் சொல் லாராய்ச்சியாளர். தன் வினையும் பிறவினைப் பொருள் பயப்பது சொல்லாக்க மரபிற் கொத்ததே.

ஒ. நோ. வெளுத்தல் - வெள்ளையாதல் (தன்வினை), வெள்ளையாக்குதல் (பிறவினை). 'வண்ணான் துணிகளை வெளுக்கிறான்' என்பதில், வெளுத்தல் வினை பிறவினை யாயிருத்தல் காண்க.

கருமம்—கம்மம் = செய்கை. தொழில், கைத் தொழில் கொல்தொழில், கம்மியத் தொழில்.

கம்மம் = கம்மியத்தொழில்.

**"கம்மஞ்செய் மாக்கள்"** *(நாலடி. 393)*

கம்மம்—கமம்.

இவ்விரு வடிவும்முதலில் தொழில் என்றேபொருள் பட்டன. உலகில் முதல் தோன்றிய தொழில் உழவே. தொழில், கை என்னும் தொழிற்பெயரும், செய், பண்ணை என்னும் நிலப் பெயரும்இதனை வலியுறுத்தும்.

தொள்— (தொளில்) — தொழில். தொள்ளுதல் தோண்டுதல்.

கை = கையாற் செய்யும் செய்கை அல்லது தொழில், முதல் தொழிலான உழவு.

**“இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர்.”**

என்னும் திருக்குறளை (1035) நோக்குக.

கை என்பது செய்கையைக் குறித்தலாலேயே ஒரு தொழிற் பெயரீறுமாயிற்று. எ—டு: செய்கை, வருகை.

உழவு முதல் தொழிலானதினால், கம்மம் கமம் என்னும் இருவடிவும் முதலில் உழவைக் குறித்தன.

கம்மவாரு (தெ.)—கம்மவார் = தெலுங்கவுழவர்.

கம்மத்தம்—கம்மத்தமு(தெ.) = பண்ணைப் பயிர்த் தொழில்.

கமம் = பயிர்த்தொழில். கமக்காரன் = உழவன்.

கமம்—கம் = 1. தொழில்

**“ஈமும் கம்மும் உருமென் கிளவியும்”** (தொல். எழுத். 328)

2. கம்மியத் தொழில்.
(நன், 223, விருத்தி.)

கம்ஆளன் கம்மாளன். கம்மாளர் என்பார் கொல்லன், தச்சன், கம்மியன் (சிற்பி), தட்டான், கன்னான் என்னும் ஐங்கொல்லர். கம்மியனைக் கல்தச்சன் என்று கூறுவது வழக்கம்.

கம்—கம்மியம் = 1. கைத்தொழில்.
2. கம்மாளத் தொழில்.

கம்மாளன் என்னும் சொற் போன்றே, கம்மியன் என்னும் சொல்லும் பிற கொல்லரையும் குறிக்கும்.

கம்மியன் = 1. தொழிலாளி.

“கம்மியரும் ஊர்வர் களிறு” (சீவக. 495)

2. கம்மாளன் (தி.வா.).
3. பொற்கொல்லன்.

**“ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த”** (புறம். 353)

கம்மிய நூல் = கட்டட நூல் (சிற்ப சாத்திரம்)

**"கம்மியநூல் தொல்வரம் பெல்லை கண்டு"**

(திருவிளை. திருநகரங். 38)

கருமகன் என்பது, "கருங்கைக் கொல்லர்" (சிலப். 5: 29) என்பது போல் இருப்புக் கொல்லனை மட்டும் குறிக்கும். கருமகன்—கருமான்.

ஒ. நோ: பெருமகன்—பெருமான், மருமகன்—மருமான்.

கரு என்னும் வினைமுதனிலை வடமொழியில் க்ரு எனத் திரியும். கரணம் என்பதைக் காரண என நீட்டியும், க்ரு என்னும் முதனிலையினின்று கார்ய என்னும் சொல்லை ஆக்கியும், கருமம் என்பதைக் கர்மன் எனத் திரித்தும், உள்ளனர் வடமொழியாளர்.

**"மின்னும் பின்னும் பன்னும் கன்னும்**
**அந்நாற் சொல்லும் தொழிற்பெய ரியல."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் (எழுத். 345) கன்னரத் தொழில் குறிக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியர் பாரதக் காலத்திற்கும் கடைக்கழகக் காலத்திற்கும் இடைப் பட்டவர்; பாணினிக்கு முந்தியவர்.

**"நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்**
**அல்லது கிளப்பினும் வேற்றுமை யியல."**

என்பதில் (தொல். எழுத். 371) கொல்லத் தொழில் குறிக்கப்பட்டுளது.

**"நடைநவில் புரவியும் களிறும் தேரும்**
**........ ................................**
**தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய."**

என்பது (தொல், மரபியல்,72), அரசன் ஏறிச்செல்லும் தேரையும்,

**"தேரோர் தோற்றிய வென்றியும்"**

என்பது (தொல். புறத். 21, தேர்ப் படையையும் குறித்தன.

"உலைக்கல் லன்ன பாறை யேறி" (குறுந். 12 : 1),

"பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்
கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ" (பெரும்பாண். 436-438),

"நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்
எறிபொற் பிதிரின் சிறுபல் சாய
வேங்கை வீயுகும்" (நற். 13 : 5-7),

"வன்புல மிறந்த பின்றை மென்றோல்
மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன
கவைத்தாள் அலவன்" (பெரும்பாண். 206-208),

"இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை
........................................
நல்லரா நடுங்க உரறிக் கொல்லன்
ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தகழும்" (நற். 125: 1-4),

"கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே."
(புறம். 180: 12-13),

என்னும் பகுதிகள், இற்றைக் கொல்லத் தொழில் நிலையே அன்று மிருந்தமையைக் காட்டும்.

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்." (குறள். 505),

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு." (குறள் 267),

"பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்"
(பெரும்பாண். 220-21),

"சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மரும்" (மதுரை. 512-13),

**"ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த**
**பொலஞ்செய் பல்கா சணிந்த அல்குல்**
**ஈகைக் கண்ணி இலங்கத் தைஇ"** (புறம். 353).

**"உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை**
**வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்**
**புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்ளுகிர்ப்**
**பொலங்கல ஒருகா சேய்க்கும்**
**நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே."** (குறுந். 67).

என்பவை பொற்கொல்லரின் பணியைக் குறிப்பன. குறுந்தொகைச் செய்யுளில், பொற்கொல்லன் புதுக் கம்பியிற் கோக்குமாறு தன் உகிரால் (நகத்தால்) பற்றியிருக்கும் உருண்டையான பொற்காசிற்கு, வேப்பம் பழத்தை கவ்விக் கொண்டிருக்கும் கிளிமூக்கை உவமங் கூறியிருப்பது, பாராட்டத்தக்கது.

தச்சு வேலையிற் சிறந்த வேலைப்பாடுள்ள செய் பொருள் தேராகும்.

**"எம்முளும் உளனொரு பொருநன் வைகல்**
**எண்டேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த காலன் னோனே."** (புறம்)

என்பது தேர்த்தச்சனைக் குறித்தது.

தச்சனை மரங்கொல் தச்சன் என்பது இலக்கிய வழக்கு. கொல்லுதல் வெட்டுதல்.

**"மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத் தற்றே"** (புறம். 206: 11-12)

தச்சுவேலை பெரும்பாலும் பல பலகைகளையும்கால் களையும் ஒன்றுகத் தைத்தலாதலால், அப்பெயர் பெற்றது தைச்சு-தச்சு. தைத்தல் இணைத்தல் அல்லது பொருத்துதல்.

"பலகை தைத்து" (பாரத. கிருட்டிண. 102). ஐகார முதற்சொல் அகர முதற் சொல்லாகத் திரிவது இயல்பே.

ஒ. நோ: ஐ—ஐந்து—அஞ்சு
மை—மைஞ்சு—மஞ்சு = முகில்.
பை—பைஞ்சு—பஞ்சு—பஞ்சி.
கைச்சாத்து—கச்சாத்து

ஆங்கிலத்திலும், தட்டுமுட்டுக்கள் செய்யும்தச்சனை Joiner என்று கூறுதல் காண்க.

தச்சன் என்பது, வடமொழியில் தக்ஷ என்றும், கிரேக்கத்தில் Tekton என்றும், திரியும். உண்மை இங்ஙனமிருப்பவும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகர முதலியைத் தொகுத்த பிராமணத் தமிழ்ப் புலவர் தக்ஷ என்னும் சொல்லினின்று தச்சன் என்பது வந்த தாகக் குறித்திருக்கின்றனர்.

பாண்டியன் தேவியின் வட்டக்கச்சைக் கட்டில், பின்வருமாறு யானை மருப்பினால் (தந்தத்தினால்) சிறந்த வேலைப்பாட்டுடன் செய்யப் பெற்றதாக, நெடுநெல் வாடை கூறுகின்றது.

நாற்பதாண்டு அகவையுள்ளதும், முரசுபோன்ற பெரிய கால்களையும் அழகிய புகர் நிறைந்த மத்தகத் தையும் உடையதும், போருக்குச் சிறந்த தென்று பெயர் பெற்றதும், போர் செயது இறந்ததுமான, யானையின் தானே வீழ்ந்த கொம்பை இருபுறமும் கனமும் செம்மையும் ஒப்பச் செதுக்கி, கூரிய சிற்றுளி யாலே பெரிய இலைத் தொழிலை இடையிலே அமைத்து; நிறைசூலியின் பால்கட்டிய மார்பு போலத் திரண்ட குடத்தையும், உள்ளிப் பூடு போன்ற கடைச்சலையும், கொண்ட கால்களைப் பொருத்தி; மூட்டுவாய் மாட்சிமை ப்படத் தகடுகளை ஆணிகளால் தைத்து, அழகாகத் தொடுத்த முத்துக் குஞ்சங்களைச் சுற்றி வரத் தொங்க விட்டு; புலியின் வரியைக் கொண்ட பொலிவு பெற்ற கச்சாலே தகடுமறைய நடுவிடம் முழுதும் பின்னி; குற்றமற்றுப் பேரளவு கொண்டு பெரும் பெயர்பெற்ற வட்டக்கச்சைக் கட்டில்

"தசநான் கெய்திய பணைமருள் நோன்றாள்
இகல்மீக் கூறும் ஏந்தெழில வரிநுதல

**பொருதொழி நாகம் ஒழியெயி றருகெறிந்து**
**சீரும் செம்மையும் ஒப்ப வல்லோன்**
**கூருளிக் குயின்ற ஈர்இலை இடையிடுபு**
**தூங்கியல் மகளிர் வீங்குமுலை கடுப்பப்**
**புடைதிரண் டிருந்த குடத்த இடைதிரண்டு**
**உள்ளி நோன்முதல் பொருத்தி யடிபமைத்துப்**
**பேரள வெய்திய பெரும்பெயர்ப பாண்டில்**
**மடைமாண் நுண்ணிழை பொலியத் தொடைமாண்டு**
**முத்துடைச் சாலேகம் நாற்றிக் குத்துறுத்துப்**
**புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்**
**தகடுகண் புதையக் கொளீஇத் துகள்தீர்ந்து''**

(நெடுநல். 115-128)

நிலத்தின்மேலோடும் வண்டியும் தேரும் போன்றே நீர்மேலோடும் மரக்கலங்களும், முதன் முதல் தமிழ் நாட்டில்தான் செய்யப் பெற்றன. ஓடம் செய்பவனுக்கு ஓடாவி (ஓடாள்வி) என்றும், நாவாய் போன்ற பெருங் கலம் செய்பவருக்குக் "கலஞ்செய் கம்மியர்" (மணி. 25 124); "கலம்புணர் கம்மியர்" (மணி. 7: 70) என்றும், பெயர். இவர் கப்பல் தச்சர்.

கலத்தையுடைய நெய்தல் நில மக்கள் கலவர், கலத்தை ஓட்டும் தலைவன் நீகான் (நீகாமன், மீகாமன் மீகான் (Captain). கலத்தில் வினை செய்பவர் ஓசுநர் (Sailors) கலத்திற் சென்று வாணிகம் செய்பவன் கடலோடி.

"திரைகட லோடியும் திரவியம் தேடு."

என்று ஔவையார் கூறியது காண்க.

**" கொடித்தேர் வீதியும் தேவர் கோட்டமும் "**

என்று மணிமேகலை (21: 120) கூறுவதால், தெய்வ உருவத்தை வைத்திருக்கும் பெருந் தேரும் அக்காலத் திருந்திருக்கலாம்.

இக்காலத்துள்ள தேர்களுள் திருவாரூர்த் தேர் மிகப் பெரிது. அதுவும் அரையே யரைக்கால்

தேரென்றும், முன்பு எரிந்து போனது முக்கால் தேரென்றும், கூறுவர். அங்ஙனமாயின், அதற்கும் முன்பே முழுத்தேர் இருந்திருத்தல் வேண்டும். முழுத் தேர் ஏழுதட்டும் முக்கால்தேர் ஐந்து தட்டும் அரைத் தேர் மூன்றுதட்டும் உள்ளனவாகச் சொல்லப்படும். இவை முறையே நூறடியும், எழுபத்தைந்தடியும் அறுபதடியும் உயரமுள்ளன என்பர்.

"மன்னார்குடி மதிலழகு...மனையழகு, திருவாரூர்த் தேரழகு, திருவிடைமருதூர்த் தெருவழகு" என்றொரு பழமொழி வழங்குகின்றது.

வானளாவும் கோபுரங்கள் கட்டப் பட்டிருந்த பண்டைக் காலத்தில், மாபெருந் தேர்கள் செய்யப் பட்டிருந்ததில் வியப்பில்லை.

தெய்வத் தேரிற் பல அணியுறுப்புக்களும் தேவர் முனிவர் படிமைகளும் யாளி குதிரை யுருவங்களும் செய்து வைக்கப் பெறுதலால், தேர்த்தச்சர் தச்சுக் கலையில் தலைசிறந்தவராவர்.

கட்டுமரம் முதல் கப்பல்வரை பல்வகைக் கலங் களையும் செய்யும் தச்சர் கலம்புணர் கம்மியர் (கப்பல் தச்சர்) எனப் பட்டார்.

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்"

என்னும் வெட்சித்திணைத் துறைகளும்(தொல். புறத் 5), செங்குட்டுவன் பனிமலையிற் கல்லெடுத்துக் கண்ணகிக் குப் படிமஞ் சமைப்பித்ததும், கல்தச்சு வினைக்குச் சான்றுகளாம்.

மண்டபங்களை யெல்லாம் கல்லாற் கட்டுவதே தொன்று தொட்ட வழக்கம். நூற்றுக்கால் மண்டபங் களும் ஆயிரக்கால் மண்டபங்களும் விழாப்படி மண்டபங்களும் அத்தகைய. கற்கோயில் கற்றளி யெனப்பட்டது. தளிகோயில். தெய்வப் படிமைகள் (சிலைகள்) ஐவகைக் கொல்லராலும் செய்யப்பட்டன.

4. **கொத்தம்**

கொத்தம் என்பது கொத்தன் வேலை அல்லது கட்டடத் தொழில். இதைக் கட்டடக் கலை என்னும் தலைப்பிற் காண்க.

5. **கல வினை**

கல வினை என்றது குயவன் செய்யும் கலத் தொழில்.

> "கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
> இருள திணிந் தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை
> அகலிரு விசும்பின் ஊன்றும் சூளை
> ..........................................
> தாழி
> அன்னோற் கவிக்கும் கண்ணகன்
> இருநிலம் திகிரியாப் பெருமலை
> மண்ணா வனைதல் ஒல்லுமோ நினக்கே."

என்னும் புறப்பாட்டில் (228) சுள்ளை, திகிரி (சக்கரம்) மண் என்பவையும்,

> "உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
> மட்பகையின் மாணத் தெறும்."

என்னும் குறளில் (883), மட்பகை யென்னும் வனைகலம் அறுக்குங் கருவியும், சொல்லப் பட்டன.

கழிபெரு மூப்பினால் உடல் வற்றிக் கூன் விழுந்து படுகிடையிற் புரளவும் இயலாத மக்களை வைத்துப் பாதுகாப்பதும், உயிர் நீங்கியபின் அப்படியே கொண்டுபோய் இடுகாட்டில் கவிழ்த்து வைப்பதும், இறந்த போர் மறவர் உடல்களை இட்டு வைப்பதுமான முதுமக்கள் தாழி என்னும்மாபெருமிடா அக்காலத்தில் வனையப்பட்டது.

> "கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
> ..........................................
> வியன்மலர் அகன்பொழில் ஈமத் தாழி
> அகலி தாக வனைமோ..."

என்னும் முதுபாலைச் செய்யுள் (புறம். 256), இருவருடலைக் கொள்ளத்தக்க முதுமக்கள் தாழியும் அக்காலத்திற் செய்யப்பட்டமையை உணர்த்தும்.

## 6. பிறதொழில்கள்

பாய் நெசவும் முடைவும், தையல், தோல்பதனிடல், செருப்புத் தைத்தல், தோலுறை செய்தல், பெட்டி சுளகு (கூடை முறம்) முடைதலும் பின்னுதலும், கட்டிற் பின்னுதல், துணியாலும் நெட்டியாலும் பல்வேறு கவர்ச்சிப் பொருள்களும் விளையாட்டுக் கருவிகளும் அணிகளும் செய்தல், வண்ணம் பூசுதல், வண்ண ஓவியம் வரைதல், மண்பாவை செய்தல், நறுமணப்பொருள் கூட்டுதல், சுண்ண மிடித்தல், செக்காட்டுதல், ஆடைவெளுத்தல், மாலை கட்டுதல், சங்கறுத்தல், பவழமறுத்தல், மணி கோத்தல், மீன்பிடித்தல், முத்துக் குளித்தல், உப்பு விளைத்தல், கள்ளிறக்குதல், கள் சமைத்தல், ஆடு மேய்த்தல், மாடு மேய்த்தல், தயிர் கடைதல், வேட்டையாடுதல், கொடிக்கால் வைத்தல். சாணைக்கல் செய்தல், பல்வகைச் சிற்றுண்டி செய்தல், குயிலுவக் கருவிகள் (பல்வேறு இசைக் கருவிகள்) செய்தல் முதலியன.

## 11. வாணிகம்

நாகரிக மக்கள் வாழ்க்கைக்கு, உணவு போன்றே உடை, கலம், உறையுள், ஊர்தி முதலிய பொருள்களும், பொன் வெள்ளி முதலிய செல்வமும், இன்றியமையாதிருப்பதால், பொருளாட்சித் துறையில், ஒரு நாட்டின் நல்வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படையானது உழவுத் தொழிலென்றும், அதற்கடுத்தவை இயற்கையும் செயற்கையுமான விளைபொருட்களாற் செய்யப்படும் பல்வேறு கைத்தொழில்களென்றும், அவற்றிற்கடுத்தது நிலவழியும் நீர்வழியும் நடத்தப்பெறும் வணிகமென்றும், பண்டைத் தமிழர் நன்கு அறிந்திருந்தனர். அதனால், மூவேந்தரும் இருவகை வணிகத்தையும் ஊக்குதற்குச் சாலைகளும் துறைமுகங்களும் அமைத்தும், அவற்றைப் பாதுகாத்தும் வந்தனர்.

வணிகம் என்பது வணிஜ் என்றும், வாணிகம் என்பது வாணிஜ்ய என்றும், வடமொழியில் திரியும்.

நாட்டிற்கு உள்ளிருந்து ஆட்சியைச் செவ்வையாய்ச் செய்தற்கு ஒரு மருதநிலத் தலைநகரும், நாட்டோரத்திற் கடற்கரையிலிருந்து நீர் வணிகத்தை ஊக்குதற்கு ஒரு நெய்தல தலைநகருமாக, இரு தலைநகரை மூவேந்தரும் தொன்றுதொட்டுக் கொண்டிருந்தனர்.

| வேந்தன் | மருதத்தலைநகர் | நெய்தல்தலைநகர் |
|---|---|---|
| பாண்டியன் | மதுரை | கொற்கை |
| சோழன் | உறையூர் | புகார் (காவிரிப்பூம் பட்டினம்) |
| சேரன் | கருவூர் (கரூர்) | வஞ்சி |

முதலிரு கழக நூல்களும் முற்றும் அழிந்து போனமையால், பாண்டியரின் இடைக்கழகக்கால மருதநிலத் தலைநகரும தலைக்கழகக்கால நெய்தல் நிலத் தலைநகரும், அறியப்படவில்லை. சேரர் கொங்குநாட்டை இழந்த பின்னர், வஞ்சிக்கே கருவூர்ப் பெயரை இட்டுக் கொண்டனர்.

கோநகர்களிலும் துறைநகர்களிலும் இருந்து நில வணிகமும் நீர் வணிகமும் செய்து வந்த நகரத்தார் அல்லது நகர மாந்தர் என்னும் வகுப்பினரை, எண் பேராயங்களுள் ஓராயமாகக்கொண்டு, அவரை மன்னர் பின்னோர் என்று சிறப்பித்தும், அவருள் தலைமையானவர்க்கு எட்டிப்பட்டம் வழங்கியும், மூவேந்தரும் ஊக்கி வந்தனர்.

எட்டிப்பட்டச் சின்னமாக ஒரு பொற்பூ அளிக்கப் பெறும்.

"எட்டிப்பூப் பெற்று" *(மணி. 22:113)*

எட்டிப்பட்டம், அதைப்பெற்ற வணிகனின் மனைவிக்கும், அல்லது மகட்கும் மதிப்புரவுப் பட்டமாக

(Title of Courtesy) வழங்கி வந்ததாகப் பெருங்கதை கூறும்.

"எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய
மயிலியன் மாதர்" —(பெருங். இலாவா. 3: 144)

எட்டிப் பட்டத்தார்க்கு, எட்டிப்புரவு என்னும் நில மானியமும் அளிக்கப்பட்டதாக மயிலைநாதர் உரை குறிக்கும் (நன். 158).

"கோடியும் தேடிக் கொடி மரமும் நட்டி"

என்னும் உலக வழக்குத் தொடர் மொழியால், கோடிப் பொன் தேடிய செல்வர்க்குக் கொடியும் ஒன்று கொடுக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

எட்டுதல் உயர்தல். எட்டம் உயரம். எட்டி உயர்ந்தோன். எட்டி—செட்டி (முதன்மெய்ப்பேறு).

ஒ. நோ: ஏண்—சேண். ஏமம்—சேமம். செட்டியின் தன்மை செட்டு.

சிரேஷ்டி என்னும் வடசொல், திரு என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபான ச்ரீ (ஸ்ரீ) என்பதன் உச்சத்தர (Superlative degree) வடிவினின்று திரிந்ததாகும்.

| ஒப்புத்தரம் | உறழ்தரம் | உச்சத்தரம் |
|---|---|---|
| ச்ரீ (ஸ்ரீ) | ச்ரேயஸ் | ச்ரேஷ்ட |

**நிலவாணிகம்**

நிலவாணிகர் வணிகப் பண்டங்களைக் குதிரைகள் மேலும் கோவேறு கழுதைகள் மேலும் ஏற்றிக்கொண்டு கூட்டங் கூட்டமாய்க் காட்டு வழியே தமிழகத்தை யடுத்த வடுக நாட்டிற்கும், நெடுந் தொலைவான வட நாட்டிற்கும், காவற் படையுடன் சென்று ஏராளமாய்ப் பொருளீட்டி வந்தனர். அவ்வணிகக் கூட்டங்கட்குச் சாத்து என்று பெயர். சாத்து கூட்டம். சார்த்து சாத்து. சார்தல் சேர்தல்.

சாத்து = 1. கூட்டம்.

**"சுரிவளைச் சாத்து நிறைமதி தவழும்"** (கல். 63, 32)

## 2. வணிகக் கூட்டம்.

**"சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்"**

(சிலப். 11,190)

சாத்து என்பது வடமொழியில் ஸார்த்த என்று திரியும்.

வணிகச் சாத்துக்களின் காவல் தெய்வமாகிய ஐயனுர்க்குச் சாத்தன் என்று பெயர். அதனுல், வணிகர்க்குச் சாத்தன் சாத்துவன் என்னும் பெயர்கள் இயற்பெயராய் வழங்கின. ஐயனுர் கோயிலில், வணிகச் சாத்தைக் குறித்தற்கு மண்குதிரை யுருவங்கள் செய்து வைத்திருத்தலைக் காண்க. சாத்தன் என்னும் தெய்வப் பெயர் வடமொழியில் சாஸ்தா எனத் திரியும்.

இனி, வணிகச் சாத்தின் தலைவனும் சாத்தன் எனப்படுவான். இப்பெயரும் ஸார்த்த என்றே வடமொழியில் திரியும். இதனுல், வடமொழியில் சாத்தைக் குறிக்கும் சொற்கும் சாத்தின் தலைவனைக் குறிக்கும் சொற்கும் வேறுபாடின்மையும், சாத்தன் என்னும் தெய்வத்தைக் குறிக்கும் சொல் வேறுபட்டிருப்பதும், கண்டு உண்மை தெளிக.

**"குல்லைக் கண்ணி வடுகர் முனையது**
**பல்வேற் கட்டி நன்னுட் டும்பர்**
**மொழிபெயர் தேஎத்த ராயினும்**
**வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே."**

என்னும் குறுந்தொகைச் செய்யுள் (11), வடுக நாட்டிற்கும்,

**"நந்தன் வெறுக்கை எய்தினும் மற்றவண்**
**தங்கலர் வாழி தோழி**
**.......................................**
**மாகெழு தானை வம்ப மோரியர்**
**புனைதேர் நேமி யுருளிய குறைத்த**
**இலங்குவெள் ளருவிய அறைவா யும்பர்**

**மாசில் வெண்கோட் டண்ணல் யானை**
**வாயுள் தப்பிய அருங்கேழ் வயப்புலி**
**மாநிலம் நெளியக் குத்திப் புகலொடு**
**காப்பில வைகும தேக்கமல் சோலை**
**நிரம்பா நீளிடைப் போகி**
**அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே."**

என்னும் நெடுந்தொகைச் செய்யுள் (251), விந்தியமலைக் கப்பாற்பட்ட வட நாட்டிற்கும், வணிகச் சாத்துக்கள் போய் வந்தமையைக் குறிப்பாய்த் தெரிவித்தல் காண்க.

**நீர்வாணிகம்**

**"உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்**
**புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ"**

என்பதால் (அகம். 255 : 1—2), கடலைப் பிளந்து செல்லும் மாபெருங் கப்பல்கள் தமிழகத்திற் செய்யப்பட்டமை அறியப்படும்.

கப்பல்கள் தங்கும் துறைமுகத்தைச் சேர்ப்பு, கொண்கு என்பது இலக்கிய வழக்கு.

கீழ் கடற்கரையில் கொற்கை, தொண்டி, புகார் (காவிரிப்பூம்பட்டினம்) என்னும் துறைநகர்களும், மேல் கடற்கரையில் வஞ்சி, முசிறி, தொண்டி என்னும் துறைநகர்களும் இருந்தன. இடைக்கழகக் காலத்தில் பாண்டியர் துறைநகர் குமரியாற்றின் கயவாயில் (Estuary) அமைந்திருந்தது. அதன் தமிழ்ப் பெயர் (அலைவாயில்?) மறைந்து, அதன் மொழிபெயர்ப்பான கபாடபுரம் என்னும் வடசொல்லே இன்று இலக்கிய வழக்கிலிருக்கின்றது.

இரவில் வழிதப்பிச் செல்லும் கலங்கட்கு வழிகாட்டுவதற்கு, ஒவ்வொரு துறைநகரிலும் கலங்கரை விளக்கம் (Light house) இருந்தது.

**"இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்"**

(சிலப். 6 : 141)

"வான மூன்றிய மதலை போல
ஏணி சாத்திய ஏற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து
இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி
உரவுநீர் அழுவத் தோடுகலங் கரையும்
துறை." (பெரும்பாண். 349-51)

கடற்கரை உள்நாட்டை நோக்க மிகத் தாழ்ந்த மட்டத்திலிருப்பதால், துறைநகர்களெல்லாம் பட்டினம் எனப்பட்டன.

பதிதல் தாழ்ந்திருத்தல். பள்ளமான நிலத்தைப் பதிந்த நிலம் என்பர். பதி + அனம் = பதனம்—பத்தனம்—பட்டனம்—பட்டினம்.

தகரம் டகரமாவது பெருவழக்கு.

ஒ. நோ : கொத்து மண்வெட்டி—கொட்டு மண்வெட்டி.

களைக்கொத்து—களைக்கொட்டு.
பொத்து—பொட்டு - பொருத்து.
வீரத்தானம் (வ.)—வீரட்டானம்.
பதனம்—படனம் = நோயாளியைப் பாதுகாத்தல்.

இனி, பதனம் என்பது, கலங்கள் காற்றினாலும் கொள்ளைக்காரராலும் சேதமின்றிப் பாதுகாப்பாயிருக்குமிடம் என்றுமாம். பதனம் பாதுகாப்பு.

பட்டினம் என்பதைப் பட்டணம் என்பது உலக வழக்கு. இக்காலத்திற் பட்டணம் என்பது சென்னையைச் சிறப்பாய்க் குறித்தல்போல், அக்காலத்தில் பட்டினம் என்பது புகாரைச் சிறப்பாய்க் குறித்தது. பட்டினப்பாலை, பட்டினத்துப் பிள்ளையார் என்னும் வழக்குக்களை நோக்குக.

ஒருதிணைக்கும் சிறப்பாயுரியதன்றி நகரப் பொதுப் பெயராய் வழங்கும் பதி என்னும் சொல், மக்கள் பதிவாய் (நிலையாய்) இருக்கும் இடத்தைக் குறிக்கும். பதிதல் நிலையாய்க் குடியிருத்தல்.

கப்பல்கள் துறைமுகத்திற்கு வந்து சேரும் போதும் அதைவிட்டுப் புறப்படும்போதும், முரசங்கள் முழக்கப்பட்டன.

"இன்னிசை முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்" (மதுரை. 80-83)

கப்பலில் வந்த பொருள்கள் கழிகளில் இயங்கும் தோணிகளாற் கரை சேர்க்கப்பட்டன.

"கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து" (புறம். 343 : 5-6)

அக்காலத்திற் காவிரியாறு அகன்றும் ஆழ்ந்தும் இருந்ததால், பெருங் கப்பல்களும் கடலில் நிற்காது நேரே ஆற்று முகத்திற் புகுந்தன.

"...............கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்" (புறம். 30 : 10-12)

"பாய் களையாது பரந்தோண்டாதென்பதனால், துறை நன்மை கூறியவாறும்" என்று பழைய வுரை கூறுதல் காண்க. கரிகால் வளவன் காவிரிக்குக் கரை கட்டியது இங்குக் கருதத்தக்கது.

நீர் வணிகம் நிரம்ப நடைபெற்றதால், துறைமுகத்தில் எந்நேரமும் கப்பல்கள் நிறைந்திருந்தன.

"வெளிவிளக்கும் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை" (பட்டினப். 172-74)

ஏற்றுமதியும் இறக்குமதியும் ஏராளமாயிருந்ததால், நாள்தோறும் ஆயத்துறைக் கணக்கர் மூடைகளை நிறுத்து உல்கு (சுங்கம்) வாங்கி வேந்தன் முத்திரையைப் பொறித்துக் குன்றுபோற் குவித்து வைத்திருந்தனர். அவற்றிற்குக் கடுமையான காவலிருந்தது.

"வைகல்தொறும் அசைவின்றி
உல்குசெயக் குறைபடாது
..................
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமுடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போல"

*(பட்டினப்: 124-139)*

பல நாடுகளிலிருந்து வந்த பல்வேறு பொருள்கள், காவிரிப்பூம்பட்டினக் கடை மறுகில் மண்டிக் கிடந்தன.

"நீரின்வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"

*(பட்டினப். 155-193)*

நீர் வாணிகத்தின் பொருட்டு, பல்வேறு மொழிகள் பேசும் பல்வேறு நாட்டுமக்கள் காவிரிப்பூம் பட்டினத்தில் வந்து கலந்தினிது வாழ்ந்தனர்.

"மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்" *(பட்டினப். 216-18)*

**"கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்**
**பயனற வறியா யவனர் இருக்கையும்**
**கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்**
**கலந்திருந் துறையும் இலங்கு நீர்வரைப்பும்."**

*(சிலப். 5:9-12)*

யவனர் கிரேக்கர். பின்பு உரோமரும் யவனர் எனப் பட்டார்.

**மேலை யாரியக் கலப் பெயர்கள்**

கலங்கள் முதன்முதல் தமிழகத்திலேயே செய்யப் பட்டன. அதனால், பல கடல் துறைச் சொற்களும் கலத்துறைச் சொற்களும் மேலையாரியத்திலும் கீழை யாரியத்திலும் தமிழாயிருக்கின்றன.

வாரி = நீர், பெரிய நீர் நிலையான கடல். **L. mare, Skt. vari** (வாரி)

வாரணம் = கடல். **L. marinus, E. marina Skt. varuna** (வாருண)

வார்தல் = நீள்தல். வார்—வாரி, ஒ.நோ: நீள்—நீர்.

வார்—வாரணம் = பெரிய நீர் நிலை அல்லது வளைந்த நீர்நிலை.

கரை = கடற்கரை.

**" நாவாய் கரையலைக்குஞ் சேர்ப்ப "** *(நாலடி. 224).*

E. shore = "Land that skirts sea or large body of water" (C. O. D.)

C (k)—sh ஒ. நோ: L. curtus-E. short.

படகு-LL. barca, Gk. baris, E. bark.

ML. barga, variation of barca.

E. barge.

ட—ர. ஒ. நோ: பட்டடை-பட்டரை, அடுப்பங்கடை அடுப்பங்கரை, படவர்-பரவர்.

கொடுக்கு—ME. croc, ON. krokr,
E. Crook. குடகு—E. Coorg.

நாவாய்—L. navis, Gk. naus, Skt. nau,
E, navy (கப்பற்படை)

நாவுதல்-கொழித்தல், நாவாய் கடல்நீரைக் கொழித்துச் செல்வது. "வங்கம்......நீரிடைப் போழ" என்னும் அகப் பாட்டுப் பகுதியை (255 : 1-2) நோக்குக.

கடலையும் கப்பலையும் காணாதவரும் நெடுகலும் நில வழியாய் ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டுவந்தவரு மாகிய இந்திய ஆரியர், நௌ என்னும் (படகைக் குறிக்கும்) வட சொல்லினின்று நாவாய்ச் சொல் வந்த தென்பது, வாழைப் பழத் தொலியை நட்டால் வாழை முளைக்கும் என்பது போன்றதே.

கப்பல்—L. scapha, Gk. skaphos, Ger. schiff, OHG. scif, OS, ON, Ice. Goth, skip, OE. scip. F. esquif, Sp., Port, esquife, It. schifo, E. skiff, ship.

கப்புகள் (கிளைகள்) போன்ற பல பாய்மரங்களை யுடையது கப்பல்.

L. galea, Gk. galaia, E. galley, galleon முதலிய சொற்களும், கலம் என்னும் தென் சொல்லோடு ஒப்பு நோக்கத் தக்கன.

OS. OE. segel, OHG. segal, ON, segl, E. sail, என்னும் சொற்களும் சேலை என்பதை ஒத்திருப்பது கவனிக்கத் தக்கது.

இங்ஙனம், கட்டுமரம் (E. catamaran) முதல் கப்பல்வரை, பலவகைக் கலப் பெயர்கள் மேலை யாரிய மொழிகளில் தமிழாயுள்ளன.

நங்கூரம்—L. ancora, Gk. angkyra, Fr. ancre, E. anchor, Pers. langar.

கவடி-E. cowry.

**மேனாடுகட்கு ஏற்றுமதியான பொருட்பெயர்கள்**

தோகை (மயில்)—Heb, tuki, Ar. tavus, L. Pavus, E. pea (-cock, hen)

அரிசி—Gk., L. oruza, It. riso, OF. ris, E. rice.

இஞ்சிவேர்—Gk-ziggiberis, L. zingiber, OE. gingiber, E. ginger. Skt. srungavera.

இஞ்சிவேர் என்பது தெளிவாயிருக்கவும், வடமொழியாளர் (சருங்க = கொம்பு, வேர = வடிவம்)மான் கொம்பு போன்றது என்று தமிழரை ஏமாற்றியதுமன்றி, மேலையரையும் மயக்கியிருப்பது வியக்கத்தக்கதே.

இஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல்.

திப்பிலி—Gk. peperi, L. piper, ON, pipar, OHG. pfeffar, OE. piper, E pepper, Skt. pippali.

பன்னல் (பருத்தி)—L. punnus, cotton, It. panno, cloth,

கொட்டை (பஞ்சுச்சுருள்)—Ar. qutun, It. cotone, Fr. coton, E. cotton.

கொட்டை நூற்றல் என்பது பாண்டி நாட்டு வழக்கு.

நாரந்தம் (நாரத்தை)-Ar. Pers. naranj, Fr., It. arancio, E. orange.

கட்டுமரம், கலிக்கோ (Calico), தேக்கு (Teak), பச்சிலை (pat houli) வெற்றிலை (betel) முதலிய சொற்கள் கிழக்கிந்தியக் குழும்பார் காலத்திற் சென்றனவாகும். கோழிக்கோட்டிலிருந்து (Calicut) ஏற்றுமதியான துணி கலிக்கோ எனப்பட்டது.

குமரிக் கண்டத் தமிழக்கலவரும் கடலோடிகளும் உலக முழுதும் கலத்திற் சுற்றினமை வடவை (Aurora borealis) என்னும் சொல்லாலும், தமிழர் கடல் வணிகத் தொன்மை,

**"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை"**

என்னும் தொல்காப்பிய நூற்பாவாலும் (980), அரபி நாட்டுக் குதிரையும் ஒட்டகமும் தொல்காப்பியத்திற் குறிக்கப்படுவதாலும், உணரப்படும்.

பேரா. நீலகண்ட சாத்திரியாரும் தாம் எழுதிய திருவிசய (Sri Vijaya) நாட்டு வரலாற்றுத் தோற்றுவாயில், "The more we learn the further goes back the history of eastern navigation' and so far as we know, the Indian Ocean was the first centre of the oceanic activity of man" என்று, தமிழர் முதன் முதல் இந்துமா வாரியிற் கலஞ் செலுத்தியதையும் அவர் கடல் வாணிகத் தொன்மையையும் கூறுமற் கூறியிருத்தல் காண்க.

**"யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"**

என்பது (அகம். 149 : 9-10), கிரேக்கரும் உரோமரும் பொன் கொண்டு வந்து மிளகு வாங்கிச் சென்றதையும்,

**"விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்**
**நனந்தலை தேஎத்து நன்கலன் உய்ம்மார்**
**புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோ டனைத்தும்"**

என்பது (மதுரை. 321-23), அரபியரும் பிறரும் குதிரை கொண்டு வந்து அணிகலம் வாங்கிச் சென்றதையும், கூறும்.

## 12. அரசியல்

முதற் காலத்தில், முழுகிப் போன குமரிக் கண்டம் முழுவதும் பாண்டி நாடாகவும், குமரிமுனை முதல் பனி

மலை வரையும் குடபாதி சேர நாடாகவும் குணபாதி சோழ நாடாகவும், இருந்தன.

பழம் பாண்டிநாடு, தென்பாலி நாடு முதல் குமரி யாறு வரை எழுநூறு காதம் (2001 கல்) நீண்டிருந்தது. பாண்டியன் அதையிழந்தபின், பிற்காலத்துப் பாண்டி நாடாகிய நெல்லை மதுரை முகவை மாவட்டப் பகுதியை, சோழ நாட்டினின்றும் கைப்பற்றி யாண்டான். இதன் உண்மையை,

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

என்னும் முல்லைக்கலித் தரவாலும் (4),

"அங்ஙனமாகிய நிலக் குறைக்குச் சோழ நாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை, இழந்த நாட்டிற்காகவாண்ட தென்னவன்" என்னும் அடியார்க்கு நல்லார் உரையாலும் (சிலப். பக். 303), அறிக.

குமரிக்கண்டம் முழுகி, வடநாட்டுக் கொடுந்தமிழ் திரவிடமாகத் திரிந்து வடநாடு மொழிபெயர் தேயமான பின் தமிழகம் மிகச் சுருங்கி விட்டது. முதற்காலத்தில் பாண்டி நாடு ஐம்மண்டலங்களாகவும், சோழ நாடு புனல் மண்டலம் (புனநாடு) தொண்டை மண்டலம் என இரு மண்டலங்களாகவும், சேரநாடு மலை மண்டலம் கொங்கு மண்டலம் என இரு மண்டலங்களாகவும், பிரிக்கப்பட்டிருந்ததாகத் தெரிகின்றது.

பாண்டியன் ஐந்துணையரசரைக்கொண்டு ஆண்டதால், பஞ்சவன் எனப்பட்டான்.

"பழியொடு படராப் பஞ்சவ வாழி" (சிலப். 20:33). அஞ்சவன் என்ற சொல்லே பஞ்சவன் என்று திரிந் திருத்தல் வேண்டும்.

ஒ. நோ: அப்பளம்—அப்பளமு, அப்படமு (தெ.); அப்பள, பப்பள (க.); பப்படம் (ம.); பர்ப்பட்ட (வ); அப்பா—E papa.

அப்பளித் துருட்டுவது அப்பளம். அப்பளித்தல் — சமனாகத் தேய்த்தல்.

பாண்டியனைக் குறிக்கும் பஞ்சவன் என்னும் பெயர் ஒருமையென்றும், பாண்டவரைக் குறிக்கும் பஞ்சவர் என்னும் பெயர் பன்மை யென்றும், வேறுபாடறிதல் வேண்டும்.

தொண்டை மண்டலம் சோழர் ஆட்சியினின்று நீங்கினது போன்றே, கொங்கு மண்டலமும் சேரர் ஆட்சியினின்று பிற்காலத்தில் நீங்கி விட்டது. கொங்கு மண்டலம் முதலிற் சேரநாட்டின் பகுதியாயிருந்தமை, கொல்லிச் சிலம்பன் என்னும் சேரன் பெயராலும், சேரர் குடியினனான அதிகமான் தகடூரை ஆண்டதினாலும், "சேரர் கொங்குவை காவூர்நனாடதில்" என்று அருணகிரிநாதர் பாடியிருப்பதாலும், வஞ்சிக்குக் கருவூர் என்னும் பெயருண்மையாலும், பிறவற்றாலும், அறியப்படும்.

ஒவ்வொரு நாடும் பல கோட்டம் அல்லது வளநாடு என்னும் பெரும் பிரிவுகளாகவும், ஒவ்வொரு பெரும் பிரிவும் பல கூற்றம் அல்லது நாடு என்னும் சிறு பிரிவுகளாகவும், பிரிக்கப்பட்டிருந்தன. முத்தமிழ் நாடும் ஒரே வேந்தனது ஆட்சிக்குட்பட்ட பிற்காலத்தில், ஒவ்வொரு தமிழ் நாடும் ஒரு பெரு மண்டலமாகக் கருதப்பட்டது. இந்நிலைமை முற்காலத்தில் இல்லை. ஆட்சிபற்றி முந்நாடும் வேறுபட்டவேனும், மொழி பற்றித் தமிழகம் என ஒன்றுபட்டே யிருந்து வந்தன. ஒவ்வொரு கூற்றமும் அதையொத்த நாடும் பல தனியூர்களாகவும் பல சிற்றூர்கள் சேர்ந்த பற்றுக் களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. தனியூர் ஊராட்சியும் பற்று ஊராட்சி யொன்றியமும் ஒத்தன.

ஒவ்வொரு தனியூரிலும் அல்லது பற்றிலும், ஊரவை என்ற அடிப்படையாட்சிக் குழு இருந்தது. அது ஆண்டுதோறும் திருவுளச் சீட்டுப் போன்ற குடவோலையால் தேர்ந்தெடுக்கப்பட்டது. குற்றவாளிகளும் பொறுப்பற்றவர்களும் அதில் இடம் பெறவில்லை. ஊராட்சியின் ஒவ்வொரு துறையையும்

கவனிக்க, வாரியம் என்னும் உட்குழு அமைக்கப் பட்டது. அவ்வாரியங்கள் ஏரி வாரியம், கலிங்கு வாரியம், கழனி வாரியம், தோட்ட வாரியம், குடும்பு வாரியம், பொன் வாரியம், கணக்கு வாரியம், கோயில் வாரியம், தடிவழி (பெருஞ்சாலை) வாரியம், பஞ்சவார வாரியம், ஆட்டை வாரியம் முதலியனவாகும். ஊரவை நடபடிக்கைகளையும் கணக்கையும் எழுதி வைக்க ஊர்க்கணக்கன் என்னும் அலுவலன் இருந்தான்.

பஞ்சவார வாரியம் வரித்தண்டலைக் கவனிப்ப தென்றும், பிற வாரியங்களை மேற்பார்ப்பதென்றும், பலவாறுகக் கூறுவர். அது இயற்கையாகவோ செயற்கையாகவோ உண்டாகும் உணவுப் பஞ்சத்தைத் தடுக்க ஏற்பட்டதாகவும் இருக்கலாம். வழக்குத்தீர்த்து முறை செய்தல் ஆட்டை வாரியத்தின் கடமையாகும். உரிமை (Civil) வழக்கு, குற்ற (Criminal) வழக்கு ஆகிய இரண்டையும் கேட்டு, கொலைத் தண்டம் செய்யவும் அவ்வாரியத்திற்கு அதிகாரமிருந்தது. மன்றுபாடு, தண்டா, குற்றம் எனத் தண்டனை மூவகைப் பட்டிருந்தது.

அமை—அவை. ஒ. நோ: அம்மை—அவ்வை, குமி—குவி. அமைதல் = நெருங்குதல், பொருந்துதல், கூடுதல். அமை = கூட்டம் (முதனிலைத் தொழிலாகு பெயர்.) ஒ. நோ: இமை—குமை. (வ.).

ஒவ்வொரு கூற்றத்தையும் கவனிக்க நாடாள்வான் என்ற அதிகாரியும், ஒவ்வொரு கோட்டத்தையும் மேற் பார்க்க நாடு கண்காட்சி என்ற அதிகாரியும் இருந் தனர்.

"ஊரமை செய்யும் வாரியப் பெருமக்களோம்"

(S. I. I. i, 117).

அவை—சவை—சபா (வ.). ஒ. நோ: வடவை—வடவா (வ.)—படபா (வ.).

அரசன் தலைநகரிலிருந்து ஆண்டு வந்தான். அரச னுக்குக் காவல் தொழிலே சிறப்பாதலாலும், காவலன் புரவலன் என்னும் பெயருண்மையாலும், அரசு

என்பது அரண் என்னும் சொல்லிற்கு இனமாய், பாது காப்பு அல்லது காவல் என்னும் கருத்தை அடிப்படையாய்க் கொண்டதாகத் தெரிகின்றது. அரசு—அரசன்.

**Gk. archon, L. rex, regis, Skt. rajan.**

அரசன்—அரைசன்—அரையன்—ராயன் (கொச்சை)—ராயலு (தெ.).

**E. roy, king, as in Viceroy.**

**ME. royal (adj.) f. OF. roial.**

அரசர் குறுநில மன்னரும் பெருநில மன்னரும் என இரு திறத்தார். சிலவூர்த் தலைவரான கிழவரும் பலவூர்த் தலைவரான வேளிரும் பொருநரும் குறுநில மன்னர். பெருநாட்டுத் தலைவரான சேர சோழ பாண்டியர் மூவரும் பெருநில மன்னர். அவர் முடி சூடியதால் வேந்தர் எனப்பட்டார். குறுநில மன்னர் அவருக்கடங்கிய சிற்றரசர்.

வேய்ந்தோன்—வேந்தன். வேய்தல்—முடியணிதல். கொன்றை வேய்ந்தோனை சிவனைக் கொன்றை வேந்தன் என்று ஔவையார் கூறுதல் காண்க.

மூவேந்தரும் அவர் குடும்பத்தினரும் பொதுவாகக் கோக்கள் எனப்படுவர். குடவர்கோ, கோப்பெருஞ் சோழன், கோயில், கோப்பெருந்தேவி, இளங்கோவடிகள் என்னும் பெயர்களை நோக்குக.

கோவன்—கோன் = இடையன், இடையன் ஆடுகளைக் காப்பதுபோல் மக்களைக் காக்கும் அரசன்.

கோன்—(Turk. Khan) (கான்) என்பர் கால்டுவெல். கோன்—கோ.

மூவேந்தரும், ஐம்பெருங்குழு, எண்பேராயம், உறுதிச் சுற்றம் என மூவகைப்பட்ட பதினெண்கணத் துணைவருடன், ஆட்சி செய்து வந்தனர்.

அமைச்சர், போற்றியர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் என்பவர் ஐம்பெருங் குழுவார். அமைச்சர் அர

சியல் வினைகளை அமைப்பவர் அல்லது அரசனுக்கு நெருங்கியிருப்பவர். அமைதல்—நெருங்குதல். போற்றியர் தமிழப் பூசாரியர். பிராமணர் வந்தபின், போற்றியர் இடத்தில் புரோகிதர் அமர்த்தப்பட்டார். தூதன் என்பது முன் செல்பவன் என்று பொருள்படும் தென் சொல். தூது—தூதன். இவ்விரு சொல்லும் வடமொழியில் தூத (duta) என்று திரியும்.

கணக்கர், கருமத் தலைவர், பொன் சுற்றத்தார் அல்லது பொக்கச சாலையர், வாயிற் காவலர், நகர மாந்தர், படைத்தலைவர், குதிரை மறவர், யானை மறவர் என்பவர் எண்பேராயத்தார். இதிற் படைத் தலைவர் என்பார் தேர்ப்படைத் தலைவராயிருக்கலாம்.

ஆருயிர் நண்பர், அந்தணர், சமையற்காரர், மருத்துவர், கணியர் என்பவர் உறுதிச் சுற்றத்தார்.

இனி, அறிவாலும் அகவையாலும் மூத்த பெரியோரை அரசர் அறிவுரையாளராக அமர்த்திக் கொள்வதுமுண்டு. அவர் முதுகண் எனப்படுவர்.

ஒவ்வோர் அரசியல் துறையும் திணைக்களம் (Department) எனப்பட்டது. அரசிறைத் திணைக்களத் தலைவன் புரவுவரித் திணைக்கள நாயகம் எனப்பட்டான். நிலவரி, தொழில்வரி, வணிகப் போக்குவரத்து வரி, நல்லா நல்லெருது முதலிய இயங்கு திணை வரி, திருமண வரி (கலியாணக் காணம்) காவல் வரி முதலிய பலவகை வரிகள் குடிகளிடம் வாங்கப்பட்டன. நாடுகூறு என்பவன் நிலத்தீர்வையைத் திட்டஞ் செய்பவன். வரியிலார் என்பவர் வருகின்ற வரித் தொகைகளை வாங்கிப் பதிவு செய்பவர். வரிக் கூறிடுவார் என்பவர் பதிவு செய்த வரித் தொகைகளைப் பங்கிடுபவர் அல்லது பாகுபாடு செய்பவர். வரிப் பொத்தகம் என்பவன் நிலவரிக் கணக்கன். புரவு வரி என்பவன் பிற வரிக் கணக்கன். நிலவரி விளைவில் ஆறிலொரு பங்கு கூலமாகவும், பிற வரிகள் குறிப்பிட்ட பணத் தொகையாகவும், வாங்கப்பட்டன. ஊரவையார் அவற்றை வாங்கித் தலைநகரிலுள்ள பண்டாரத்திற்கும் பொக்கச சாலைக்கும் அனுப்பி வந்தனர். நிலவரியைத் திட்டஞ்

செய்ய நிலங்கள் எல்லாம் துல்லியமாய் அளக்கப் பட்டன.

வேந்தன் அமைதிக் காலத்தில் ஒவ்வொரு நாளும் பகலில் முதற் பத்து நாழிகை கொடைக்கும், இடைப் பத்து நாழிகை வழக்குத் தீர்த்து முறை செய்வதற்கும், கடைப் பத்து நாழிகை தன் இல்லற இன்பத்திற்கும் செலவிட்டான். அவன் காலையில் எழுந்தவுடன் பள்ளி யெழுச்சி முரசம் அறையப்படும். எட்டர் என்பவர், அவனுக்கு நாழிகையறிவிப்பவர். அகவர் (சூதர்) என் புவர், நின்று கொண்டு அவன் முன்னோர் பெருமை யைக் கூறி அவனைப் புகழ்ந்து பாடுபவர். ஓவர் (மாகதர்) என்பவர், இருந்து கொண்டு அங்ஙனம் பாடு பவர். ஏத்தாளர் பிற சமையங்களிற் புகழ்ந்து பாடு பவர்.

வேந்தன் தன் கொலு மண்டபத்திற்குச் செல்லும் போதும், அங்கு அமர்ந்திருக்கும் போதும், அதினின்று மீளும் போதும், மெய் காவலர் பக்கத் துணையாவர். பிற நாட்டரசரும் அவர் தூதரும் குறுநில மன்னரும் பதினெண் கணத்தாரும் திணைக்களத் தலைவரும் நாட் டுப் பெருமக்களும் கூடிய கொலு மண்டபத்தில், அரசு கட்டில் என்னும் அரியணையில வேந்தன் வீற்றிருக்கும் கொலு ஓலக்கம் எனப்படும். காலைக் கொலு நாளோ லக்கம் என்றும், அரிதாய்க் கூடும் மாலைக் கொலு அல்லோலக்கம் என்றும் பெயர் பெறும். கொடை வேளை கொடை முரசும் முறை வேளை முறை முரசும் அறைந்து தெரிவிக்கப்பெறும்.

வேந்தன் அரசியற் பணியில் ஈடுபட்டிருக்கும் போதெல்லாம், சில அதிகாரிகள் அவனுடனிருப்பர். அவர் உடன் கூட்டத்தார் எனப்படுவர்.

வேந்தன் அவ்வப்போது இடும் கட்டளைகளைத் திருவாய்க் கேள்வி என்பவர் கேட்டு வந்து, எழுத்தாள ரிடம் அறிவிப்பார். வேந்தன் கட்டளைகளை எழுதுபவர் திருமந்திரவோலை என்பார். அவருக்குத் தலைவரா யிருப் பவர் திருமந்திரவோலை நாயகம் எனப்படுவர். நாள் தோறும் நடப்பவற்றை நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதி வைப்பவர் பட்டோலைப் பெருமான். ஊரவைகளினின்

றும் பிற அதிகாரிகளிடத்திருந்தும் வரும் ஓலைகளைப் படித்துப் பார்த்து, அவற்றிற்குத் தக்க விடையனுப்புவோர் விடையிலார் என்போர். வேந்தன் கட்டளைகள் பதிவு செய்யப்படும் பொத்தகம் கேள்வி வரி எனப்படும்.

நாட்டுத் தலைநகரிலும் கோட்டத் தலைநகரிலும், நிலப் பதிவு செய்யும் ஆவணக் களரியும் அறங் கூறவையம் என்னும் வழக்குத் தீர்ப்பு மன்றமும், இருந்ததாகத் தெரிகின்றது. அரசர் வழக்குக்களையும் அறங் கூறவையத்தாரின் தவறான தீர்ப்புக்களையும், வேந்தனே கவனித்து வந்தான்.

வரிப் பணமும் புதையலும் சிற்றரசரிடும் திறையும் தோற்றுப்போன பகையரசர் கொடுக்கும் தண்டமும், வேந்தன் வருவாய்களாகும்.

பணம், அச்சிட்ட காசாகவும் நிறைப் பொன்னாகவும் இருவகையில் வழங்கிற்று. அக்கம், காசு, காணம், பொன், மாடை முதலியன காசு வகைகள். பொற்காசுகளையும் பொற் கட்டிகளையும் நோட்டஞ் செய்யும் அதிகாரிகள் வண்ணக்கர் என்னப்பட்டார். காசு—E. cash.

கோநகர்க்காவலும் பாடிகாவல் என்னும் ஊர்க்காவலும் போக்குவரத்துச் சாலைக்காவலும், இரவும் பகலும் ஒழுங்காய் நடைபெற்றன.

"நிலன் அகழ் உளியர் கலன் அசைஇக் கொட்கும்
கண்மா றாடவர் ஒடுக்கம் ஒற்றி
வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்
அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணுங்குநுண் தேர்ச்சி
ஊர்காப் பாளர் ஊக்கருங் கணையினர்
தேர்வழங்கு தெருவில் நீர்திரண் டொழுக
மழையமைந் துற்ற அரைநாள் அமயமும்
அசைவிலர் எழுந்து நயம்வந்து வழங்கலின்
கடவுள் வழங்கும் கையறு கங்குலும்

**அச்சம் அறியா தேமமாகிய**
**மற்றை யாமம் பகலுறக் கழிப்பி"**

என்னும் மதுரைக் காஞ்சிப் பகுதி (641-53), மதுரையில் ஊர்காவலர் பெருமழை பொழிந்த நள்ளிரவிலும் ஊக்கமாய்ச் சுற்றி வந்து ஊர் காத்தமையைத் தெரிவிக்கும்.

மருதநிலத் தலைநகரெல்லாம், அகழியாலும் பலவகைப் பொறிகளைக் கொண்ட கோட்டை மதிலாலும் சூழப் பெற்றிருந்தன. கிரேக்கரும் உரோமரும் மதில் வாயிற் காவலராயிருந்தனர்.

**"கடிமதில் வாயில் காவலிற் சிறந்த**
**அடல்வாள் யவனர்"** *(சிலப். 14 : 66-7)*

கரிபரி தேர்கால் என்னும் நால்வகைப் படைகள் வேந்தனுக்கிருந்தன. தெரிந்தெடுக்கப்பெற்ற சிறந்த பொருநரைக் கொண்ட தனிப்படைப் பிரிவுகளுமிருந்தன. அவை "தெரிந்த" என்னும் அடைமொழியால் விதந்து கூறப்பட்டன.

எ-டு : "உத்தம சோழத் தெரிந்த அந்தளகத்தாளர்"
(S. I. I. ii, 97)

அந்தளகம் மெய்ம்மறை (கவசம்).

இனி, வேந்தன் மேல் அளவிறந்த பற்றுடையவராய், அவனுக்குத் துன்பம் நேர்ந்த வேளையில் உயிரைக்கொடுத்துக் காக்கவும் உடன் மாயவும் சூளிட்டுக் கொண்ட போர் மறவருமிருந்தனர். அவர் வேளைக்காரர் எனப்பட்டார். அவர் உயிர் கொடுத்தல் செஞ்சோற்றுக் கடன் கழித்தல் எனப்பட்டது.

வேந்தன் இறந்தபின், அல்லது துறந்தபின், அல்லது கழிபெரு மூப்படைந்தபின், அவன் மூத்த மகன், மூத்த மகன் இல்லாவிட்டால் இளைய மகன், மகனே இல்லாவிட்டால் மகள், மகளும் இல்லாவிட்டால் தகுதியுள்ள நெருங்கிய உறவினன, முடிசூட்டப் பட்டார். தடாதகை யென்னும் கயற்கண்ணியார்

பாண்டிநாட்டையாண்டதையும், சேரமான் பெருமாள் நாயனார் சேரநாட்டையாண்டதையும் காண்க. முடி சூட்டு விழாவிலும் வேந்தன் பிறந்த நாளாகிய வெள் ளணி விழாவிலும், பிற சிறந்த நிகழ்ச்சிகளிலும், கோப் பெருந்தேவியும் உடன் கொலுவிருப்பாள்.

காவிதி என்பது சிறந்த அமைச்சனுக்கும், ஏனாதி என்பது சிறந்த படைத் தலைவனுக்கும், வேள் அல்லது பிள்ளை என்பது சிறந்த குறுநில மன்னருக்கும், மாவரையன் என்பது சிறந்த அரசியற் கருமத் தலைவ னுக்கும், எட்டி என்பது சிறந்த வணிகனுக்கும், சிறு தனம், பெருந்தனம், தலைக்கோல் என்பன நாடகக் கணிகையர்க்கும், வேந்தன் அளிக்கும் பட்டங்களா கும்.

ஏனை + அரி = ஏனாரி (யானைகளை அழிப்பவன்)—ஏனாதி. த—ர ஒன்றிற்கொன்று போலியாக வரும். எ-டு: விதை—விரை, குரல்வளை—குதவளை (கொச்சை யுலக வழக்கு). மாவரையன்—மாவரையம்—மாராயம்.

மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
(தொல். புறத். 8)

அரசியல் வினைஞர் ஊதியத்திற்குக் கைம்மாறாகக் கொடுக்கப்பட்டது, நெல்லும் பொன்னுமாயின் சம் பளம் என்றும், நிலமானியமாயின் உம்பளம் என்றும், பெயர் பெற்றன.

## 13. கல்வி

கல்வி ஒரு குலத்தார்க்கு மட்டும் என்று வரை யறுக்கப்படாது, எல்லாத் தொழில் வகுப்பார்க்கும் பொதுவாயிருந்தது. இதை,

**"தந்தை மகற்காற்றும் நன்றி யவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்."**

என்னும் குறளாலும் (67),

**"ஈன்றுபுறந் தருதல் என்றலைக் கடனே**
**சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே**

**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே."** *(புறம். 312)*

**வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பா லொருவனும் அவன்கட் படுமே."** *(புறம். 183)*

என்னும் புறப்பாட்டுக்களாலும், பல்வேறு தொழிலார் கடைக்கழகக் காலத்துப் புலவராயிருந்தமையாலும், அறியலாம்.

கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார், அறுவை வாணிகன் இளவேட்டனார், இளம் பொன் வணிகனார், மருத்துவன் தாமோதரனார், தண்காற்பூட் கொல்லனார், ஓலைக் கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனார், வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் முதலிய புலவர் பல்வேறு தொழிலரா யிருந்தமை காண்க.

கல்வி பெண்டிர்க்கு விலக்கப்படவில்லை. ஒக்கூர் மாசாத்தியர், ஒளவையார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, நக்கண்ணையார், பாரி மகளிர், பூதப்பாண்டியன் தேவியார், பேய்மகள் இளவெயினி, மாறோக்கத்து நப்பசலையார், வெண்ணிக் குயத்தியார், வெறிபாடிய காமக்கண்ணியார் முதலியோர் பெயர் வெளிவந்த கடைக்கழகக் காலப் புலத்தியர். அக்காலத்துக் குடித்தனப் பெண்டிர் தம் கல்வியறிவை யெல்லாம் இல்லறத்திற்கே பயன்படுத்தியமையால், அவருட் பெரும்பாலார் பெயர் வெளி வரவில்லை. காரைக்காலம்மையார் சிறந்த புலத்தியரா யிருந்தும், கணவரால் விலக்கப்படும்வரை, அவர் பாவன்மை வெளிப்படாதிருந்தமை காண்க. சிவப்பிரகாச அடிகள் காலமான பதினேழாம் நூற்றாண்டிலும், திருக்காட்டுப்பள்ளியில் தெருவில் உப்பு விற்கும் பெண் ஒருத்தி, அடிகள் "நிறைய வுளதோ" என்று பாடி வினவிய வெண்பாவிற்கு விடையாக,

**தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்**
**பொன்னோங்கு சேவடியைப் போற்றினோம்—அன்னோன்**
**திருக்கூட்டம் அத்தனைக்கும் தெண்டனிட்டோம் தீராக்**
**கருக்கூட்டம் போக்கினோம் காண்."**

என்று கடுத்துப் பாடினமை காண்க. கடுத்தல்—விரைதல்.

புகழேந்திப் புலவர் காலமான 14-ஆம் நூற்றாண்டில், உழவன், கொல்லன், தட்டான், தச்சன், மஞ்சிகன் (முடி திருத்தாளன்) முதலிய பல்வகைத் தொழிலாளரும் சிறந்த செய்யுள் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தமையால், பண்டைக்காலக் கல்விப் பரப்பு அறியப்படும். ஆறலைக்கும் கள்வர் கூட அக்காலத்திற் கற்று வல்ல பாவலராயிருந்திருக்கின்றனர்.

இக்காலத்திற்போல் கல்வித் துறை என்னும் அரசியல் துறை அக்காலத்தில்லை. மக்கள் தனிப்பட்ட முறையில், ஆசிரியனுக்குப் பொருள் கொடுத்தும் தொண்டு செய்தும் கற்று வந்தனர்.

**"உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே."**

என்று ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடியிருத்தல் காண்க. (புறம். 183).

கற்பிப்போர் கணக்காயன் என்றும் ஆசிரியன் என்றும் குரு அல்லது குரவன் என்றும் மூவகையர். கணக்காயன் எழுத்தும் சிற்றிலக்கியமும் உரிச் சொல்லும் (நிகண்டும்) கணக்கும் கற்பிப்போன்; ஆசிரியன், பிற்காலத்தில் ஐந்தாக விரிக்கப்பட்ட மூவிலக்கணமும், அவற்றிற்கெடுத்துக் காட்டான பேரிலக்கியமும் கற்பிப்போன்; குரவன் சமய நூலும் பட்டாங்கு (தத்துவ) நூலும் கற்பிப்போன்.

இள மாணவ மாணவியர்க்குக் கணக்கை மிகுதியாகக் கற்பிப்பவன் கணக்காயன்.

ஐயன்—ஆயன் = ஆசிரியன்.
ஆயன்—ஆயான் = தந்தை, தமையன்.

ஆயான்—ஆஞான் = தந்தை.

ஆயான்—ஆசான் = மூத்தோன், ஆசிரியன்.

ஆசாள் = ஆசிரியன் மனைவி, தலைவி.

ஆசு + இரியன்—ஆசிரியன் = குற்றம் நீங்கியவன் அல்லது குற்றங்கெடச் சொல்பவன். ஆசு—குற்றம். இரிதல் கெடுதல். இனி, குற்றப் பகைவன் என்றுமாம். இரியன்—இரிஞன் = பகைவன். ஒ. நோ : கலையன்—கலைஞன். ஆசிரியரும் நூலாசிரியர், நுவலாசிரியர், உரையாசிரியர் என மூவகையர். நுவலுதல் கற்பித்தல். முதலிரு கழக நூலாசிரியரும் தம் நூல்களில் அகவற்பாவையே ஆண்டமையால், அப் பாவிற்கு நூற்பா அகவல், ஆசிரியப்பா என்னும் பெயர்கள் தோன்றின. ஆசிரியன் என்னும் சொல்லை, ஆ—சார்ய (a-carya) என்று பிரித்தும் திரித்தும் வடசொல்லாக்குவர்.

குரு = 1. பருமன்.
2. கனம்.

"பசுமட் குரூஉத் திரள்போல" (புறம். 32).

3. பெருமை (உரி. நி.).
4. அரசன் (பிங்.).
5. ஆசிரியன் (சூடா.).
6. தந்தை.

"குருமொழி சிரத்தில் தாங்கினன்"

(காஞ்சிப்பு. இரேணு. 11).

குரு—குருசில்—குரிசில் = பெருமையிற் சிறந்தோன், தலைவன்.

"போர்மிகு குருசில்" (பதிற்றுப். 31 : 36).

"போர்மிகு பொருந குரிசில்" (திருமுரு. 276).

குரு—குருவன் = சமய வாசிரியன். ஒ. நோ : சிறு—சிறுவன்.

"வானோர் குருவனே போற்றி" (திருவாச. 5, 68).

குருவன்—குரவன் = பெரியோன். அரசன், ஆசிரியன், தந்தை, தாய், தமையன் என்னும் ஐவரும் ஐங்குரவர் எனப்படுதலையும்; இரு பெற்றோரும் இரு முதுகுரவர் எனப்படுதலையும்; நோக்குக.

குரு என்னும் சொல்லிற் ககரத்தை எடுத்தொலித்தும், குரவன் என்னும் சொல்லில் அதனெடு ஈறு திரித்தும், வடசொல்லாகக் காட்டுவர். குருசில் (குரிசில்) குருவன் என்ற வடிவுகள் வடமொழியில் இல்லை.

அக்காலத்திற் பெரும்பாலும் ஒவ்வோர் ஊரிலும் கணக்காயர் பள்ளி இருந்தது.

> "கணக்காயர் இல்லாத வூரும் பிணக்கறுக்கும்
> மூத்தோரை யில்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
> தன்மை யிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
> நன்மை பயத்தல் இல" (திரிகடுகம், 11)

கணக்காயர் பள்ளி பிற்காலத்தில் திண்ணைப் பள்ளிக்கூடமாகச் சிறுத்தது.

கணக்காயனிடம் கற்போனுக்கு மாணி, சட்டன், ஓலைக் கணக்கன் என்றும்; ஆசிரியனிடம் கற்போனுக்கு மாணவன், கற்றுச் சொலலி, மழபுலவன் என்றும், குரவனிடம் கறபோனுக்குக் கேட்போன் என்றும்; பெயர்.

மணி என்பது சிறுமை அல்லது குறுமைப் பொருள்தரும் முன்னொட்டு. மணிக்குடல், மணித் தக்காளி, மணிப்புறு என்னும் வழக்கை நோக்குக.

மணி—மாணி = சிறுவன், கற்போன்.

சட்டம் = எழுதும் ஓலை. சட்டம்—சட்டன் = ஓலைச் சுவடி படிப்போன். சட்டநம்பி = திண்ணைப்பள்ளி மாணவர் தலைவன். சட்டநம்பிப் பிள்ளை—சட்டாம் பிள்ளை.

"ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்" என்பது நாலடியார் (397).

"ஒரு சட்டனை ஒரு சட்டன் பிழைக்கப் பேசுவா னாகில்" என்பது கல்வெட்டு (T. A. S. I. i, 9)

சட்டன் என்னும் சொல்லைச் சாத்ர (chatra) என்று திரித்து, அதனையே தென்சொற்கு மூலமாகக் காட்டுவர் வடமொழியாளர் !

மாணி—மாணவன்—மாணவகன்—மாணாக்கன். மாணவன்—மாணவ (வ.). மாணவகன்—மாணவக (வ.). மாணி, மாணாக்கன் என்னும் வடிவங்கள் வட மொழியில் இல்லை. மாணவம் என்பது கல்வி

கற்கப்படும் ஏட்டுக் கற்றைகள், ஏடு, சுவடி, பொத் தகம், பனுவல், நூல் எனப் பலபெயர் பெறும். முன் மூன்றும் ஓலைக் கற்றையைச் சிறப்பாகவும், பின் னிரண்டும் உட்பொருளைச் சிறப்பாகவும், குறிக்கும்.

பொத்தகம் என்பதே பழைய வடிவம்.

"நிறைநூற் பொத்தகம் நெடுமனை யேற்றி"
(பெருங். உஞ்சைக். 34, 26)

'வரிநெடும் பொத்தகத்து' (கோயில் நான்மணி மாலை)

"வரிப் பொத்தகம்" (T. A. S. I. i, 166).

பொத்துதல் சேர்த்தல். சுவடி சேர்த்தல் என்னும் வழக்கை நோக்குக.

பொத்தகம்—புஸ்தக (வ)—புஸ்தக் (இ). பனுவல் பாடல் (பிரபந்தம்). நூல் என்பன இலக்கணமும் அறி வியலும்.

கற்கும் இடங்கள் பள்ளி (திவ். பெரியதி. 2, 3, 8) என்றும், ஓதும் பள்ளி (திவா) என்றும், கல்லூரி (சீவக. 995) என்றும் பெயர் பெற்றன.

பள்ளி=படுக்கை, படுக்கையறை, படுக்கும் வீடு, வீடு போன்ற கோயில் அல்லது மடம், கல்வி கற்கும் மடம், கல்விக்கூடம். பள்ளி—பல்லி (வ.).

பள்=பள்ளம், தாழ்வு, தாழ்வாகக் கிடத்தல், தூங்குதல்.

பள்—படு—படை, படுக்கை.

கற்ருேர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பிருந்தது. வேந்தரைப் புகழ்ந்து பாடிய புலவர்க்குச் சிறந்த பரிசும் முற்றூட்டும் (சர்வ மானியமும்) அளிக்கப் பட்டன.

பாண்டியர் தலைசிறந்த புலவரை யெல்லாங்கூட்டி, தமிழ்க் கழகம் நிறுவிப் போற்றினர்.

புலவரின் பாடல்களும் நூல்களும், பாண்டியர் தமிழ்க் கழகத்தில் குற்றமற்றவையென ஒப்புக்கொள் ளப்பட்டாலொழிய, உலகில் வழங்கா. அங்ஙனம் ஒப்பம் பெறுதல் அரங்கேற்றம் எனப்பட்டது.

நாடகக் கணிகையரின் ஆடல் பாடல்களும் வேந்தர் முன்னிலையிலேயே அரங்கேற்றப்பட்டன. அரங்கேறிய கணிகையர் தலைக்கோற்பட்டமும் ஆயிரத் தெண் கழஞ்சு பரிசமும் பெற்றனர்.

இத்தகைய அரங்கேற்ற முறையால், அக்காலத்துக் கல்வி தலைசிறந்திருந்தது. அரைப் படிப்பினரும் திரிபுணர்ச்சியரும் தலையெடுக்க இடமில்லை, பல துறையிலும் புலமை பெற்ற பேரறிஞர், தவருகக் கற்பித்து மக்களைக் கெடுப்பவரைக் கொடிகட்டி அறைகூவி வரவழைத்து, சொற் போர் புரிந்து தோற்கடித்துத் தண்டித்து அறிவு புகட்டுவதும் அக்கால வழக்கம்.

**"பல்கேள்வித் துறைபோகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்**
**உறழ்குறித் தெடுத்த உயர்கெழு கொடி"**

(பட்டினப். 167-171)

(கடைக்கழகக் காலத்துப் பல்வேள்வி முதுகுடுமிப் பெருவழுதி ஆரியத்தைப் போற்றித் தமிழைப் புறக் கணித்த பின், கழகம் கலைக்கப்பட்டது. பிழைப்பு வழி யில்லாப் புலவரெல்லாரும், பெரும்பாலும் சிற்றரசரை யடுத்தும் புகழ்ந்தும் வாழ்ந்தனர்.)

கல்வி என்னும் சொல், கல் என்னும் முதனிலையி னின்று தோன்றியதாகும். கல்லுதல் தோண்டுதல், மாந்தன் முதன் முதற் கற்ற கல்வி உழவுத் தொழி

லாதலால், கல்வி என்னும் சொல் முதலில் உழவுத் தொழிலையே குறித்திருத்தல் வேண்டும். ஆங்கிலத்தில் நிலப் பண்பாட்டையும் உளப்பண்பாட்டையும் ஒருங்கே உணர்த்தும் Culture, Cultivation என்னும் இரு சொற்களும், Col என்னும் ஒரே இலத்தீன் வேர்ச் சொல்லினின்று தோன்றியிருப்பது, இங்குக் கவனிக்கத் தக்கது.

## 14. கலைகள்

பயிற்சியாற் கற்கப்படுவன கலைகள்.

### (1) இசை

குமரிக்கண்டத் தமிழர் நுண்மாண் நுழை புலத்தராயும் தலைசிறந்த நாகரிகராயும் எஃகுச் செவியராயுமிருந்ததினால், ஏழு பேரிசையும் ஐந்து சிற்றிசையுமாகிய பன்னீரிசையை (சுரத்தை)யும் கண்டு ஆயப்பாலை என்னும் முறையில் ஏழுபாலைப் பண்களைத் திரித்ததுமன்றி, அப்பன்னீரிசையையும் வட்டப்பாலை என்னும் முறையில் 24 ஆகவும், திரிகோணப்பாலை என்னும் முறையில் 48 ஆகவும் சதுரப்பாலை என்னும் முறையில் 96 ஆகவும், நுட்பமாய்ப் பகுத்து எல்லையற்ற இசைப் பேரின்பத்தை நுகர்ந்திருக்கின்றனர். பன்னீரிசைக்கு மேற்பட்ட நுண்ணிசையினை எடுத்துக் கூறும் நூலே 'இசை நுணுக்கம்' போலும்! ஏழிசையும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப் பெயர் பெற்றன. சிற்றிசை ஆகணம் என்றும், குரலும் இளியுமல்லாத பேரிசை அந்தரம் என்றும் சொல்லப்பட்டன.

திரி, சதுரம் என்னும் சொற்கள் தமிழே என்பது என் வடமொழி வரலாற்றில் விளக்கப்பெறும். சதுர் என்பது, நான்கு என்னும் எண்ணுப் பொருளிலன்றி, நாற்கோணம் என்னும் வடிவுப்பொருளில் வடமொழியிலில்லை.

அகநிலை மருதம், புறநிலை மருதம், அருகியல் மருதம், பெருகியல் மருதம் என்னும் பண் வகுப்பும்,

கிழமை நிறைகுறை என்பனவும், தமிழரின் இசை நுணுக்கத்தைக் காட்டும்.

இக்காலத்து ஆரிய இசையறிஞர், பண்டைத் தமிழரின் அறிவு நுணுக்கத்தை ஓராது, தம்போல் அவரையுங் கருதி 96 இசைகள் பாடற்கியலாதவை என்பர்.

இசைக் கருவிகள் தோல், துளை, நரம்பு, வெண் கலம் (கஞ்கலம்) என நால்வகைப் பட்டிருந்தன.

தோற் கருவிகள் ஆடல் முழா, பாடல் முழா, பொது முழா என்றும்; அகமுழவு, அகப்புற முழவு, புறமுழவு, புறப்புற முழவு, பண்ணமை முழவு, நாள் முழவு, காலை முழவு, என்றும்; மணப்பறை, பிணப் பறை என்றும்; வகுக்கப்பட்டிருந்தன. பறை என்பது தோற்கருவிப் பொதுப் பெயர். "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை" (தொல். 964).

இன்னிசைத் துளைக் கருவிகள் புல்லாங் குழல், இசைக்குழல் (நாதசுரம்), முகவீணை என்னும் ஏழிசைக் குழல்களாகவும்; ஒத்து (ஊமைக் குழல்), என்னும் ஓரிசைக் குழலாகவும்; இருவகைப் பட்டிருந்தன. தாரை, சின்னம், வாங்கா, கொம்பு, சங்கு முதலிய ஓரிசைத் துளைக் கருவிகள், ஊர்வலம் போர் முதலிய நிகழ்ச்சிகளில் ஆரவார இசைக் கருவிகளாய்ப் பயன் படுத்தப்பட்டன. மகுடி என்பது நல்ல பாம்பை மயக்குதற்கென்றே அமைக்கப்பட்ட ஏழிசைச் சிறப் பின்னிசைக் குழலாகும்.

நரப்புக் கருவிகள் ஒரு நரம்புள்ள சுரை யாழிலிருந்து ஆயிரம் நரம்புகள் பெருங்கலம் (ஆதி யாழ்) வரை, பல்வேறு வகைப்பட்டிருந்தன. அவற் றுள், பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங் கோட்டியாழ் என்னும் நான்கும் சிறந்தவை. அவற் றுள்ளும் தலைசிறந்தது செங்கோட்டியாழ். அதுவே பின்னர் வீணையாகத் திரிந்தது. ஆயிரம் நரம்பென் பது, ஆயிரங்காற் பூச்சி என்பதிற்போல், நரம்பின் பெருந்தொகையையே குறிக்கும்.

"இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்" என்னும் திருவாசகக் கூற்று (369) செங்கோட்டி யாழ் வீணையென்று சிறப்புப் பெயர் பெற்ற மையையே காட்டும். எல்லா நரப்புக்கருவிகளும் யாழே. வீணை என்னும் பெயரும் விண் என்னும் வேரினின்று பிறந்த தென்சொல்லே. அது வடமொழியில் வீணு என்று திரியும். விண்ணெனல் நரம்பு தெறித்தொலித் தல். விண்-வீணை முதுகுன்றம் (பழமலை) விருத்தாசல மென்று பெயர் மாறியதால் வேறு நகரமாகிவிடாது. அங்ஙனமே வீணையெனப் படும் செங்கோட்டியாழும் என்க.

இரண்டாம் நூற்றுண்டினதான சிலப்பதிகாரத்தில் "நாரதன் வீணை நயந்தெரி பாடலும்" என்றும், 7-ஆம் நூற்றுண்டினதான அப்பர் தேவாரத்தில "மாசில் வீணையும்" என்றும், வருதலால், வீணை 11-ஆம் நூற் ருண்டில் தோன்றியதென்பது பொருந்தாது. வேத கால நாரதர் தமிழ்நாடுவந்தே இசைகற்றுப் பஞ்சபார தீயம் என்னும் இசைத் தமிழ் நூலை இயற்றினுர். பத்தாம் நூற்றுண்டினதான சீவக சிந்தாமணிக் காந்தருவதத்தையிலம்பகத்தில், யாழென்றும் வீணை யென்றும் ஒரே கருவி குறிக்கப்படுவதால், யாழ் வேறு வீணை வேறு அல்ல. இக்காலத்தில் சுரையாழும் வீணையென்றே பெயர் பெற்றிருத்தல் காண்க.

திருஞான சம்பந்தர் பாடிய யாழ்முரிப் பண்ணின் இயல்பு இன்று எவருக்கும் தெரியாமையால், யாழ்முரி வீணைக்கமையும் என்பதும் பொருந்தாது.

தாளக் கருவி வெண்கலத்திஞற் செய்யப்பட்டதி ஞல், அது வெண்கலக் கருவியெனப்பட்டது. சல் அல்லது சல்லரை என்னும் ஓசையுடைமையால், தாளக் கருவியிற் பெரியது சல்லரியென்றும் சிறியது சாலர் என்றும் பெயர் பெற்றன.

குரல் என்பது 'ம' என்னும் 5-ஆம் இசையென் றும், ஒரு நரம்பில் ஒரேயிசை யெழூஉம் நரப்புக் கரு வியே தமிழரது என்றும், கூறுவார் தமிழராயினும் இசைத் தமிழ் அடிப்படையே அறியாதார் ஆவர். "குரல் முதலேழும்' என்று இளங்கோவடிகளும்

(சிலப். 5:35), "முதற்றானமாகிய குரலிலே" என்று புறநானூற்று உரையாசிரியரும் (புறம். 11), "மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி" என்று வன்பரணரும் (புறம். 152), கூறியிருத்தலையும், அவர் கவனித்திலர்.

குரல் என்னும் சொல்லே, இயல்பான குரலாகிய முதலிசையையே குறிக்கும். சுரையாழும் பெருங்கலமுமே வில்யாழ் (Harp) போல் மெட்டின்றி ஓரிசைக்கொரு நரம்பு கொண்டவை. பேரியாழ் முதலிய பிறயாழெல்லாம் மெட்டுக்களோடுகூடி, ஒரே நரம்பில் பல விசையிசைக்கக்கூடிய பண்மொழி நரம்புகள் கொண்டனவாகவே தெரிகின்றன.

பண்களை, ஏழிசையுமுள்ளவை பண் என்றும், ஆறிசையுள்ளவை பண்ணியல் என்றும், ஐயிசையுள்ளவை திறம் என்றும், நாலிசையுள்ளவை திறத்திறம் என்றும், நால்வகையாக வகுத்திருந்தனர். இந்நால்வகைப் பண்களும் மொத்தம் 11,991 எனக் கணிக்கப்பட்டிருந்தன.

"இசையாவது, நரப்படைவால் உரைக்கப்பட்ட பதினோராயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்றாகிய ஆதியிசைகளும்; அவையாவன: "உயிருயிர்...கடனே" என்னுஞ் சூத்திரத்தான் உறழ்ந்து கண்டுகொள்க" என்று சிலப்பதிகார அருஞ்சொல்லுரைகாரர் (பக்.64) கூறியிருத்தல் காண்க. பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன நாற்பெரும் பண்கள். இவற்றுள் ஒவ்வொன்றும் பல திறங்களாகவும் ஒவ்வொரு திறமும் பலவகைகளாகவும் பகுக்கப்பட்டிருந்தன.

ஏழிசையும் சேர்ந்த ஒரு வரிசை அல்லது கோவை நிலையெனப்படும். சிறந்த பாடகரின் தொண்டையில் கீழும் இடையும் மேலுமாக முந்நிலையிருப்பதால், அவற்றிற்கேற்ப நால்வகைச் சிறப்பியாழும் நரம்பும் மெட்டும் அமைக்கப் பெற்றன. முந்நிலையும், முறையே மெலிவு, சமன், வலிவு எனப் பெயர் பெற்றன. நால்வகையாழிலும் மெட்டுத் தொகை வேறுபட்டிருந்ததாகத் தெரிகின்றது.

பண்மொழி நரம்பு ஏழும் ஒற்று நரம்பு மூன்றும் ஆர்ப்பு நரம்பு பதினொன்றுமாக, 21 நரம்புகள் பேரி யாழிலும்; பண்மொழி நரம்பு இரண்டு குறைந்து 19 நரம்புகள் மகரயாழிலும்; ஆர்ப்பு நரம்பு ஐந்து குறைந்து 14 நரம்புகள் சகோடயாழிலும்; ஆர்ப்பு நரம்பு அடியோடு இல்லாதும் பண்மொழி யிரண்டு குறைந்தும் இற்றை வீணையிற்போல் 7 நரம்புகள் செங்கோட்டி யாழிலும்; இருந்ததாகக் கருதலாம். ஒன்பது நரம்புள்ள முண்டகயாழ் 4 பண்மொழி நரம்பும் 3 ஒற்று நரம்பும் 2 ஆர்ப்பு நரம்பும் கொண்டது போலும்!

தரப்புச் சித்தார் என்னும் முகமதியர் நரப்பிசைக் கருவியில், இன்றும் 11 ஆர்ப்பு நரம்புகள் கட்டப்பெறு தல் காண்க. அவற்றினால் உண்டாகும் அதிர்வு இசை யினிமையைக் கெடுத்ததினால், அவற்றை வரவரக் குறைத்து வந்து இறுதியில் அடியோடு நீக்கிவிட்ட னர். இசையின்ப வுணர்ச்சி பெருகப் பெருக, யாழ்கள் திருந்தி வந்திருக்கின்றன வரவரத் திருந்துதலே யன்றித் திருந்தாமை இயற்கையன்று. அநாகரிக மாந்தர் இசைக் கருவிகளின் ஓசை மிகுதியையும், நாகரிக மக்கள் அவற்றின் இனிமை மிகுதியையும், இன்றும் விரும்புதல் இயல்பாயிருத்தல் காண்க.

யாழ்ப்பத்தரின் மூடியாகிய போர்வை, முன்பு தோலாயிருந்து பின்பு பாதுகாப்பிற்காக மரமாக மாற்றப் பெற்றது. யாழின் அமைப்பை அறிய விரும்புவார், தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் மகனார் வரகுண பாண்டியனார் ஆராய்ந்தெழுதிய 'பாணர் கைவழி' என்னும் நூலைப் பார்க்க. அருட்டிரு விபுலா னந்த அடிகளின் யாழ்நூல் அடிப்படையில் தவறிய தால் முதற்கோணல் முற்றுங்கோணலாய்ப் போயிற்று.

உலகிற் சிறந்த இசை இந்திய இசையே. அதிற் சிறந்தது தமிழிசை. அதையே இன்று உழையிசை யடிப்படையில் தாய்ப் பண்களையும் கிளைப் பண்களை யும் வகுத்தும், பழந்தமிழ்க் குறியீடுகளையும் பண்ணுப் பெயர்களையும் வடசொல்லாக மாற்றியும், கருநாடக சங்கீதம் எனப் பெயரிட்டு வழங்கி வருகின்றனர்.

கேள்வியைச் சுருதி யென்றும், நிலையை ஸ்தாய் என்றும், மொழிபெயர்த்திருத்தல் காண்க. கருநாடக சங்கீதத்திற்கு இலக்கணம் வகுத்தவேங்கடமகியும் (17-ஆம் நூற்.) அதற்கு இலக்கியமாகத் தெலுங்கு கீர்த்தனைகள் பாடிய தியாகராசரும் (18-ஆம் நூற்.) தமிழ் நாட்டில் வாழ்ந்தவரே.

கொட்டு, அசை, தூக்கு, அளவு என்னும் நாலுறுப்புக்களையுடைய தாளத்தை, அகக் கூத்திற்குரிய பதினொரு பாணிகளும் புறக்கூத்திற்குரிய நாற்பத்தொரு தாளமுமாக, ஐம்பத்திருவகைப்படுத்தியிருந்தனர்.

ஏழிசைக்குரிய எழுத்துக்கள் முதற்காலத்தில் ஏழ் உயிர் நெடில்களாயிருந்தன. அவை நிறவாளத்தி என்னும் சிட்டையிசைக்கு ஏற்காமையால் ச ரி க ம ப த நி என்னும் எழுத்துக்கள் நாளடைவிற் கொள்ளப்பட்டன. இவை ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னும் வடசொற்களின் முதலெழுத்துக்களாகச் சொல்லப்படுகின்றன. இக்கொள்கை மத்தியமம் பஞ்சமம் என்னும் இரண்டிற்கே ஏற்கும். சமன் பட்டடை என்னும் இரு தென் சொற்களின் முதலெழுத்துக்களே ச ப என்பது, சிலர் கருத்து. இவையிரண்டுமன்றி, இசையின்பத்திற் கேற்ற ஏழெழுத்துக்கள் நாளடைவிற் பட்டறிவினின்று தெரிந்துகொள்ளப்பட்டன என்பதே, பெரும்பால் தமிழிசைவாணர் கருத்தாம்.

பன்னிரண்டாம் நூற்றுண்டுவரை, இசைப்பாணரும் யாழ்ப்பாணரும் குழற்பாணரும் மண்டைப்பாணருமான நால்வகைப் பாணரே பெரும்பாலும் தமிழ் நாட்டில் இசைவாணராயிருந்து தமிழிசையைப் போற்றி வந்தனர். "பாண் சேரியில் பாட்டுப் பாடுகிறதா?" என்னும் பழமொழியும், திருமுறைகண்ட சோழன் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த ஒரு பெண்ணைக் கொண்டு தேவாரத்திற்கு இசை வகுப்பித்தமையும், இதை வலியுறுத்தும். ஆரியக் குலப்பிரிவினை ஏற்பட்டபின், பாணர் தீண்டாதவராகித் தம் தொல்வரவுப் பாண்தொழிலை இழந்தனர். எழூஉம்

இசைத் தொகையினின்று தோன்றிய ஏழ் என்னும் எண்ணுப் பெயரும்,

> **"தெய்வம் உணவே மாமரம் புள்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருவென மொழிப."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவும் (அகத். 18), தமிழிசையின் தொன்மையை உணர்த்தும். "இனி இசைத் தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவ விருடி நாரதன் செய்த பஞ்ச பாரதீய முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன" எனனும் அடியார்க்கு நல்லார் கூற்றால், வடமொழி யிசை நூல் கட்கெல்லாம் தமிழ்நூல்களே முதனூலென அறிக.

> **"அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்**
> **உளவென மொழிப இசையொடு சிவணிய**
> **நரம்பின் மறைய என்மனார் புலவர்."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் (33), தமிழிசை யின் யாழ்ச் சிறப்பு உணரப்படும். இதன் விரிவை என் 'முத்தமிழ்' என்னும் நூலிற் காண்க.

## (2) நாடகம்

நாடகம் என்பது தென்சொல்லே. நள்ளுதல் - பொருந்துதல், ஒத்தல். நள்—நளி. நளிய என்பது ஓர் உவமவுருபு. நளிதல் ஒத்தல். நளி—நடி ஓ. நோ: களிறு—கடிறு. நடித்தல் என்பது, இன்னொருவனைப் போல் அல்லது இல்லாததை உள்ளது போலச் செய்து காட்டுதல்.

நடி—நடம்—நட்டம்—ந்ருத்த (வ.)
ஓ. நோ: வட்டம்—வ்ருத்த (வ.)
நட்டம்—நட்டணம், நட்டணை.
நட்டம்—நட்ட (பிரா.)
ஓ. நோ: வட்டம்—வட்டணம், வட்டணை.
நட்டணம்—நர்த்தன (வ.)
நட்டம்—நட்டுவன். ஓ. நோ: குட்டம்-குட்டுவன்.

நடி—நடனம். ஒ. நோ: படி—படனம்=படிப்பு.
நடி—நாடகம். ஒ. நோ: படி-பாடகம்=பாதத்திற் படிந்து கிடக்கும் அணி.

முத்தமிழ் தொன்றுதொட்டு இயலிசை நாடகம் என்றே வழங்கும்.

நாடகக் கலை கூத்து, நடனம், நாடகம் என முத்திறப்படும்.

குதித்தாடுவது கூத்து. அது வேத்தியல், பொதுவியல்; உலகியல், தேவியல்; வசைக் கூத்து, புகழ்க் கூத்து; வரிக்கூத்து வரியமைதிக் கூத்து (வரிச்சாந்திக் கூத்து); அமைதிக் கூத்து (சாந்திக் கூத்து), வேடிக்கைக் கூத்து (விநோதக் கூத்து); அகக் கூத்து, புறக் கூத்து; விளையாட்டுக் கூத்து, வினைக் கூத்து; வெற்றிக் கூத்து, தோல்விக் கூத்து; எனப் பல்வேறு வகையில் இவ்விருவகைப்படும்.

நடனம் அல்லது நடம் என்பது, அழகுற ஆடுவது. அது நூற்றெட்டு உடற்கரணங்களோடும் கைகால் கண்வாய் முதலிய உறுப்புக்களின் தொழில்களோடும் கூடியது. கைவினைகள் எழிற்கை தொழிற்கை, பொருட்கை என முத்திறப்பட்டு, பிண்டி அல்லது இணையா வினைக்கையெனப்படும் ஒற்றைக்கை வண்ணம் முப்பத்து மூன்றும், பிணையல் அல்லது இணைக்கை யெனப்படும் இரட்டைக்கை வண்ணம் பதினைந்தும், கொண்டனவாகும்.

நடம் நடனம் என்னும் தென்சொற்கள், வடமொழியில், நட்ட நட்டன என்று வலிக்கும். நட்ட என்பதினின்றும் நாட்ய என்னும் சொற்பிறக்கும்.

நடி என்னும் முதனிலை வடமொழியில் இல்லை. நிருத்த என்னும் சொல்லின் ந்ருத் என்னும்அடியையே முதனிலையாக ஆள்வர்.

தமிழ் நடனம் இன்று பரத நாட்டியம் என்று வழங்குகின்றது. பரத சாத்திரம் வடமொழியில் இயற்றப்பட்டது கி. மு. 4-ஆம் நூற்றாண்டாகும். அதற்கும் முந்தியது தமிழ்ப் பரதமே யென்பதை,

"நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்திய முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன," என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரவுரைப் பாயிரத்திற் கூறியிருப்பதால் அறிந்து கொள்க.

நாடகம் என்பது கதை தழுவிவரும் கூத்து. அது பொருள், கதை (யோனி), தலைமை (விருத்தி), நிலை (சந்தி), சுவை, வகுப்பு (சாதி), குறிப்பு, விறல் (சத்துவம்), நளிநயம் (அபிநயம்), சொல், சொல்வகை, வண்ணம், வரி, சேதம் என்னும் பதினான் குறுப்புக்களையுடையது.

நாடக அரங்கு நல்ல கெட்டி நிலத்தில், ஈரடி நீளமுள்ள கோலால், எண்கோல் நீளமும் எழுகோல் அகலமும் ஒருகோல் உயரமும் உள்ளதாக அமைக்கப்பட்டு, மேலே முகடும், ஒரு முகவெழினி பொருமுக வெழினி கரந்துவர லெழினி என்னும் மூவகைத் திரைகளும், புகுவாயில் புறப்படுவாயில் (Exit) என்னும் இருவாயில்களும், உடையதாயிருந்தது.

தமிழ் நாடகமெல்லாம் இசைப்பாட்டுள்ளவையே (Operas).

நாடகம் என்பது நாட்டக்க என்றும், அரங்கு அரங்கம் என்பன ரங்க என்றும், வடமொழியில் திரியும்.

அர்—அரங்கு = அறை, அரங்கு—அரங்கம் = நாடக மேடை, நாடகசாலை, விளையாடிடம், படைக்கலம் பயிலுமிடம், போர்க்களம், ஆற்றிடைக் குறை, திருவரங்கம்.

இசை நாடகம் என்பவற்றின் விரிவை என் 'முத்தமிழ்' என்னும் நூலிற் கண்டு கொள்க.

(3) **மடைநூல் :**

மடை = சோறு, உணவு. மடைநூல் சமையல் நூல்.

"**கந்துகக் கருத்தும் மடைநூற் செய்தியும்**" *(மணி. 2: 22)*

என்பது தமிழில் மடை நூலிருந்தமையைத் தெரிவிக்கும்.

"காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப்
பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்
பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வே றடிசில்"

என்று சிறுபாணாற்றுப்படை (238—41)கூறும் வீமன் மடைநூல், தமிழ் மடை நூலைத் தழுவியதேயென்பது அதன் பின்மையாலும், அவன் பாண்டியர் குடியான திங்கள் மரபினனாயிருந்தமையாலும், அறியப்படும். நளனும் திங்கள் மரபினனே.

## (4) மருத்துவம்

தமிழ் மருத்துவக் கலை சித்தரால் வளர்க்கப் பெற்றது. அதனால் அது சித்த மருத்துவம் எனப் பெறும். கட்டிகளையும் பிளவைகளையும் கரைப்பதும், ஒடிந்த எலும்பை ஒட்டவைப்பதும், முதியவரை இளைஞராக்குவதும், நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழ்விப்பதும், சித்தமருத்துவம்.

"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று" (குறள். 941

ஆதலால், ஊதை (வாதம்) பித்தம் கோழை என்னும் முந்நாடியையும் நாடி அதனால், இற்றைக் கருவிகளைக் கொண்டு தலைசிறந்த தேர்ச்சி பெற்ற மேலை மருத்துவரும் கண்டுபிடிக்க முடியாத.

"நோய்நாடி நோய்முதல் நாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்" (குறள். 648)

சித்த மருத்துவனின் தெய்வத்திறமாம்.

நுள்—நள்—நாளம்—நாளி—நாழி—நாடி.

நாடி பார்க்கும் திறமில்லாதான் மருந்தனே யன்றி மருத்துவனாகான். இந்திய மருத்துவம் சித்தமருத்துவமே. ஆயுர்வேதம் என்னும் ஆரிய மருத்துவம், சித்தமருத்துவத்தின் வடநாட்டுவகையே. சேரவேந்தர்

இருந்தவரை சித்தமருத்துவமாயிருந்த மலையாள மருத்துவம், இன்று ஆரிய மருத்துவமாய் மாறியிருத்தல் காண்க. ஒரே நோய்க்குப் பல மருந்துகள் உள. மருந்துகள் இடந்தோறும் வேறுபடும். ஆயின், மருத்துவமுறை ஒன்றே. ஆரிய மருத்துவம் வேர்களை மிகுதியாகக் கொண்டதென்றும், சித்த மருத்துவம் செந்தூரத்தை மிகுதியாகக் கொண்டதென்றும், சிலர் கூறுவர். அவர் அறியார். "வேர்பார், தழைபார், மெல்ல மெல்லச் செந்தூரச் சுண்ணம் பார்." என்பது சித்தமருத்துவப் பழமொழியாகும். "ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை மருத்துவன்." என்பது "ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை மருத்துவன்" என்றும் வழங்கும். சிறுபஞ்சமூலம், பெரும்பஞ்சமூலம் என்னும் ஈரைந்து வேர்களும், தமிழ் நாட்டிலேயேவிளையும் தமிழ் மருந்துச் சரக்காம். மருந்து என்னும் பெயரே மண முள்ள வேரையும் தழையையும் தான் குறிக்கும். மரு = மணம். மரு—மருந்து.

சித்த மருத்துவத்தின் சிறந்த மருந்து, மூவகை உப்புச் சேர்ந்த முப்பு என்பதாகும். அது இரும்பு முதலியவற்றைப் பொன்னுக்கவும் ஓரிலக்கம் ஆண்டு கள் உயிர்வாழச் செய்யவும் வல்லதென, அதன் ஆற்றலை உயர்வுநவிற்சியாகக் கூறுவர்.

"நெடு நாளிருந்த பேரும், நிலையாகவேயினும் காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணுவர்" என்று தாயுமானவர் கூறியது, முப்பை நோக்கித்தான் போலும்!

அறுவை (Surgery) முறையும் சித்தமருத்துவத்திலிருந்தமை

**"மீன்தேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்**
**சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி**
**நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்**
**அம்புசேர் உடம்பினர்"** (பதிற். 42 : 2-5)

(கயம் மூழ்கிச் சிரல் பெயர்ந்தன்ன நெடுவெள்ளூசி = குளத்திலே முழுகிச் சிச்சிலிக் குருவி எழுகின்றகாலத்து அதன் வாயலகைப் போல, புண்களை நூலால்தைக்கும்

போது அப்புண்ணின் அரத்தத்தில் மறைந்தெழுகின்ற நீண்ட வெள்ளையான ஊசி. நெடுவசி = நீண்ட ஊசித் தழும்பு. வடு = காய்ப்பு.)

என்னும் பதிற்றுப் பத்தடிகளாலும்,

> **"உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்ததன் உதிர மூற்றிச்**
> **சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினால் துயரம் தீர்வர்"**
>
> (கம்பரா. கும்ப. **146**)

> **"ஆரார் தலைவணங்கார் ஆரார்தாம் கையெடார்**
> **ஆரார்தாம் சத்திரத்தில ஆருதார்—சீராரும்**
> **தென்புலியூர் மேவும் சிவனருள்சேர் அம்பட்டத்**
> **தம்பிபுகான் வாசலிலே தான்."**

என்னும் கம்பர் பாட்டுக்களாலும் அறியப்படும்.

மருத்துவத்தின் இன்றியமையாமை யறிந்தே, பண்டைக்காலத்தில் ஊர்மருத்துவனுக்கு இறையிலி நிலம் மானியமாகவிடப்பட்டது. அதுமருத்துவப்பேறு எனப்பட்டது. (S. I. I, ii. 43).

உலகிற் சிறந்த சித்தமருத்துவம், ஊக்கு வாரின்றி நாளுக்கு நாள் மறைந்தும் குறைந்தும் வருகின்றது.

குழந்தை மருத்துவம், பேறுகால மருத்துவம், அரசமருத்துவம் (விலக்கமற்றது), நஞ்சு மருத்துவம், மாட்டு மருத்துவம் என்பன, சித்த மருத்துவத்தின் சிறப்புக் கூறுகளாகும். விலக்கம் பத்தியம்.

நீர், கருக்கு (கஷாயம்) குழம்பு, நெய் அல்லது எண்ணெய் (கிருதம்), களிம்பு, மெழுகு (லேகியம்), குளிகை, நீறு (பஸ்பம்) முதலிய பல வடிவிலும் சித்த மருந்துகள் உண்டு. ஒவ்வொரு நோய்க்கும் ஒவ்வொரு புறத்தை உரசும் மாத்திரைக் கட்டிகளும் உள.

குளிகை—குளிகா (வ.). செந்தூள்—செந்தூளம்—செந்தூரம்—சிந்தூரம்—ஸிந்தூர(வ).

மருத்துவனுக்குப் பண்டிதன் என்றும், மருத்துவத்திற்குப் பண்டிதம் என்றும், பெயருண்டு. மருந்து கொடுப்பவன் மருத்துவன்; பலபொருள்களை அறிந்த

வன் பண்டிதன். பண்டிதன் என்பது பண்டுவன் என்றும், பண்டிதம் என்பது பண்டுவம் என்றும், மருவும்.

பண்டுவம் (**Medical Treatment**) மருத்துவப்பண்டுவம் என்றும் நம்பிக்கைப் பண்டுவம் (**Faith Cure**) என்றும், இருதிறப்படும். பாம்புக்கடி யுண்டவனுக்குக் கடிவாயில் பாம்புணிக் கருங்கல் வைப்பதும், எருக்கம் பூவைத் தின்னக் கொடுப்பதும், மூக்கிற் பச்சிலைச்சாறு பிழிவதும், மருத்துவப் பண்டுவம்; மந்திரத்தினால் நஞ்சையிறக்குவது நம்பிக்கைப் பண்டுவம்.

நம்பிக்கைப் பண்டுவம், இறும்பூது(**Miracle**), நேர்த்திக்கடன்; குளிசம் (**Amulet**), மணி, பார்வை, மந்திரம், ஊழ்கம் (தியானம்), பாணிப்பு (பாவகம்), முட்டி, அரசக் காட்சி முதலியானவாகப் பலவகைப்படும்.

இயேசு பெருமான் தொழு (குட்ட) நோயாளியைத் தொட்டு நலப்படுத்தியதும், திருஞான சம்பந்தர் கூன் பாண்டியன் சுரநோயைத் தீர்த்ததும், இறும்பூது. வழிபடுதெய்வத்தைநோக்கி, ஒன்று படைப்பதாக அல்லது செய்வதாக நேர்ந்து கொள்வது நேர்த்திக் கடன். மந்திர எழுத்துள்ள தகட்டைக் கையிற் கட்டிக் கொள்வது குளிசம். உருத்திராக்கம், துழாய் (துளசி) மணி, முத்துமாலை முதலிய அணிகள் மணியாகும். மந்திரிகன் தேட்கொட்டுப் பட்டவனை அல்லது பாம்புக்கடியுண்டவனைப் பார்த்துக் குழையடித்து மந்திரிப்பது பார்வை. நஞ்சேறியவனே மந்திரத்தை ஓதுவது மந்திரம் பாம்புக்கடியுண்டவன் கலுழனை (கருடனை) உள்ளுவது ஊழ்கம். அவன் தன்னைக் கலுழனாகவே கருதுவது பாணிப்பு.

> **"திடங்கொள் மந்திரம் தியானபா வகநிலை முட்டி"**
>
> (பெரிய பு. 34 : 1060)

> **"மணிமந்திரமாதியால் வேண்டு சித்திகள்"**
>
> (தாயுமா. பரிபூ. 9)

சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரவிரும்பொறையைக் கண்டவுடன், நரிவெரூஉத்தலை

யார் நல்லுடம்பு பெற்றதாக, 5-ஆம் புறப்பாட்டின் கொளுக்கூறும். இது, கண்ட மாலையை (Scrofula) அரசன் தொடின் குணமாகுமென்று கருதி அதற்கு 'அரசன் தீங்கு' (King's evil) என்று ஆங்கிலேயர் பெயரிட்டதனோடு ஒப்புநோக்கத் தக்கது.

(5) மணிநோட்டம் (இரத்தினப் பரீட்சை)

> "காக பாதமும் களங்கமும் விந்துவும்
> ஏகையும் நீங்கி இயல்பிற் குன்ரு
> நூலவர் நொடித்த நுழைநுண் கோடி
> நால்வகை வருணத்து நலங்கேழ் ஒளியவும்
> ஏகையும் மாலையும் இருளொடு துறந்த
> பாசார் மேனிப் பசுங்கதிர் ஒளியவும்
> விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்
> பூச உருவின் பொலங்தெளித் தனையவும்
> தீதறு கதிரொளித் தெண்மகட் டுருவவும்
> இருள்தெளித் தனையவும் இருவே றுருவவும்
> ஒருமைத் தோற்றத் தைவேறு வனப்பின்
> இலங்குநீர் விடூஉம் நலங்கெழு மணிகளும்
> காற்றினும் மண்ணினும் கல்லினும் நீரினும்
> தோற்றிய குற்றம் துகளறத் துணிந்தவும்
> சந்திர குருவே அங்கா ரகனென
> வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்
> கருப்பத் துளையவும் கல்லிடை முடங்கலும்
> திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்"

என்னும் சிலப்பதிகாரப் பகுதி (14:180—198), மணிகளின் குணங்குற்றங்களை எடுத்துக் கூறுதல் காண்க.

6. ஓவியம்

> "ஓவியச் செந்நூல் உரைநூற் கிடக்கையும்"

என்பது (மணி 2: 32), ஓவிய நூலைத் தெரிவிக்கும்.

"மாடக்குச் சித்திரமும்" என்னும் நன்னூற் பொதுப்பாயிரத் தொடரும், "சுவரை வைத்துக்கொண்

டன்றோ சித்திரமெழுத வேண்டும்?" என்னும் பழமொழியும், மாடச்சுவர்களிலெல்லாம் அக்காலத்தில் ஓவியம் வரையப் பெற்றிருந்தமையை அறிவிக்கும்.

**"வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்**
**சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்**
**மையறு படிவத்து வானவர் முதலா**
**எவ்வகை உயிர்களும் உவமம் காட்டி**
**வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய**
**கண்கவர் ஓவியம் கண்டுநிற் குநரும்"**

என்று மணிமேகலை (3:126—131) கூறுதல் காண்க.

ஒருவன் ஓர் அரசனது அவைக்களம் சென்று அங்கு அரசன் தன் அமைச்சருடன் அமர்ந்திருந்ததைக் கண்டு, தான் கொண்டுவந்த காணிக்கையை நீட்ட அரசன் அதை வாங்காமையால் நெருங்கிச் சென்று அது ஓர் ஓவியமாயிருக்கக் கண்டானென்று, ஒரு கதை வழங்கி வருகின்றது. அத்தகைய ஓவியத்திறவோர் அக்காலத்திருந்தனர்.

ஓவியக்காரரைக் கண்ணுள் வினைஞர் என்று சிலப்பதிகாரம் கூறும் (5:30). ஆடை அணிகலம் கட்டிடம் முதலிய எல்லாப் பொருளும் ஓவிய வேலைப்பாடுள்ளன வாயிருந்தன.

## (7) உருவம் (Sculpture)

**மண்ணால் உருவஞ் செய்பவர் மண்ணீட்டாளர்**

(மணி. 28 : 37)

**மரத்தாலும் கல்லாலும் பொன்வகையாலும் உருவஞ்செய்பவர் கம்மியர்; சாந்திற் செய்பவர் கொத்தர்.**
**"கம்மியநூல் தொல்வரம் பெல்லை கண்டு"**

(திருவிளை, திருநகரங். 38)

கோயில் தேரும் கோபுரமும் உருவங்கள் நிறைந்தவை. பாவையுருவமும் பூதப்படிமையும் புகாரிலும் பிறநகர்களிலும் இருந்தன.

(8) கட்டிடம்

மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் மணி மண்டபங்களும், மூவேந்தர் தலைநகர்களிலும் கோநகர் களிலும் மிகுந்திருந்தன.

மாளிகை, கோபுரம், மணி, மண்டபம் என்னும் நாற்சொல்லும் தென்சொல்லே.

மாலுதல் மாண்புறுதல்.

"மான்ற பூண்முலையினுள்" (காஞ்சிப்பு. திருக்கண் 174). மால் பெருமை. மால்-(மாள்)மாண்-மாண்பு,மாட்சி மாள் - மாளிகை - மாலிக்கா (வ.)= மாட்சிமைப்பட்ட மனை.

கோ = அரசு, தலைமை. புரம் = உயர்வு, உயர்ந்த கட்டிடம்.

புரை = உயர்ச்சி. "புரைஉயர் பாகும்" (தொல். உரி. 4). வேந்தன் இருந்த உயர்ந்த எழுநிலைக் கட்டிடம் முதலிற் கோபுரம் எனப்பட்டது. பின்பு அதைப் போற் கோயிலில் அமைந்த எழுநிலை வானளாவி அப்பெயர் பெற்றது. அதன் அமைப்பு தேரை ஒத்ததாகும்.

கோபுரம் உள்ள நகர்களின் பெயர்களே, முதலில் புரம் என்னும் ஈறு பெற்றன.

எ - டு: காஞ்சிபுரம், கங்கைகொண்ட சோழபுரம்.

வேந்தன் தன் தலைநகரை நாற்புறமும் நோக்கவும், தொலைவிற்பகைவர் வரவைக் காணவும், பகைவர் முற்றுகையிட்டு உழிஞைப்போரை நடத்துங்கால் நொச்சிப் போரைக் கண்காணிக்கவும், அவன் அரண் மனையின் மேல் எழுநிலைகொண்ட ஓர் உயர்ந்த தேர் போன்ற கட்டிடம் கட்டப்பட்டிருந்தது. அது புரம். எனப்பட்டது. புரம் = உயர்ந்த கட்டிடமான மேன்மாடம். புரவி = உயர்ந்த சுவரைத் தாண்டும் குதிரை.

புரம் என்பது, பின்பு புரத்தைக் கொண்ட அரண் மனையையும் அதன் சூழலையும் (Acropolis) குறித்து, அதன் பின், நகர் என்னும் சொற்போல் தலைநகர் முழு

வதையும் குறித்து, நாளடைவில் நகரப் பொதுப் பெயராயிற்று.

அரண்மனையிலுள்ள புரம் அரசன் இருக்கையாத லால், கோபுரம் எனப்பட்டது. கோ அரசன். கோ இருந்த இல் கோயில் எனப்பட்டதை நோக்குக.

பகைவர் வரவு காண்டற்குக் கோபுரம் சிறந்த அமைப்பென்று கண்டபின், நகரைச் சூழ்ந்த கோட்டை மதிலிலும், வாயிலிற் பெரிதாகவும் மற்ற இடங்களிற் சிறியனவாகவும் கோபுரங்கள் கட்டப்பட்டன. சிறி யன கொத்தளம் எனப்பட்டன.

மதுரை நகரைச் சூழ்ந்த மதிலின் நாற்புறத்திலும், வாயிலும் மாடமும் வானளாவிய கோபுரமும் இருந் தன. நான்கு வாயில் மாடங்கள் இருந்ததினால், மதுரை நான்மாடக்கூடல் எனப்பட்டது. கூடல் என்பது தமிழ்க் கழகம். அது பின்பு இடவாகு பெயராய் மதுரையைக குறித்தது. இதையறியாது, தொல்கதை ஞர் (புராணிகர்) ஒரு கதையைக் கட்டிவிட்டனர்.

**"தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே"** (புறம். 58 : 13)
**"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை"** (சிறுபாண். 66-7)

இனி, கூடல்நகர் என்பது நாளடைவில் கூடல் எனக் குறுகிற்று எனினுமாம்.

மதுரைநகர்வாயில், இடைவிடாது ஒழுகிய வைகையாறு போல் அகன்றும், இடையறாத மக்கள் போக்குவரத்து மிகுந்தும், இருந்தது.

**"மழையாடு மலையின் நிவந்த மாடமொடு**
**வையை யன்ன வழக்குடை வாயில்"**

என்று மதுரைக்காஞ்சி (355—6) கூறுதல் காண்க.

"கோபுர மன்றி வாசலை மாடமாகவுஞ் சமைத்த லின், மாடமென்றார்." என்னும் நச்சினார்க்கினியர் சிறப் புரை இங்குக் கவனிக்கத் தக்கது.

அரசனுக்குரிய சிறப்புக்களெல்லாம் இறைவனுக்கும் செய்யப்பெற்றதினால், கோயில்தேர் மிகப் பெரிதாய்ச் செய்யப்பெற்றதுபோல், கோயில் மதிற் கோபுரமும் மிகப்பெரிய எழுநிலை வானளாவியாகக் கட்டப் பெற்றது. அதன் அமைப்பும் தேரை ஒத்ததாகும். அதன் எழுநிலைகளும் தேரின் எழுதட்டுக்களைப் போன்றவை. எழுநிலை அல்லது எழுதட்டுக் கருத்து ஏழுலகம் என்னும் கருத்தினின்று தோன்றியது. ஏழுலகக் கருத்தும் எழுதீவுக் கருத்தினின்று தோன்றியதாகும்.

**"ஏழுடையான் பொழில்"** (திருக்கோவை, 7)

தச்சுக் கலையில் கோயில்தேர்போல், கட்டிடக் கலையில் கோயிற்கோபுரம் பண்டைத் தமிழரின் அறிவையும் ஆற்றலையும் சிறப்பக்காட்டும். தஞ்சைப் பெருவுடையார் கோயிற் கோபுரத்திற்கு, 10 கல் தொலைவிலுள்ள சாரப்பள்ளம் என்னும் இடத்திலிருந்து சாரம் கட்டியதாகவும், கடைகாலில் ஒழுகிய நீர்த் துளைகளை அடைத்தற்குக் குறவை மீன்களைப் பிடித்து விட்டதாகவும், கூறுவர்.

**"தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து**
**மீனிற் செறுக்கும் யாணர்ப்**
**பயன்திகழ் வைப்பிற்பிறர் அகன்றலை நாடே"**

என்பது (புறம்: 7) தஞ்சை நிகழ்ச்சியை ஒருவாறு நினைவுறுத்தும்.

மணி = 1. ஒளிக்கல், 2. நீல ஒளிக்கல்.

இவ்விரு பொருள்களுள், முதலாவது மண்ணுதல் என்னும் வினையினின்றும், இரண்டாவது மள்குதல் என்னும் வினையினினின்றும், தோன்றியவையாகும். அழகு என்பது இவ்விரண்டினின்றும் தோன்றிய வழிப்பொருள்.

மண்ணுதல் கழுவுதல். மண்ணப்பட்டது மண்ணணி. மண்ணணி—மணி.

**"மண்ணணி யறிப மணிநலம்"** (நான்மணி. 5)

**"மண்ணுறு மணியும்"** (பெருங். 2-5 : 123)

மள்குதல் = கருத்தல், ஒளி மழுங்குதல். மள்கு—மட்கு—மக்கு.

மள்—(மய்)—மை = கருமை, கருமுகில், கரிய ஆடு.
ஒ. நோ : வள்(கூர்மை)-(வய்)-வை = கூர்மை.
மல்—மால் = கருமை, கருமுகில், கரிய திருமால்.
மால்—மா = கருமை. மா—மாயோன் = கரியோன்.
மால்—மாரி = மழை, முகில்.
மள்—மழை = மாரி, முகில்.

மள்—மண்—மணி = கரிய (நீல) ஒளிக்கல். கருமையும் நீலமும் ஒன்ருய்க் கொள்ளப் படுவதை, காளி, நீலி; காளகண்டன், நீலகண்டன்; கார்வண்ணன், நீலவண்ணன்; கருநாகம், நீல நாகம்; முதலிய சொல்லிணைகளால் அறிக.

மண்டுதல் = நெருங்குதல், கூடுதல், மிகுதல், நிறைதல். மண்டு—மண்டி = பொருள்கள் நிறைந்து கிடக்கும் சரக்கு நிலையம்.

மண்டு—மண்டகம் = மக்கள் கூடும் மடம் அல்லது அம்பலம்,
மண்டகம்—மண்டபம்—மண்டப(வ.)
ஒ. நோ : வாணிகம்—வாணிபம்.

இன்றும் மண்டகம், மண்டகப்படி என்பதே உலக வழக்கு.

மண்டபங்களுள் நூற்றுக்கால் மண்டபங்களும் ஆயிரக்கால் மண்டபங்களும் இருந்தன.

மாடங்களின் முகப்பில் புலியுருவம் அமைக்கப் பட்டும், புலித்தொடர் என்னும் சங்கிலி தொங்கவிடப் பட்டும், இருந்தன.

**"புலிமுக மாட மலிர வேறி"** *(பெருங். இலாவாண, 9, 69)*

**"புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்"** *(முல்லைப். 62)*

மாடங்கள் மதுரையில் மிகுந்தும் சிறந்தும் இருந்ததாகத் தெரிகின்றது.

**"மாட மதுரை"** (புறம்; 32), **"மாடமலி மறுகிற் கூடல்"** (முருகு. 71), **"மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்"** (மதுரை. 429), **"நான் மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்"** (கலித். 92), **"மதிமலி புரிசை மாடக் கூடல்"** (திருமுகப் பாசுரம்).

கோநகர்களில் அங்கண நீரைக் கண்ணிற் படாமற் செலுத்துதற்கு, 'கரந்துபடை' என்னும் புதைசாலகம் இருந்தது. அது தெருநடுவிற் கட்டப்பட்டு யானைக் கூட்டம் மேற்செல்லும்படி, கருங்கல்லால் மூடப்பட் டிருந்தது. அதிற்சென்ற நீர் யானைத் துதிக்கைபோன்ற தூம்பின் வாயிலாய் அகழியில் விழுந்தது.

> **"பெருங்கை யானை யினநிரை பெயரும்**
> **சுருங்கை வீதி"** *(சிலப். 14: 64-5)*

கோநகர்களில், ஊரைச் சுற்றிக் கோட்டை மதில் இருந்தது அது புரிசை எனப்பட்டது. புரிதல் வளை தல். புரிசையுள்ள நகர்ப்பெயர்களே முதலில் புரி என்னும் ஈறு பெற்றன. கோட்டை என்பதும் வளைதற் பொருளதே. கோடுதல் வளைதல்.

> **"உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்**
> **அமைவரண் என்றுரைக்கும் நூல்."**

என்னும் திருக்குறட்கேற்ப, (743) மதிலரண் மதில், எயில், இஞ்சி, சோ என நால்வகைப் பட்டிருந்தது.

மிக உயரமானது மதில்; ஞாயில் என்னும் ஏவறை களையுடையது எயில்; செம்பை யுருக்கிச் சாந்தாக வார்த்துக் கருங்கல்லாற் கட்டியது இஞ்சி; அரிய பொறிகளை யுடையது சோ.

> **"வானுட்கும் வடிநீள் மதில்"** *(புறம். 18)*
> எய் இல் *(ஏவறைகள்)* உள்ளது எயில்.

> **"செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை**
> **உவரா வீகைத் துவரை"** *(ஷை 201)*

> **"செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்ச் செல்வம் தேறி"**
> *(கம்பரா. கும்ப. 160)*

**"சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த"**
(சிலப். 17: 35)

சோ என்பது அரண்வகையே யன்றிச் சோணித புரம் என்னும் நகர்ப் பெயரன்று.

பாம்புரி, கொத்தளம் (Bastion), வாயிற் கோபுரம் பதணம் (Rampart), ஞாயில் முதலிய பல வுறுப்புக் களை யுடையது கோட்டை மதில். சில நகர்களில் ஏழெயில்கள் இருந்தன. புறமதிலைச் சுற்றி அகழி இருந்தது.

கோநகர்களைப் பகையரசர் முற்றுகையிட்ட காலத் தில் மறைந்தோடித் தப்பிக் கொள்ள, நெடுந்தொலை விற்குச் சுரங்கம் அல்லது சுருங்கையென்னும் கீழ் நில வழிகளும் இருந்தன.

கோட்டை—கோட்ட (வ.) L. Castrum E. caster, chester (suffixes of place names

புரம்—புர (வ)., OE. burg, burh OS. burg, OHG burug ON. burg, Goth. baurgs, E. borough, Sc. burgh. புரி—புரீ (வ.), E. bury (sfx. of place-name. பாழி = நகர் Gk. polis.

## (9) பொறிவினை (Machinery)

வேந்தன் தன் உரிமைச் சுற்றத்தோடு இன்பமாய் நீராடுவதற்கு, வேண்டும்போது நீரை நிரப்பவும் வடிக் கவும் நீர்ப்பொறியமைந்த குளம் இருந்தது. அது இலவந்திகை யெனப்பட்டது.

**"இலவந் திகையின் எயிற்புறம் போகி"** (சிலப். 10 : 31)

**"நிறைக்குறின் நிறைத்துப் போக்குறின் போக்கும்**
**பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை"**
(பெருங். 1: 40; 311-2)

**"......................வளைவிற் பொறியும்**
**கருவிர லூகமும் கல்லுமிழ் கவணும்**

**பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்**
**காய்பொன் உலையும் கல்லிடு கூடையும்**
**தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்**
**கவையும் கழுவும் புதையும் புழையும்**
**ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்**
**சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்**
**எழுவும் சீப்பும் முழுவிறல் கணையமும்**
**கோலும் குந்தமும் வேலும் பிறவும்"**

மதுரை மதில்மேல் அமைக்கப்பட்ட பொறிகளாகும் (சிலப். 15 : 207-216). "பிறவும்" என்பவற்றை அடியார்க்கு நல்லார் நூற்றுவரைக்கொல்லி, தள்ளிவெட்டி களிற்றுப்பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப் பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி என்பர்.

**"முழுமுதலரணம்"** (புறத். 10) என்றும், **"வருபகை பேணார் ஆரெயில்"** (புறத். 12) என்றும், தொல்காப்பியம் கூறுவது, மிளையும் (காவற்காடும்) அகழியும் சூழ்ந்து பல்வேறு பொறிகளைக் கொண்ட சோவரணையே.

**"மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்**
**நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியும்**
**தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்பும்**
**கூற்றம்அன கழுகுதொடர் குந்தமொடு கோன்மா.**

**"விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொடர் அயில்வாள்**
**கற்பொறிகள் பாவையன மாடம்அடு செந்தீக்**
**கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை**
**நற்றலைகள் திருக்கும்வலி நெருக்கும்மர நிலையே.**

**"செம்புருகு வெங்களிகள் உமிழ்வதிரிந் தெங்கும்**
**வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ**
**அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ ஆகித்**
**தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே.**

**"கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்**
**குரங்குபொரு தகரிஞெடு கூர்ந்தரிவ நுண்ணூல்**

**பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்கும்**
**திருந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே."**

என்னும் சிந்தாமணிச் செய்யுள்கட்டு (1 : 101—4)

"பொற்கொடிகள் பதாகையோடு கொழிக்கும் திருந்து மதில், மாற்றவர் மறப்படை அகழைக் கடந்து தன்னைப் பற்றின், அத்தெவ்வர் தலை பனிக்கும்படி நூற்றுவரைக் கொல்லி முதல் மரநிலையீருக வுள்ளவையும், செம்புருகு களி முதலியவற்றை உமிழ்வனவாக யவனர் தாட் படுத்த பொறிகளும், பன்றிமுதல் நுண்ணூலீருக வுள்ளவையும், திருந்திற்றென்க." என்று நச்சினார்க் கினியர் உரைவரைந்துள்ளபடி, 103-ஆம் செய்யுளிற் குறிப்பிட்டுள்ள பொறிகளையே யவனர் செய்ததாகத் திருத்தக்க தேவர் கூறியுள்ளார். அவை பிறவற்றைப் போல் அத்துணைச் சிறந்தன வல்ல வாதலாலும், திருத் தக்க தேவர்க்கு ஏழு நூற்றாண்டுகள் முந்திய இளங் கோவடிகள் அங்ஙனம் கூறாமையானும், சிலப்பதி காரம் போல் சிந்தாமணி உண்மைக் கதையைத் தழுவாமையானும், தமிழர் கிரேக்கருக்கு முற்பட்ட இனத்தாராதலாலும், மேலை மருத்துவத்தை மேலைய ரிடம் கற்ற கீழையர் மேலைநாடுகளிலும் பணியாற்று வதுபோல் யவனர் சில பொறிகள் செய்திருக்கலாமாத லாலும், இற்றை வானூர்திக் கொப்பான மயிற் பொறியை யவனர் செய்ததாகத் தேவர் கூறாமை யானும், சிந்தாமணிக் கூற்று கொள்ளத் தக்கதன் றென்றும், அதனால் பண்டைத் தமிழப் பொறிவினைக் கம்மியர்க்கு இழுக்கில்லையென்றும், கூறிவிடுக்க

**(10) பொன்நூல்**

**"சாத ரூபம் கிளிச்சிறை ஆடகம்**
**சாம்பூ நதமென ஓங்கிய கொள்கை"**

என்பது (சிலப். 14: 201—2), பொன்னின் வகை களைக் காட்டும்.

ஜாத ரூப்ப என்னும் வடசொல் பொலிந்த வடிவம் என்றும், ஹாட்டக என்னும் வடசொல் ஒளிர்வது என்றும் பொருள்படும். இவற்றைப் பொன் என்றும்

தங்கம் என்றும் சொல்லலாம். ஜம்பூநத என்னும் வடசொல், பொன் (மேரு) மலைக்கு வடக்கில் நாவற் பழச்சாறு பெருகியோடுவதாய்க் கருதப்பட்ட ஆற்றின் பெயர் இது ஆரியத் தொல்கதைக் கொள்கை. இதன்படி, சாம்பூ நதத்தை நாவலாறை என்று சொல்லல் வேண்டும்.

பண்டைத் தமிழ்மக்களின் ஏமாறுந்தன்மையைப் பயன்படுத்திக்கொண்டு, ஆரியர் இங்ஙனமே எல்லாத் துறைகளிலும் தமிழ்நாட்டுப் பொருள்கட்கு வடசொற் பெயர்களையிட்டு வழக்காற்றுப் படுத்தியிருக்கின்றனர்.

பொன் என்பது, பொன்போன்ற பிற கனியப் பொருள்களையுங் குறிக்கும்.

வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் முதலிய பிற கனியங்களும் பண்டைத் தமிழர்க்குத் தெரிந்திருந்தன. ஈயம் என்பது இளகுவது என்னும் பொருளது.

ஈயம்—ஸீஸ (வ.). இள்—(இய்)—ஈ—ஈயம்.
ஒ. நோ : எள்—எய். எய்த்தல் இளைத்தல்.

வெண்கலம் தமிழர், முதன் முதல் அமைத்த கலவைக் கனியமாகத் தோன்றுகின்றது. அதன் ஒரு சொற்பெயர் உறை, முறி என்பன.

## (11) இதள் மாற்றியம் (இரசவாதம்)

சித்தர் இதளினால் (பாதரசத்தால்) தாழ்ந்த கனியங்களை (உலோகங்களை) வெள்ளியாகவும் சிறப்பாகப் பொன்னாகவும் மாற்றினதாக, மருத்துவ நூல்கள் கூறும். அப்பொன்னாக்கம் வடமொழியில் (இ)ரசவாதம் எனப்படும். அக்கலையைக் குறிக்கும் **Alchemy** என்னும் சொல்லிலிருந்து **Chemistry** என்னும் சொல் தோன்றியிருத்தலால், கெமிய நூலை ரஸாயனம் என்றனர். இம்முறையில் அதைத் தமிழில் இதளியம் எனலாம்.

பொன்னாக்கம் எகிப்து (**Egypt**) நாட்டில் வழங்கியதால், அக்கலை அரபியில் அல்கிமிய (**al - kimia**) எனப்பட்டதென்றும், அல் என்பது அந்த என்று பொருள்

படும் சுட்டுச் சொல்லென்றும், கிமிய என்பது எகிபது நாட்டின் பெயரென்றும், எருதந்துறை ஆங்கிலச் சுருக்க அகர முதலி கூறும். (**The Concise Oxford Dictionary of Current English**)

"அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த பேரும் **நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்**" என்று தாயுமானவர் பாடுவதால் (பரிபூர. 10), இதன் மாற்றியக் கலை தமிழ் நாட்டில் இருந்தமை அறியப்படும்.

பொதுவாக, இது சித்தர் கலையெனப்படும். இராமலிங்க அடிகள் சித்தநிலையடைந்திருந்ததினால் இக் கலையை அறிந்திருந்தனர்.

## (12) மற நூல்

தனிமக்கள் போர், படைமக்கள் போர் எனப் போர் இரு திறப்படும். சிலம்பம், மற்போர், குத்துச் சண்டை, வாட்போர் முதலியன தனி மக்கள் போராம்.

முக்காவல் நாட்டு ஆமூர்மல்லனைப் பொருது கொன்ற கோப்பெருநற்கிள்ளி, ஒரு போரவை நடத்தி வந்தான்; அதனால், போரவைக் கோப்பெரு நற்கிள்ளி எனப்பட்டான். அவன் நடத்தி வந்தது மற்பயிற்சிக் களரி. மற்போரில், சில உயிர் நாடியான நரம்புகளைத் தொட்டு, எதிரியை வீழ்த்திக் கொல்லவும், வீழ்ந்தவனை மூன்றே முக்கால் நாழிகைக்குள் எழச்செய்யவும், சில மருமப் பிடிகள் உள.

மற்களரி, விற்களரி, வாட்களரி எனப் போரவை அல்லது முரண்களரி பலவகைப் படும்.

**"இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்,**
**இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்**
**பெருமரக் கம்பம்"** *(புறம். 169 : 9-11)*

என்பதிலிருந்து, எய்படை எறிபடை முதலிய படைக்கலப் பயிற்சி நடைபெற்ற வகையை அறியலாம்.

குதிரைப் படைப் பயிற்சி நடைபெற்ற களம் செண்டு வெளியெனப்பட்டது.

கரி பரி தேர் கால் ஆகிய நால்வகைப் படைப் போரையும் பற்றிய தமிழ் நூல்கள் இறந்து பட்டன.

(13) **ஓக நூல்**

ஓவுதல் - ஒத்தல், ஒன்றுதல். ஓவு—ஓகு. ஓவு—ஓவம்—ஓகம் = அறிவன் உளத்தில் இறைவனோடு ஒன்றும் ஊழ்கம் (தியானம்).

உகம் என்பது வடமொழியில் யுக என்றும் உத்தி என்பது யுக்தி என்றும் ஆயதுபோல், ஓகம் என்பதும் அம்மொழியில் யோக என்றாகும். இம் முறை பற்றி ஓகு என்பது யோகு எனப்படும்.

ஓகப் பயிற்சி எண்ணுறுப்புக்களை யுடையது. அவை ஒழுக்கம் (இயமம்), ஒழுங்கு (நியமம்), இருக்கை (ஆசனம்), வளிநிலை (பிராணுயாமம்), புலனடக்கம் (பிரத்தியாகாரம்), நிறை (தாரணை), ஊழ்கம் (தியானம்), ஒடுக்கம் (சமாதி) என்பன. இவற்றுள் இருக்கையும் வளிநிலையும் உடற்பயிற்சி; ஏனைய உளப் பயிற்சி.

பிறப்பால் தம்மை உயர்வாகக் கருதும் பேதைமையும் செருக்குமுள்ளோர், ஓகப்பயிற்சி செய்வது முயற்கொம்பாம். இடைகலை, பின்கலை, சுழிமுனை என்பன வளிநிலைத் தொடர்பான நாடிகளைக் குறிக்கும் தென்சொற்கள். இவற்றை இடாகலா, பிங்கலா, ஸுஷுமுணு எனத் திரித்துள்ளனர் வடமொழியாளர்.

ஓக நூலிற் கூறப்படும் அறு நிலைக்களங்கள் அல்லது நரப்புப் பின்னல்கள் அடிமுதல் முடிவரை, முறையே, அண்டி குறியிடை நாலிதழ்த் தாமரை வடிவி'லும், அண்டி கொப்பூழிடை ஆறிதழ்த் தாமரை வடிவிலும், கொப்பூழ் மண்டலத்தில் பத்திதழ்த் தாமரை வடிவிலும், நெஞ்சாங்குலை மண்டலத்தில் பன்னீரிதழ்த் தாமரை வடிவிலும், அடிநா மண்டலத்தில் பதினறிதழ்த் தாமரை வடிவிலும், இரு புருவத்

திடை ஈரிதழ்த் தாமரை வடிவிலும், இருப்பதாகச் சொல்லப் பெறும்.

ஓகநூல் இறந்து பட்டதால் அறுநிலைக்கள (ஷடாதார)ப் பெயர்களும் இறந்துபட்டன. இருக்கைகளின் பெயர்களும் வடமொழியிற் பலவாறு திரிக்கப்பட்டும் மொழி பெயர்க்கப்பட்டும் உள. ஆஸனம் என்னும் சொல்லே தென் சொல்லின் திரிபென்பது, என் 'வடமொழி வரலா'ற்றில் விளக்கப் பெறும்.

## (14) மாயம் (Conjury)

இது மாலம் அல்லது கண் கட்டு.

## (15) வசியம் (Enchantment)

இது மகளிரையும் பிறரையும் மருந்தாலும் மந்திரத்தாலும் மனப் பயிற்சியாலும் வயப்படுத்தல்.

வயின்—வயம்—வசம்—வசி—வசியம்.

## (16) மந்திரக் கட்டு

இது தீ காற்று முதலிய இயற்கைப் பூதங்களையும், புலி நாய் பாம்பு முதலிய உயிரிகளையும் மாந்தரையும், இயங்காதவாறும் தீங்கு செய்யாத வாறும், மந்திரத்தால் தடுத்தல்.

"கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்"

(தாயு. தேசோ. 8)

## (17) மகிடி (மோடி)

இது மந்திரத்தாற் பொருள்களை மறைத்தலும் அவற்றை எடுத்தலுமாகும்.

## (18) பேயோட்டல் (Exorcism)

பல்வகைப் பேய்களையும் கோடங்கிஅல்லது உடுக்கடித்து, பேய் கோட்பட்டாரினின்று ஓட்டுதல் பேயோட்டல் ஆகும்

**(19) குறளி**

இது குட்டிப் பேயால் சிறு குறும்புகள் செய்வித்தல்.

**(20) செய்வினை (Sorcery or Witchcraft)**

இது பேயை ஆளும் மந்திரக்காரனைக் கொண்டு, வேண்டாதவர்க்கு நோயும் சாக்காடும் வருவித்தல்.

இது சூனியம் என்றும் உலக வழக்கில் வழங்கும். சுல்—சுன்—சுன்னம்—சூன்ய(வ.).

**(21) கரவட நூல்**

இது களவு நூல்.

**"மந்திரம் தெய்வம் மருந்தே நிமித்தம்**
**தந்திரம் இடனே காலம் கருவியென்**
**றெட்டுட னன்றே இழுக்குடை மரபில்**
**கட்டுண் மாக்கள் துணையெனத் திரிவது."**

என்பது (சிலப். 16 : 166—9), கரவட நூலின் கூறுகளைத் தெரிவிக்கும். நிமித்தம் தந்திரம் என்னும் வடசொற்கட்கு, புள் விரகு என்பன முறையே நிகர் தென்சொற்களாம்.

**(22) உடல் நூல்**

மெய்ப் பொருள் தொண்ணூற்றாறெனும் பட்டாங்கு நூல் முறையிலும், மருத்துவ முறையிலும், புலாலுணவு முறையிலும், மற்போர் முறையிலும், உடற்கூறுகளைப் பண்டைத் தமிழர் நன்கறிந்திருந்தனர்.

**(23) காவல் நூல்**

**"நூல்வழிப் பிழையா நுணங்குநுண் தேர்ச்சி**
**ஊர்காப் பாளர்"**

என்னும் மதுரைக் காஞ்சியடிகளையும் (646-7), அவற்றின் "களவு காண்டற்கும் காத்தற்கும் கூறிய நூல்கள் போவார்" என்னும் உரையையும், நோக்குக.

## 15 அறிவியல்கள் (Sciences)

பெரும்பாலும் படிப்பினுற் கற்கப்படுவன அறிவியல்கள்.

### (1) இலக்கணம்

இலக்கு—இலக்கியம். இலக்கு—இலக்கணம். இலக்கு = குறி, குறிக்கோள். சிறந்த வாழ்க்கைக் குறிக்கோளான அறத்தை எடுத்துக் காட்டுவது இலக்கியம். சிறந்த மொழிக் குறிக்கோளான அமைப்பை எடுத்துக் கூறுவது இலக்கணம்.

> **"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்**
> **கொள்ளும் என்ப குறியறிந் தோரே"**

என்னும் தொல்காப்பிய நூற்பா (அகத். 47) இலக்கணத்தைக் குறியெனக் குறித்தல் காண்க.

இலக்கணத்திற்கு அணங்கம் என்றும், இலக்கியத்திற்கு அணங்கியம் என்றும் பெயருண்டு.

இலக்கு—லக்ஷ் (வ.)., இலக்கியம்—லக்ஷ்ய (வ). இலக்கணம்—லக்ஷண—(வ) இலக்கணம் இலக்கியம் என்னும் சொற்கள் போல், லக்ஷண லக்ஷ்ய என்னும் வடசொற்கள் மொழியமைதியையும் (Grammar) நூற்றொகுதியையும் (Literature) குறிப்பதில்லை; குறி அல்லது இயல்பு, குறிக்கப்பட்ட பொருள் என்னும் இரண்டையே குறிக்கின்றன. இலக்கணத்தையும் இலக்கியத்தையும் குறிக்க, வியாகரணம் (வ்யாகரண) சாகித்தியம் (ஸாஹித்ய) என்னும் சொற்களையே வடமொழியாளர் ஆள்கின்றனர்.

இலக்கணம் இலக்கியம் என்னும் இரு சொற்களும் தொன்று தொட்டே தமிழில் வழங்கி வருகின்றன.

**"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**வழக்கி னாகிய உயர்சொற் கிளவி**
**இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல."**

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் (510), இலக்கணம் என்னும் சொல் வந்திருத்தல் காண்க.

தமிழ் இலக்கணம், எழுத்து, சொல், பொருள், என முத்திறப்படும். பொருளில் யாப்பும் யாப்பில் அணியும் அடங்கும். பண்டை யிலக்கிய மெல்லாம் செய்யுளில் இருந்ததனால், உரைநடைக்கெனச் சிறப்பாய் இலக்கணம் வகுக்கப்படவில்லை. சொல்லிற்கே பொருளிருப்பதால், சொல்லிற்குப் பின்பு பொருளையே இலக்கணப் பகுதியாக எடுத்துக்கொண்டனர். பொருட் பகுதியின்றித் தமிழிலக்கணம் நிறைவுள்ளதாகாது.

தமிழைச் சரியாய் உணராத பிராமணத் தமிழ்ப் புலவர், பொருளிலக்கணத்தைப் பாட்டியல் என்று குறிக்கின்றனர். இலக்கியப் பொருள்கட்கு இலக்கணம் கூறுவதே பொருளிலக்கணம் என அறிக.

தமிழ் நெடுங்கணக்கு கால்டுவெலார் கூறியவாறு வடமொழியைப் பின்பற்றியதன்று. வடமொழி நெடுங்கணக்கே தமிழைப் பின்பற்றிய தாகும்.

தமிழ் எழுத்து கீறெழுத்தும் வெட்டெழுத்தும் என இருவகைப்பட்டது. முன்னது ஓலையெழுத்து; பின்னது பட்டய வெழுத்து. பட்டய வெழுத்தையே வட்டெழுத் தென்பர்.

இன்று அச்சிலுள்ள ஓலையெழுத்து தொன்று தொட்டு வருவதே.

**"தொல்லை வடிவின எல்லா எழுத்தும்ஆண்**
**டெய்தும் எகர ஒகரமெய் புள்ளி."**

என்று 13-ஆம் நூற்றாண்டு நன்னூல் (98) கூறுதல் காண்க. "ஆண்டு" என்றது முற்காலத்தை. எகர ஒகரம் புள்ளி பெற்றதே முற்கால எழுத்தின் வேறுபாடென்பது நன்னூலார் கருத்து. அவர் காலத்தில் எகர

ஓகரம் புள்ளி பெறவில்லை; பெற்றிருக்குமாயின் அதை ஏன் கூற வேண்டும்? ஆதலால், அது உரையன்மை அறிக. 'அக்காலம்' என்பது இன்றும் முற்காலத்தைக் குறித்தல் காண்க.

எழுத்தாணி கொண்டு ஏட்டில் கீறியெழுது வதற்கு வளை கோட்டெழுத்தும், உளிகொண்டு பட்டயத்தில் குழித்தெழுதுவதற்கு நேர்கோட்டெழுத்துமே, ஏற்றதாதல் காண்க.

இந்திய ஆரியர்க்கு முதலில் எழுத்தில்லை. அவர் மறை எழுதாக்கிளவியெனப்பட்டது. வேதக்காலப் பிராமணர் தமிழ்நாடு வந்தபின், வடமொழியில் நூலெழுதத் தமிழெழுத்தையொட்டிக் கிரந்த வெழுத்தை அமைத்துக்கொண்டனர் அதன்பின், கி. பி. 10-ஆம் அல்லது 11-ஆம் நூற்றாண்டில் தேவநாகரி தோன்றிற்று.

"அறியப்பட்ட சமற்கிருத முதற்பழங்கல்வெட்டு, கத்தியவாரில் சுனகர் என்னுமிடத்தில் ஒரு பாறைமேல் உளது. அது உருத்திரதாமன் கல்வெட்டென வழங்கிவருகின்றது. அதன் காலம் கி. பி. 2-ஆம் நூற்றாண்டு. அது நாகரியில் இல்லை; பழைய கல்வெட்டெழுத்தில் உளது. ஏறத்தாழக் கி. பி. 4-ஆம் நூற்றாண்டிற்குரிய பவர் கையெழுத்துப் படிகள், நாகரியை நோக்கிய மிகுந்த முன்னேற்றத்தைக் காட்டுகின்றன; அதே சமையத்தில் தந்திதுருக்கனின் கி. பி. 750-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, இன்று வழக்கிலுள்ள நாகரியைப் பெரிதும் ஒத்த குறிகளின் முழுத் தொகுதியையும் கொண்டுள்ளது. எனினும், உண்மையான இற்றை நாகரியிலுள்ள முதற்கல்வெட்டு, கி.பி 11-ஆம் நூற்றாண்டிற்கு முந்தியதன் றென்பது கவனிக்கத் தக்கது." (மானியர் உல்லியம்சு சமற்கிருத—ஆங்கில அகர முதலி—முன்னுரை, பக்., XXVIII, அடிக்குறிப்பு)

தேவநாகரியும் தமிழெழுத்தைப் பின்பற்றியதே என்பது, கூர்ந்து நோக்குவார்க்குப் புலனாகும்.

பொருளிலக்கணம் தமிழிலன்றி வேறெம் மொழியிலுமில்லை.

தமிழர் இன்னிசைக் கலையிலும் நாடகக்கலையிலும் சிறந்திருந்ததினால், மொழியொடு அவ்விரு கலைகளையும் சேர்த்து, தமிழை இயலிசை நாடகமென முத்தமிழாய் வழங்கினர். இத்தகைய மொழியமைப்பும் வேறெங் கணுமில்லை.

தமிழர் இயலுமிடமெல்லாம் தம் வினைகளை இசை யொடு செய்து வந்தனர் என்பது, தாலாட்டுப் பாட்டு, ஏர்மங்கலப் பாட்டு, நடவைப் பாட்டு, முகவைப் பாட்டு, ஏற்றப் பாட்டு, ஏலப் பாட்டு, வள்ளைப் பாட்டு, கழியற் பாட்டு, கும்மிப் பாட்டு, கோலாட்டப்பாட்டு, ஊஞ்சற் பாட்டு, வழிநடைச் சிந்து, ஒப்பு (ஒப்பாரி)ப் பாட்டு முதலியவற்றால் அறியப்படும்.

முதலிரு கழகங்களிலும் இருந்த இலக்கணமெல் லாம் முத்தமிழிலக்கணங்களே. இயற்றமிழ் இலக் கணம் பிண்டம் என்றும், முத்தமிழிலக்கணம் மாபிண் டம் எனறும் கூறப்பெறும்

பிண்டித்தல் = பிடித்தல், திரட்டுதல் பிண்டி—பிண்டம் = திரளை. பிண்டி—பிடி. ஒ. நோ: தண்டி—தடி. பிடித்தல் = திரட்டுதல், கைக்குள் திரளக் கொள்ளுதல். பொரி விளங்காய் பிடித்தல் என்னும் வழக்கையும், "பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந் தது," என்னும் பழமொழியையும், நோக்குக.

பொருளிலக்கணம் பொருள்களை அகம்புறம் என இரண்டாக வகுத்து, கணவன் மனைவியர் காதலின் பத்தை அகம் எனச் சிறப்பித்து, மற்றெல்லாவற்றை யும் புறத்துள் அடக்கும். புறத்துள் போர்த்துறை மிகச் சிறப்பாகக் கொள்ளப்பட்டு, மற்றவையெல்லாம் எழுபுறப் பொருள் திணைகளுள் ஆறாவதான வாகைத் திணையுள் அடக்கப்பெறும். இவற்றின் விரிவை என் 'தொல்காப்பிய விளக்கம்' என்னும் நூலுட் கண்டு கொள்க உலக மொழிகளுள் தமிழ் மிகுந்த இலக்கண வரம்புள்ளது.

**"கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து**
**பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை**

**மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்**
**எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"**

என்று பரஞ்சோதி முனிவர் (திருவிளையாடற் புராணம்) கூறுதல் காண்க.

(2) **மொழி நூல்**

மொழி நூற்கு வித்தூன்றியவர் தமிழரே. தமிழ்ச் சொற்களை, இலக்கண வகைச் சொல் மூன்றும் பொருள் வகைச் சொல் ஒன்றும் சொற்பிறப்பியல் வகைச் சொல் மூன்றுமாக வகுத்திருந்தனர்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே."
(தொல். பெயர். 1)

**"சொல்லெனப் படுப பெயரே வினைஎன்று**
**ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே."** (ஷை ஷை 4)

**"இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்**
**அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப."** (ஷை ஷை 5)

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் என மூன் றியலும் செய்யுள் ஈட்டச் சொல்லே.

**"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி."** (தொல். எச்ச. 4)

**"அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை**
**வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்**
**விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்**
**நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்**
**நாட்டல் வழிய என்மனார் புலவர்."** (ஷை ஷை 7)

இந்நூற்பாக்களும், முதனிலை, இடைநிலை, ஈறு, உருபு, புணர்ச்சி, சாரியை முதலிய சொல்லுறுப்புக் களும், பண்டைத் தமிழரின் மொழி நூலறிவைக் காட்டும்.

இயற்சொல் என்பது வேர்ச் சொல்லும் அடிச் சொல்லுமான இயல்பான சொல் (Primitive word). திரி

சொல் என்பது அதினின்று திரிந்த சொல் (Derivative word). இவை யிரண்டும் செந்தமிழ்ச் சொல். திசைச் சொல் என்பது கொடுந்தமிழ்ச் சொல். அக்காலத்தில் வடசொல்லும் பிற அயற்சொல்லும் தமிழிற் கலக்க வில்லை.

**(2) அறநூல்**

இது பொருள்களை அறம் பொருள் இன்பம் வீடு என நான்காகப் பகுத்து, நல்லொழுக்கத்தைக் கூறும்.

**(3) பொருள் நூல்**

இது எல்லாரும் தத்தம் தொழிலாற் பொருளீட்டு வதற்கு, இன்றியமையாத பாதுகாப்புச் செய்யும் அரசியலைப் பற்றிக் கூறும்.

**(4) இன்ப நூல்**

இது ஆடவர் பெண்டிர் காமவின்பத்தைச் சிறப் பித்துக் கூறும். இன்ப வாழ்க்கையைக் கூறுவது அகப்பொருள் நூல் என்றும் இன்பத் துய்ப்பை மட்டும் கூறுவது காமநூல் அல்லது வேணூல் என்றும், பெயர் பெறும்.

**(5) மறை நூல் (Theology)**

இது பெரும்பாலும் சமயக் குடுமிகளை அல்லது கொண்முடிபுகளைக் கூறும். இது மந்திரம் எனவும் வாய்மொழி எனவும் படும். மன்னும் திரம் (திறம்) மந்திரம். மன்னுதல் = கருதுதல், எண்ணுதல். இது உண்மையாகும் என்று திண்மையாய் எண்ணிச் சொல்வது மந்திரம்.

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே"
(தொல். செய். 78)

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப."** *(தொல். செய். 176)*

*1068—12*

முன்னுதல் கருதுதல். முன்னம் = மனம். முன்—மன்—மனம். இனி, முன்னம்—முனம்—மனம் என்றுமாம்.

மந்திரம் சமயக் கொள்கை பற்றியதும் சாவிப்பு வாழ்த்துப் பற்றியதும் என இரு வகைப்படும்.

சமயக் கொள்கை பற்றியதும், கடவுள் வழுத்து, கொண்முடிபு நூல் என இரு திறப்படும். நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி கடவுள் வழுத்து; திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் கொண்முடிபு (சித்தாந்த) நூல்.

**"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்."**

என்றது (குறள். 28) இத்தகைய நூல்களை நோக்கியே.

சாவிப்பு வாழ்த்து மொழிகளை மந்திரம் என்பது உலக வழக்கு; நூல் வழக்கன்று.

## (16) பட்டாங்கு நூல் (Philosophy)

பட்டாங்கு உண்மை. பட்டாங்கு நூல் மெய்ப் பொருள் நூல். மாந்தன் உடலமைப்புப் பற்றித் தமிழர் கண்ட மெய்ப் பொருள்கள் (தத்துவங்கள்), 96. அவை ஆதன் (ஆன்ம) மெய்ப் பொருள் 24, நாடி 10, நிலை (அவத்தை) 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, திரிபு (விகாரம்) 8, நிலைக்களம் (ஆதாரம்) 6, தாது 7, ஊதை (வாயு) 10, உறை (கோசம்) 5, வாயில் 9, என்பன.

ஆதன் மெய்ப் பொருள் 24 ஆவன:—பூதம் 5, புலன் 5, அறிவுப் புலன் 5, கருமப்புலன் 5, கரணம் 4.

எல்லாப் பொருள்களும் ஐம்பூதமாய் அடங்கும் என்பதும்; ஆண்டவன் (பதி), ஆதன் (பசு), ஆசு (பாசம்) என மூன்றாய் அடங்கும் என்பதும்; உயிர், மெய் (உடம்பு) என இரண்டாய் அடங்கும் என்பதும்; தமிழரின் வேறுபட்ட கொள்கைகளாம்.

ஆதனுக்கு இறைவனோடுள்ள தொடர்புமுறை இருமை (துவைதம்), ஒன்றிய இருமை (விசிஷ்டாத்து

வைதம்) என இருவகையாகவே, பண்டைத் தமிழராற் கொள்ளப்பட்டன. ஒருமை (அத்துவைதம்) தமிழர் கொள்கையன்று.

தமிழிலக்கண முதனூல் முனிவனால் இயற்றப் பெற்றதினால், உயிர், மெய், உயிர்மெய், குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம், புணர்ச்சி, முதலிய எழுத்திலக்கணக் குறியீடுகளும்; பெயர், வினை முதல், எண் வேற்றுமை, வினை, வினைமுற்று, வினையெச்சம், இறந்தகால வினை, நிகழ்கால வினை, எதிர்கால வினை முதலிய சொல்லிலக்கணக் குறியீடுகளும்; மெய்ப்பொருள் நூற்கருத்தும் தழுவுமாறு அமைக்கப் பெற்றுள்ளன. இவற்றின் விளக்கத்தை என் 'செந்தமிழ்ச் சிறப்பு', 'முத்தமிழ்' என்னும் நூல்களிற் காண்க.

### (7) அளவை நூல்

இது பொருள்களின் உண்மையை அறிதற்கு ஏதான (ஏதுவான) அளவைகளை (பிரமாணங்களை) எடுத்துக் கூறுவது. அளவைகள் மொத்தம் பத்து. அவற்றுள் முதன்மையானவை காட்சி கருத்து ஒப்பு உரை என்னும் நான்கு. கருத்தென்பது உய்த்துணர்வு.

### (8) ஏரணம் (Logic)

இது அளவைகளைக் கொண்டு பொருள்களின் உண்மையை அறியும் வகைகளை எடுத்துக் கூறுவது.

வடிவேல் செட்டியார் பதிப்பித்த 'தர்க்க பரிபாஷை' என்னும் நூலிறுதியில், அகத்தியர் பேரால் 20 தருக்க நூற்பாக்கள் உள. அவற்றுள் முதலது.

> **"பொருள்குணம் கருமம் பொதுச்சிறப் பொற்றுமை**
> **இன்மை யுடன்பொருள் ஏழென மொழிப."**

என்பது. இது பொருள்களை ஏழாகப் பகுப்பது. இதையே பிற்காலத்தில் வடவர் வைசேடிகம் என்றனர்.

**"ஏரணம் உருவம் யோகம் இசைகணக் கிரதம் சாலம்"**
**"ஏரணங்காண் என்பர் எண்ணர்"** (தனிப் பாடல்).
(திருக்கோவைச் சிறப்புப்பாயிரம்).

## (9) வான நூல் (Astronomy)

வானத்திலுள்ள நாள் (நட்சத்திரம்), கோள் (கிரகம்), ஓரை (இராசி) முதலியவற்றை விளக்கிக் கூறுவது வான நூல். இருபத்தெழு நாட்களும் எழு கோள்களும் பன்னீரோரைகளும் குமரிக் கண்டத் தமிழர் கண்டிருந்தனர்.

எழு கோள்களின் பெயரால் எழு நாட்கிழமையை முதன் முதல் ஏற்படுத்தியவர் தமிழரே. அது பின்னர் உலக முழுதும் பரவியுள்ளது.

கொள்—கோள். கொள்ளுதல் வளைதல். கொள்—கொட்கு. கொட்குதல்=சுழலுதல், சுற்றி வருதல். கொட்பது கோள். கோள்கள் வானத்திற் சுழன்று சுற்றிவரும் தோற்றத்தால் அப்பெயர் பெற்றன. இராகு கேது என்பன சாயைகளாகவே கொள்ளப்பட்டன. நிறம் பற்றி அவை அணிவகையில் கரும்பாம்பு செம்பாம்பு எனப்பட்டன. இருத்தல் கருத்தல். இர்—இரா—இராகு. சே—சேது=சிவப்பு. சேதாம்பல் செவ்வாம்பல். சேது—கேது. ஒ. நோ: செம்பு—கெம்பு.

| தமிழ் | வடமொழி | ஆங்கிலம் |
|---|---|---|
| ஞாயிறு | ஆதித்தன் | Sun-Sunday |
| திங்கள் | சோமன் | Moon-Monday |
| செவ்வாய் | (மங்களம்) | ——— |
| அறிவன் | புதன் | ——— |
| வியாழன் | பிருகஸ்பதி(குரு) | ——— |
| வெள்ளி | சுக்கிரன் | ——— |
| காரி | (சனி) | ——— |

வடமொழிக்கிழமைப் பெயர்களுள், மங்கள வாரம், சனிவாரம் ஆகிய இரண்டு தவிர மற்றவையெல்லாம் நேர் மொழிபெயர்ப்பாயிருத்தல் காண்க.

ஆங்கிலப் பெயர்களுள், பின் ஐந்தும் பிற்காலத்தில் மாறிவிட்டன. ஆயினும், எழுநாள் என்னும் கால அளவு மாறாதிருத்தல் காண்க.

செவ்வாய் செந்நிறமுள்ளதென்றும், வியாழன் பொன்னிறமுள்ளதென்றும் பெரியதென்றும், வெள்ளி வெண்மையானதென்றும், காரி கரியதென்றும், கண்டறிந்தது வியக்கத் தக்க செய்தியாம்.

வியல் = 1. பெருமை.

"மூழ்த்திறுத்த வியன்றானை" (பதிற். 33, 5).

2. அகலம்

**"வியலென் கிளவி அகலப் பொருட்டே."**

(தொல். சொல். 354).

3. மிகுதி. (சிலப். 3, 7, உரை).

வியல்—வியலன்—வியாழன்.

விள்ளுதல் = விரிதல், மலர்தல். விள்—விய்—வியல்.

பிருகஸ்பதி என்னும் வடசொல் வியாழன் என்பதன் மொழிபெயர்ப்பாயிருப்பதோடு, பெருகு என்னும் தென்சொல்லின் திரிபை நிலைமொழி முதனிலையாகக் கொண்டிருப்பது கவனிக்கத் தக்கது.

**பன்னிரு ஓரைகள்**

| **தமிழ்** | **வடமொழி** | **இலத்தீன்** |
|---|---|---|
| மேழம் | மேஷம் | Aries |
| விடை | ரிஷபம் | Taurus |
| இரட்டை | மிதுனம் | Gemini |
| அலவன் | கர்க்கடகம் | Cancer |
| ஆளி | சிம்மம் | Leo |
| கன்னி | கன்னி | Virgo |
| துலை | துலா | Libra |
| நளி | விருச்சிகம் | Scorpio |

| | | |
|---|---|---|
| சிலை | சாபம் | **Sagitarius** |
| சுறவம் | மகரம் | **(Capricornus)** |
| கும்பம் | கும்பம் | **Aquarius** |
| மீனம் | மீனம் | **Pisces** |

வடமொழியில் எல்லாப் பெயர்களும், இலத்தீனில் பதினொரு பெயர்களும், தமிழ்ச் சொற்களின் நேர் மொழிபெயர்ப்பா யிருத்தல் காண்க.

முழுத்தல் திரளுதல். முழுத்த ஆண் பிள்ளை என்னும் வழக்கை நோக்குக. முழுது மொத்தம். முழு—முழா = திரண்ட முரசு. முழா—முழவு—முழவம். முழா மிழா = திரண்ட மான் (Stag). மிழா—மேழம் = திரண்ட செம்மறியாட்டுக்கடா. மேழம்—மேஷ (வ.). மேழம்—மேழகம்—ஏழகம்—ஏடகம்—ஏடு—யாடு—ஆடு.

விடையும் கன்னியும் முன்னரே கூறப்பட்டன.

துல்லுதல் = பொருந்துதல், ஒத்தல். துல்—துன். துன்னுதல் பொருந்துதல். துல்—துலை = ஒப்பு. இரு புறமும் ஒத்த நிறைகோல். துல்—துலா = துலை போன்ற ஏற்றம். துலா—துலாம்—துலான் = ஒரு நிறை. ஒ. நோ : ஒப்பு = துலை. ஒப்பராவி = துலை செய்வோன். கும்முதல் குவிதல். கும்—கும்பு—கும்பம்—கும்ப (வ.). மின்—மீன்—மீனம்—மீன (வ.).

பழந்தமிழ் நாட்டில் பன்னீ ரோரைப் பெயர்களே பன்னிரு மாதப் பெயர்களாக வழங்கி வந்தன.

மதி—மாதம்—மாஸ (வ.). ஒவ்வொரு பிறை நிலையும் பக்கம் எனப்பட்டது. வளர்பிறை வெண்பக்கம் என்றும், தேய்பிறை கரும்பக்கம் என்றும் சொல்லப் பட்டன.

பகு—பக்கம். பகு—**Bhaj** (வ.). பக்கம்—பக்ஷ (வ.).

இருபத்தேழு நாட்களும், புரவி, அடுப்பு, ஆரல், சகடு, மான்றலை, மூதிரை, கழை, கொடிறு, அரவு, கொடுநுகம், கணை, உத்தரம், கை, அறுவை, விளக்கு, முறம், பனை, துளங்கொளி, குருகு, முற்குளம், கடைக்

குளம், முக்கோல், காக்கை, செக்கு, நாழி, முரசு, தோணி எனப் பெயர் பெற்றிருந்தன. இவற்றிற்குப் பிற பெயர்களுமுண்டு. இவையல்லாத பொது உடுக்கள் வெள்ளியெனப்பட்டன. புகைக்கோள் (Comet) வால்வெள்ளி யெனப்பட்டது.

ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்தது ஒரு நாள் என்றும், ஏழு நாள் கொண்டது ஒரு கிழமையென்றும், ஒரு வளர்பிறையும் ஒரு தேய்பிறையும் சேர்ந்தது ஒரு மாதம் என்றும், கதிரவன் பன்னீரோரைக்குள்ளும் புகுவது பன்னிரு மாதம் என்றும், அதன் ஒரு வடசெலவும் ஒரு தென் செலவும் சேர்ந்து ஓர் ஆண்டென்றும், கணக்கிடப்பட்டிருந்தது. ஒரு நாளை ஆறு சிறு பொழுதாகப் பிரித்தது போன்று, ஓர் ஆண்டை ஆறு பெரும் பொழுதாகப் பிரித்திருந்தனர்.

ஒரு கோநகர்த் தோற்றம் அல்லது ஒரு பேரரசன் பிறப்புப் போன்ற நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு, தொடராண்டு கணித்து வந்ததாகத் தெரிகின்றது.

**"செஞ்ஞா யிற்றுச் செலவும்அஞ் ஞாயிற்றுப்**
**பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்**
**வளிதிரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றிவை**
**சென்றளந் தறிந்தோர் போல என்றும்**
**இனைத்தென் போரும் உளரே"**

என்னும் (புறம். 30) உறையூர் முதுகண்ணன் சாத்தனார் கூற்றும், **"மாகவிசும்பு"** (புறம். 35, அகம். 253, மதுரைக்கா. 454, பரி. 1) என்னும் வழக்கும், "மாக மாவது பூமிக்கும் சுவர்க்கத்துக்கும் நடுவு" என்னும் பரிமேலழகர் உரையும்,

**"இன்னிசை யெழிலியை இரப்பவும் இயைவதோ"**
**"வளிதரும் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ?"**

என்னும் பாலைபாடிய பெருங்கடுங்கோவின் பாட்டடிகளும் (கலித். 15), கவனிக்கத் தக்கன.

மழைக்கும் காற்றிற்கும் கதிரவன் கரணியம் என்பதை முன்னைத் தமிழர் கண்டிருந்தனர். எழிலி முகில். எழிலியைத் தோற்றுவிக்கும் கதிரவனை எழிலி என்றது இலக்கணையென்னும் ஆகுபெயர்ப் போலி.

## (10) கணியம் (Astrology)

ஒருவர் பிறந்த நாளையும் வானத்திலுள்ள நாள் கோள் நிலையையும் அடிப்படையாக வைத்து, அவருக்கு வரும் இன்ப துன்பங்களை முற்படக் கணித்துக் கூறுவது கணியம். வாழ்நாள் முழுவதற்கும் வரையப்படும் கணியமே பிறப்பியம் (ஜாதகம்).

கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இன்னநாள் இறப்பான் என்று, கூடலூர்கிழார் ஒரு விண்வீழ் கொள்ளியைக் கண்டு கணித்தறிந்த செய்தியை 229-ஆம் புறப்பாட்டுக் கூறும். நல்ல நாளும் வேளையும் பார்த்து வினைகளைத் தொடங்குவது, பண்டைநாளிற் பெருவழக்கமா யிருந்தது. நாளேரடித்தல், குடைநாட்கோள், வாள்நாட்கோள் என்பன இதைத் தெரிவிக்கும்.

தொன்று தொட்டுக் கணியத் தொழில் செய்து வரும் தமிழ் வகுப்பான் வள்ளுவன். வள் கூர்மை. வள்ளுவன் கூர்மதியன். ஆரியக் குலப் பிரிவால், அவன் தாழ்த்தப்பட்டுப் பேரிடங்களிற் பெரும்பாலும் பிழைப் பிழந்தான்.

கண்ணுதல் = அகக்கண்ணுற் பார்த்தல், கருதுதல், மதித்தல். கண்ணியம் மதிப்பு. கண்—கணி. கணித்தல் = மதித்தல், கணக்கிடுதல், அளவிடுதல். கணி—கணிதம்—கணிசம் = மதிப்பு (Approximation). கணி—கணிகை = தாளம் கணித்தாடுபவள். கணி—கணிகன், கணியன் = நாள்கோள் நிலைகண்டு வருங்கால நன்மை தீமை கணிப்பவன். கண், கணி, கணிதம், கணிகை என்னும் தென்சொற்கள், வடமொழியில் முதலெழுத் தெடுப்போசையுடன் வழங்குகின்றன. கணிதம் என்பது கணித என்றும், கணிகை என்பது கணிகா என்றும், ஈறு குன்றியும் திரிந்தும் வழங்கும்.

## (11) கணக்கு

கள்ளுதல் = பொருந்துதல், ஒத்தல், கூடுதல், கள்ள = ஒக்க (உவம உருபு), கள்—களம் = கூடுமிடம். கள்—கள—கண. கணத்தல் = பொருந்துதல், கூடுதல், ஒத்தல். கணக்க = போல. குரங்கு கணக்க ஓடுகிறான் என்னும் வழக்கை நோக்குக. கண—கணம் = கூட்டம். கணவன் கூடுகின்றவன். கண—கணக்கு = கூடிய தொகை, அளவு.

கணக்கு என்பது முதலில் கூட்டல் கணக்கை மட்டும் குறித்து, பின்பு நால்வகைக் கணக்கிற்கும் பொதுப் பெயராயிற்று.

பண்டைத் தமிழர் கணக்கில் மிகத் தேர்ந்தவர் என்பது, அவர் கையாண்ட நுண்ணிய அளவைகளால் அறியப்படும்.

### எண்ணலளவை

#### கீழ்வாய்ச் சிற்றிலக்க வாய்பாடு

| | | | | |
|---|---|---|---|---|
| 6½ | தேர்த்துகள் | = | 1 | நுண்மணல் |
| 100 | நுண்மணல் | = | 1 | வெள்ளம் |
| 60 | வெள்ளம் | = | 1 | குரல்வளைப் பிடி |
| 40 | குரல்வளைப் பிடி | = | 1 | கதிர்முனை |
| 20 | கதிர்முனை | = | 1 | சிந்தை |
| 14 | சிந்தை | = | 1 | நாகவிந்தம் |
| 17 | நாகவிந்தம் | = | 1 | விந்தம் |
| 7 | விந்தம் | = | 1 | பாகம் |
| 6 | பாகம் | = | 1 | பந்தம் |
| 5 | பந்தம் | = | 1 | குணம் |
| 9 | குணம் | = | 1 | அணு |
| 7 | அணு | = | 1 | மும்மி |
| 11 | மும்மி | = | 1 | இம்மி |
| 21 | இம்மி | = | 1 | கீழ்முந்திரி |
| 320 | கீழ்முந்திரி | = | 1 | மேல்முந்திரி |
| 320 | மேல்முந்திரி | = | 1 | (ஒன்று என்னும் முழுஎண்) |

1 தேர்த்துகள் = $\frac{1}{2,3238245,3022720,0000000}$

1 கீழ்முந்திரி = $\frac{1}{102400}$

1 மேல்முந்திரி = $\frac{1}{320}$

**கீழ்வாயிலக்கம்**

| பெயர் | அளவு |
|---|---|
| முந்திரி, முந்திரை | $\frac{1}{320}$ |
| அரைக்காணி | $\frac{1}{160}$ |
| காணி | $\frac{1}{80}$ |
| அரைமா | $\frac{1}{40}$ |
| ஒருமா | $\frac{1}{20}$ |
| இருமா | $\frac{1}{10}$ |
| நான்மா | $\frac{1}{5}$ |
| மாகாணி, வீசம் | $\frac{1}{16}$ |
| அரைக்கால் | $\frac{1}{8}$ |
| முண்டாணி, மூன்று வீசம் | $\frac{3}{16}$ |
| கால் | $\frac{1}{4}$ |

| | |
|---|---|
| அரை | $\frac{1}{2}$ |
| முக்கால் | $\frac{3}{4}$ |

மேல் வாயிலக்கத்திற்குப் போன்றே கீழ் வாயிலக்கத்திற்கும் பெருக்கல் வாய்பாடு கூறும் எண் சுவடியுண்டு. அது கணக்காயர் பள்ளியிற் சிறப்பாய்க் கற்பிக்கப்பட்டது.

**நீட்டலளவை வாய்பாடு**

| | | | | |
|---|---|---|---|---|
| 8 | அணு | = | 1 | தேர்த்துகள் |
| 8 | தேர்த்துகள் | = | 1 | பஞ்சிழை |
| 8 | பஞ்சிழை | = | 1 | மயிர் |
| 8 | மயிர் | = | 1 | நுண்மணல் |
| 8 | நுண்மணல் | = | 1 | கடுகு |
| 8 | கடுகு | = | 1 | நெல் |
| 8 | நெல் | = | 1 | பெருவிரல் |
| 12 | பெருவிரல் | = | 1 | சாண் |
| 2 | சாண் | = | 1 | முழம் |
| 4 | முழம் | = | 1 | கோல் அல்லது பாகம் |
| 500 | கோல் | = | 1 | கூப்பீடு |
| 4 | கூப்பீடு | = | 1 | காதம். |

அக்காலத்தில் அரசியலாரால் நிலம் எவ்வளவு நுட்பமாய் அளக்கப்பட்டதென்பது,

"இறையிலி நீங்குநிலம் முக்காலே இரண்டுமாகாணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் அரையே இரண்டுமா முக்காணிக் கீழ் முக்காலே நான்குமா அரைக்காணி முந்திரிகைக் கீழ் நான்குமாவினால் இறைகட்டின காணிக் கடன்" என்பதால் விளங்கும்.

இங்குக் குறிக்கப்பட்ட அளவு $\frac{1}{52000}$ ஆகும்.

## மேல்வாயிலக்கப் பேரெண்கள்

தொல்காப்பியத்தில், இலக்கம் 'நூறாயிரம்' என்னும் தொடர்ச் சொல்லால் குறிக்கப் பட்டாலும், இலக்கம் என்னும் சொல்லின்மையால், ஆயிரத்திற்கு மேற்பட்ட பேரிலக்கப் பெயர்கள் தமிழில் இல்லையெனப் பலர் ஐயுறுகின்றனர். தொல்காப்பியரே,

**"ஐஅம் பல்என வரூஉம் இறுதி**
**அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும்."**

எனப் (393) பல கோடிகளைக் குறிக்கும் பேரெண்களைக் குறித்தலால், இலக்கம், கோடி என்னும் எண்ணுப் பெயர்கள் அவர் காலத்தில் தமிழில் இல்லையென்பது பொருந்தாது.

**"அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்**
**குன்றுவ செய்தல் இலர்."**

என்னும் குறளில் (954), 'கோடி' வந்திருத்தல் காண்க. அடுக்கிய கோடிகளைக் குறிக்கும் பேரெண்களிற் சில வருமாறு :—

கும்பம் = ஆயிரங் கோடி
கணிகம் = பத்தாயிரங் கோடி
தாமரை = கோடா கோடி
சங்கம் = பத்துக் கோடா கோடி
வாரணம் = நூறு கோடா கோடி.
பரதம் = இலக்கம் கோடிக் கோடா கோடி.
(1-இன் பின் 24 சுன்னங் கொண்டது.)

"ஐ அம் பல்என வரூஉம் இறுதி" என்று தொல்காப்பியர் (தொல். 393) குறிப்பாய் ஈறுபற்றிச்சொன்னவற்றை:

**"நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்**
**மையில் கமலமும் வெள்ளமும்"**

என்று (பரிபாடல், 2;13—14) கீரந்தையார் வெளிப்படையாய்க் கூறினர். கமலம் (வ.) தாமரை.

தாமரை, குவளை என்பன ஐயீறு; கணிகம், சங்கம், வெள்ளம் என்பன அம்மீறு; ஆம்பல் பல்லீறு; நெய்தல் அல்லீறு. இதைத் தொல்காப்பியர் குறித்திலர். ஆம்பல் குமுதம் என்றும் குறிக்கப் பெறும்.

கும்பம், தாமரை, சங்கம், வாரணம் என்பன தூய தென் சொற்களே. இவற்றின் விளக்கத்தை என் 'வட மொழி வரலாறு' என்னும் நூலிற் காண்க. சங்கம் சங்கு. தாமரை என்னும் எண்ணைப் பதுமம் என்று மொழிபெயர்த்துக் கூறுவர் வடவர்; முளரி என்று ஒரு பொருள் மறுசொல்லாற் குறிப்பர் கம்பர்.

தாமரை-தாமரச(வ.). சங்கு—சங்கம்—**Sankha**(வ.)

கணக்கு அல்லது கணித நூல் எண்ணூல் எனவும் பெயர் பெறும். ஏரம்பம் என்னும் பண்டைத் தமிழ்க் கணித நூல் இறந்துபட்டது.

சிற்றிலக்கத்திற்கும் பேரிலக்கத்திற்கும் பெருக்கல் வாய்பாடிருந்தது போன்றே, சதுர (**Square**) வாய்பாடும் பண்டைக் காலத்திலிருந்தது. அது குழிக் கணக்கு எனப்பெற்றது. குழித்தல் சதுரித்தல். அது ஓர் எண்ணை அவ்வெண்ணைக்கொண்டே பெருக்குதல். சிற்றிலக்கக் குழிப்பு சிறு குழியென்றும், பேரிலக்கக் குழிப்பு பெருங்குழியென்றும், பெயர் பெற்றன.

குழி—குணி—**gun** (வ.).

ழ—ண. ஒ. நோ: ஆழி—ஆணி = ஆழமாயிறங்குவது. ஆணிவேர் ஆழமாய் இறங்கும் வேர்.

தழல்—தணல்.

குணித்தல் பெருக்குதல், சதுரித்தல்.

குணி + அனம் = குணனம்.

## (12) உடற்குறி நூல் (Physiognomy)

தலை, கழுத்து, மார்பு, கைகால் முதலிய உறுப்புக்களிலுள்ள வரி (இரேகை), மறு, மச்சம், சுழி முதலியவற்றைக்கொண்டும்; அவ்வுறுப்புக்களின் வடிவு, நிறம் முதலியவற்றைக்கொண்டும்; மக்களின் இயல்பு

களையும் அவர்க்கு நேரும் இன்ப துன்பங்களையும் எடுத்துக் கூறுவது உடற்குறி நூலாகும்.

கைவரி நூல் (Palmistry) ஒரு தனி நூலாய் வழங்கி வரினும், அது உடற்குறி நூலின் ஒரு பிரிவே.

இளங்கோவடிகளின் உடற்கூற்றைக் கண்டு அவருக்கு அரசாளும் திருப்பொறி யுண்டென்று குறி காரன் கூறியது, உடற்குறிநூல் தழுவியே.

> "நுந்தை தாள்நிழல் இருந்தோய் நின்னை
> அரைசுவீற் றிருக்கும் திருப்பொறி யுண்டென்று
> உரைசெய் தவன்" (சிலப். 30 : 174-6)

என்று இளங்கோவடிகள் பத்தினித் தெய்வக் கூற் றுய்க் கூறுதல் காண்க.

> "...................................நேமியொடு
> வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை" (முல்லை. 2-3).

என்பது கைவரியையும்,

> "எழுமரங் கடுக்கும் தாள்தோய் தடக்கை" (புறம். 90-10).

என்பது கைவடிவளவையும்,

> "செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்"
> (சிலப். 11 : 184)

என்பது கண்ணிறத்தையும் குறிக்கும் உடற்குறி நூற் சான்றுகளாம்.

### (13) புள் நூல்

வல்லூறு, ஆந்தை, காகம், கரிக்குருவி, காடை முதலிய பறவைகளின் குரலையும் இயக்கத்தையும் கொண்டு, வரப்போகும் நன்மை தீமைகளைக் கணித் துக் கூறுவது புள் நூல்.

புள் பறவை. புள்ளால் அறியப்படும் குறியைப் புள் என்பது ஆகுபெயர்.

வழிச்செல்வார் வாயினின்று தற்செயலாய் வரும் சொல்லைக் குறியாகக் கொள்வது, வாய்ப்புள் எனப்படும்.

உடம்பின் பலவுறுப்புக்கள் துடிப்பதைக் கூறும் துடி நூலும், கட்டு என்னும் நெற்குறியும், கழங்கு என்னும் காய்க் குறியும், ஏதேனும் ஓர் ஏட்டைத் தொடும் தொடுகுறியும், எண்குறியும், பெயர்க் குறியும், நின்ற நிலைக் குறியும் கவடிக்குறியும், கண்ட காட்சிக் குறியும் நேர்ந்த நிகழ்ச்சிக் குறியும், சொன்னசொற் குறியும், கோடிழைத்தற்குறியும், மூச்சுவிடற்குறியும், தேவராளர்குறியும், விரிச்சிக்குறியும், (Oracle) இரண்டிலொன்றன் குறியும், பல்வேறு நிகழ்ச்சிகளான நற்குறி தீக்குறிகளும் பிறவும் புள் நூலின்பாற்படுவனவே.

## (14) கண நூல்

இன்ன யாமத்தில் இன்ன பொருள் அல்லது நிகழ்ச்சி காணின், இவ்வளவு காலத்தில் இன்னது நேரும் என்று கூறும் நூல் கண நூலாம்.

மதுரைத் தமிழ்ச் சங்கம் வெளியிட்ட ஒரு கண நூல் இன்றும் உளது.

## (15) உள நூல் (Psychology)

தனிப்பட்டவரும் தொகுதியாளருமான மக்களின் உளப்பாங்குகளை எடுத்துக் கூறுவது உள நூல்.

இது தொல்காப்பிய மெய்ப்பாட்டியலால் அறியப் படும். எண்சுவைகளையும் அவற்றின் நுண்ணிய வேறுபாடுகளையும், முதன் முதல் எடுத்துக் கூறியது தமிழிலக்கணமே.

## (16) பூத நூல்

நிலம் நீர் தீ வளி வெளி என்னும் ஐம்பூதங்களின் இயல்புகளைக் கூறும் நூல் பூத நூல்.

"கருவளர் வானத் திசையின் தோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
உந்துவளி கிளர்ந்த ஊழூழ் ஊழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்று
உண்முறை வெள்ளம் மூழ்கி யார்தருபு
மீண்டும் பீடுயர் பீண்டி அவற்றிற்கும்
உள்ளீ டாகிய இருநிலத் தூழியும்" *(பரி. 2 : 5-12)*

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து" *(பு. வெ. 35)*

"மலைமாறிய வியன்ஞாலத்து *(மதுரை. 4)*

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்" *(தொல். மர. 90)*

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்." *(குறள். 271)*

இவை ஐம்பூதங்களைப் பற்றிப் பண்டைத் தமிழர்க்கிருந்த அறிவைப் புலப்படுத்தும்.

**(17) நில நூல்**

நிலத்தின் வகைகளையும் நிலப்படை வகைகளையும் மண்ணின் வகைகளையும் எடுத்துக் கூறுவது நில நூல்.

**(18) நீர் நூல்**

கிணறு தோன்றுவதற்கு நீரிருக்கும் இடங்களைத் தெரிவிப்பது நீர் நூல். இது கூவ நூல் எனவும்படும்.

**(19) புதையல் நூல்**

புதையல் இருக்குமிடங்களை அறியச் செய்வது புதையல் நூல்.

**(20) கோழி நூல்**

இது போர்ச் சேவற் கோழிகளின் நிறங்களையும் திறங்களையும் எடுத்துக் கூறுவது.

**(21) பரி நூல்**

இது பல்வகைக் குதிரைகளையும் பற்றிய செய்திகளையெல்லாம் விளக்கிக் கூறுவது.

**(22) யானை நூல்**

இது யானையைப் பற்றிய செய்திகளையெல்லாம் விரிவாகக் கூறுவது.

**(23) வரலாற்று நூல்**

முக்கழக வரலாற்றில் பாண்டியர் தொகை குறிக்கப்பட்டிருப்பதாலும், அன்றாடக நடவடிக்கைகளைப் பட்டோலைப் பெருமான் எழுதிவந்ததாலும், பரணி என்னும் வாகைப் பனுவல்களில் அரச வழிமரபு கூறப்படுவதாலும், வரலாற்று நூல் ஒருவகையில் எழுதப்பட்டு வந்தமை உய்த்துணரப்படும். மூவேந்தர் குடி வரலாற்று நூல்களும் அவர் வரலாற்றுக் கருவி நூல்களும் இறந்துபட்டன.

> "ஏரணம் உருவம் யோகம் இசைகணக் கிரதம் சாலம்
> தாரணம் மறமே சந்தம் தம்பம்நீர் நிலம்உ லோகம்
> மாரணம் பொருள்என் றின்ன மானநூல் யாவும் வாரி
> வாரணம் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரும் மாள."

என்பது, இறந்துபட்ட தமிழ்க்கலை நூல் வகைகளிற் சிலவற்றை எடுத்துக் கூறும் தனிப்பாவினம். பிற்காலச் செய்யுளாதலால், சில கலை நூல்கள் வடசொற் பெயரால் குறிக்கப்பட்டுள்ளன.

**(25) திணை நூல்**

முதல் கரு உரி என்னும் மூவகைப் பொருளையும் பற்றிக் கூறும் திணை நூல், ஒரு வகையில் ஞால நூலை (Geography) ஒக்கும்.

**(26) பொழுது போக்கு**

பண்டைத் தமிழ் மக்கள் ஒழிவு நேரத்தையும் ஓய்வு நாட்களையும் பின்வருமாறு கழித்து வந்தனர்.

சிறுவர் :

கோலியடித்தல், தெல் தெறித்தல், கிளித்தட்டு, சடுகுடு, கில்லித்தாண்டு, பாண்டி (சில்லாக்கு), முதலிய விளையாட்டாடல், காற்றாடி விடுதல், மரமேறுதல், நீருள் மூழ்கி விளையாடல் முதலியன.

இளைஞர் :

சடுகுடு, கிளித்தட்டு முதலிய விளையாட்டாடல், மற்பயிற்சி, இளவட்டக்கல் தூக்கல், கழியலடித்தல், வேட்டையாடல், ஏறுகோள் (சல்லிக்கட்டு) முதலியன.

முதியோர் :

சேவற்போர், கடாப்போர், கதுவாலிப்போர், காடைப்போர், புறாப் போட்டி முதலியன காணல், வேட்டையாடல், தூண்டில் போடுதல், பணயம் வைத்தும் வையாதும் தாயமாடுதல் முதலியன.

சிறுமியர் :

வீடுகட்டி விளையாடல், கும்மியடித்தல், பூப்பறித்தல், கழங்காடல், தெள்ளேணம் கொட்டல், அம்மானையாடல் முதலியன.

பெண்டிர் :

கிளி வளர்த்தல், பூவை (நாகணம்) வளர்த்தல், புறா வளர்த்தல், மான் வளர்த்தல், மாலை தொடுத்தல், தாயமாடுதல், குரவை யாடல் முதலியன.

அரசர் :

குதிரைப் பந்தயம், தேர்ப் பந்தயம், யானைப் போர், சாக்கைக் கூத்து முதலியன காணல்; யாழ்ப் போர், இசைப் போர், ஆடற் போர், செய்யுட் போட்டி, பட்டிமன்றம், பல்கவன அரங்கு, நூலரங்கேற்றம் முதலிய நடப்பித்தல்; வேட்டையாடல், பணயம் வைத்துத் தாயமாடல், உரிமைச் சுற்றத்துடன் இலவந்திகைச் சோலையில் விளையாடல் முதலியன.

**ஊரார் :**

திருவிழாக் கொண்டாடல், நாடகம் நடிப்பித்தல், ஏறுகோள் நடத்துதல், முதலியன. ஏறுகோள் இன்று சல்லிக்கட்டு என்றும் மஞ்சு வெருட்டு என்றும் மாடுபிடி சண்டை என்றும் சொல்லப் பெறும்.

**நகரத்தார் :**

வேந்தன் (இந்திர) விழாக் கொண்டாடல், புதுப்புனலாடல் முதலியன. வேந்தன் விழாவைக் கொண்டாடும்போது பிற தெய்வங்கட்கும் பூசைகள் நடத்தினர்.

# II. பண்டைத் தமிழப் பண்பாடு

## 1. பொது

மேலை நாடுகளெல்லாம் நாகரிகமடைந்திருந்தாலும், அவற்றுள் ஆங்கில நாடே பண்பாட்டிற் சிறந்ததாகச் சொல்லப்படுவதுபோல், நாவலந்தேயத்திலும் தமிழ் நாடே நல்லதாகச் சொல்லப்பட்டது.

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து"

என்று, தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் இயற்றிய பனம்பாரனார் கூறுதல் காண்க.

"வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயருமை என்றிவை யாறும்
குறுகார் அறிவுடையார்."

என்பது ஒரு பழஞ் செய்யுள் (தொல். சொல். 55, சேனா. உரை மேற்கோள்).

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல"

என்பதால் (புறம். 31), தமிழர் அறத்தையே எல்லாப் பேறுகட்கும் அடிப்படையாகக் கொண்டிருந்தனர் என்பது புலனாகும்.

மொழித் துறையில், அவர் நாகரிகம் அடைந்திருந்தது போன்று பண்பாடும் அடைந்திருந்தனர். ஒன்றிற்கு இரண்டிற்குப் போதல் என்றும் கால் கழுவுதல் என்றும இடக்கரடக்கியும், இறந்தவனைத் துஞ்சினான் என்றும் சாவைப் பெரும் பிறிது என்றும் நல்ல பாம்பு கடித்ததைக் கொடித் தட்டல் என்றும் மங்கல வழக்காகவும், கூறிவந்தனர்.

பெரியோரைக் கை நீட்டிச் சுட்டாமலும், அவரை நோக்கிக் கால் நீட்டாமலும், அவர் நிற்க இருந்து கொண்டு பேசாமலும், அவரை நீங்கள் என்று முன்னி லைப் பெயராற்குறியாது தாங்கள் என்றும் அங்குற்றை என்றும் படர்க்கைச் சொல்லாற் குறித்தும், பணி வுடைமை காட்டி வந்தனர். பொதுவாக, இழிந்தோனை நீ என்றும், ஒத்தோனை நீர் என்றும், மூத்தோனை நீங்கள் என்றும், உயர்ந்தோனைத் தாங்கள் என்றும், துறவுமடத் தலைவனை அங்குற்றை என்றும், அரசனை யும் முனிவனையும் அடிகள் என்றும் சொல்லாற் சுட்டுவது தமிழ் மரபாகும்.

தென்புலத்தார் (இறந்த முன்னோர்) நாளன்று இரப்போர்க்கும் ஏழை யெளியவர்க்கும் ஆண்டியர்க் கும் விருந்தளித்தும், இறந்துபோன கூலியின் பொருட் டுச் சுமைதாங்கிக் கல் நட்டும், வேனிற் காலத்தில் வழிப்போக்கர்க்குத் தண்ணீர்ப் பந்தலும் மோர்ப் பந்தலும் வைத்தும், ஆவிற்கு உரிஞ்சுதறி நட்டியும், விலங்குகட்குத் தண்ணீர்த் தொட்டி கட்டியும், பலவாறு அறஞ்செய்து வந்தனர்.

> "அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
> துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும்" (சிலப். 16 : 71-3)

இல்லறத்தாரால் இயன்றவரை கடைப் பிடிக்கப் பட்டன. முதற்கால அந்தணர் தமிழ முனிவர்.

வீடு கட்டும்போது, அயலாரும் ஆண்டியரும் படுத்துறங்கத் தெருத் திண்ணை அமைக்கப் பெற்றது. மாடங்களின் உச்சியில் காட்டுப் புறாக்கள் தங்கற்குப் புரைகள் விடப்பட்டன. சாரங்கள் இட்ட துளைகளும் குருவிகள் கூடுகட்ட விடப்பட்டன. கோயில் மண்ட பங்களின் முகடுகள் வௌவால்கள் தங்குமாறு அரை யிருட்டறைகளாய் அமைக்கப்பட்டன. அவை வௌ வால் நத்தி எனப் பெயர் பெற்றன. அயல் நாட்டா ரும் வழிப் போக்கரும் தங்குவதற்கு ஊரார் ஊர் மடங் கள் கட்டி வைத்தனர்.

> "உடைகோ வணமுண் டுறங்கப் புறந் திண்ணையுண்டு"

"சகமுழுதும், படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்குமுண்டு"

என்று பட்டினத்தடிகள் பாடியிருத்தல் காண்க.

"கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த
கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்
திறையுறை புறவின் செங்காற் சேவல்
இன்றுயில் இரியும் பொன்துஞ்சு வியனகர்"

என்பது (பெரும்பாண். 437—440), மாடப் புறுவைக் குறித்தல் காண்க.

கூரை வீடுகளின் இறப்பிலும் சிட்டுக் குருவிகள் தங்கும். இதனால், "பிறப்பிறப்பிலே." என்று சிட்டுக் குருவிக்கும் சிவபெருமானுக்கும் இரட்டுறலாகச் சொன்னார் காளமேகனார். மக்களை நம்பி அடைக்கலம் புகுவதனாலேயே, வீட்டுக் குருவிக்கு அடைக்கலான் என்று பெயர் வந்தது.

திருவீழிமிழலையில் ஒரு வெளவால் நத்தி மண்டபம் இன்றும் இருக்கின்றது.

பெண்டிர் தம் வீட்டு முற்றத்திற் கோல மிடுவதற்கு அரிசி மாவைப் பயன்படுத்தியது, எறும்பிற்கு உணவாதற் பொருட்டாகும்.

தமிழர் எல்லாரும் பொதுவாக அஃறிணையுயிரிகளிடத்து அன்பு காட்டி வந்தனர். வீட்டில் வளர்ப்பனவும் மிகப்பயன்படுவனவும் கண்ணிற் கினியனவுமான நிலைத்திணை (தாவரம்) ஓடுயிரி பறவை முதலியவற்றைப் பிள்ளைகளைப் போன்றே பேணினர். அதனால் அவற்றின் இளமைக்குப் பிள்ளைப் பெயர் தோன்றியதோடு, அவற்றைப் பிள்ளைப் பேறில்லாதவர்கள் பிள்ளைகளாகவே கருதி வளர்க்கும் வழக்கமும் ஏற்பட்டது. "இருக்கும் பிள்ளை மூன்று, ஓடும் பிள்ளை மூன்று, பறக்கும் பிள்ளை மூன்று." என்பது பழமொழி. தென்னம் பிள்ளை போன்றது இருக்கும் பிள்ளை; கீரிப் பிள்ளை போன்றது ஓடும் பிள்ளை; கிளிப் பிள்ளை போன்றது பறக்கும் பிள்ளை.

மாடு வளர்ப்பவர்கள், சிறப்பாக உழவரும் இடையரும், காளைக்கும் ஆவிற்கும், முறையே, சாத்தன்

சாத்தி, முடக் கொற்றன் முடக்கொற்றி, கொடும்புற மருதன் கொடும்புற மருதி முதலிய மக்கட் பெயர் களையே இட்டு வழங்கினர். அதனால், அவை இரு திணைக்கும் பொதுவான விரவுப் பெயர் வகையாக இலக்கணத்திலும் இடம் பெறலாயின. (தொல் சொல். 20—29).

பொங்கற் பண்டிகையில் மாடுகட்கும் ஒரு நாளை ஒதுக்கி, அவற்றிற்கு அழகிய அணிகளைப் பூட்டிச் சிறந்த உணவூட்டி மாட்டுப் பொங்கல் எனக் கொண் டாடுவது வழக்கம்.

எல்லாரும் வாழ வேண்டுமென்பது தமிழர் பொது நோக்கம்.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி" (மணி. 2 : 70–71)

விழாத் தொடங்குவதும்,

"பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
ஆதிரை யிட்டனள் ஆருயிர் மருந்தென்"

என்னும் மணிமேகலைக் கூற்றும் (16: 134—5),

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அலலால் வேறொன் றறியேன் பராபரமே"

என்னும் தாயுமானவர் பராபரக் கண்ணியும் (221), தமிழரின் பொதுநல நோக்கைத் தெளிவாய்க் காட்டும்.

பிறப்பால் சிறப்பில்லை யென்பதும், மாந்தர் எல்லாரும் ஓரினம் என்பதும் பண்டைத் தமிழர் கொள்கைகளாம். தொழில் பற்றிய வகுப்பே தமிழர் குலப்பிரிவாகும்.

"பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." (குறள். 972)

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா வொருவற்கும்

உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே.'' (புறம். 189)

''நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவம்கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகும் குலம்.'' (நாலடி. 195)

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' (திருமந்திரம், 2104)

''குலமும் ஒன்றே குடியும் ஒன்றே
பிறப்பும் ஒன்றே இறப்பும் ஒன்றே.'' (கபிலர் அகவல்)

தமிழர் கடைப் பிடித்த தலையாய அறங்களுள் இரண்டு, வாய்மையும் நேர்மையுமாகும். ''பொய் சொன்ன வாய்க்குப் புகாக் கிடையாது.'' என்பது பழமொழி. புகா = உணவு.

மாவலி என்னும் மாபெருஞ் சேர வேந்தன், தனக்கு இறுதி நேர்வது தெரிந்த பின்னும் தன்வாய்ச் சொல தப்பவில்லை.

ஊரவைத் தேர்தலில், இளைஞர் முதல் முதியோர் வரை எல்லாரும் கூடியுள்ள மண்டபத்தின் நடுவில் வைக்கப்பட்ட குடத்தை, அங்குள்ள நம்பிமாருள் முதிர்ந்தார் ஒருவர் எடுத்துக் கவிழ்த்து அதனுள் ஒன்றுமில்லையென்று காட்டிக் கீழே வைப்பர். ஒவ்வொரு குடும்பிலும் (Ward) தகுதியுள்ளவர் பெயரையெல்லாம் தனித்தனி வரைந்த ஓலைகளை, குடும்பின் பெயர் பொறித்த வாயோலையுடன் சேர்த்துக்கட்டி, அக்குடத்துள் இடுவர். அதன்பின், முற்கூறிய முதுநம்பியார் அங்கு நடைபெறுவது இன்னதென்றறியாத சிறுவனைக் கொண்டு ஒரு கட்டை எடுப்பித்து, அதை அவிழ்த்து வேறொரு குடத்திலிட்டுக் குலுக்கி, அவற்றுள் ஓர் ஓலையை அச்சிறுவனை எடுக்கச் சொல்லி வாங்கி, அங்குள்ள கணக்கன் கையிற் கெடுப்பர். அவன் தன் ஐந்து விரலையும் அகல விரித்து அதைப் பெற்று, அதிலுள்ள பெயரை அங்குள்ளார் அனைவர்க்கும் கேட்குமாறு உரக்கப் படிப்பான். அதன்பின்,

அங்குள்ள நம்பிமார் எல்லாரும் ஒவ்வொருவராய் அதை அவ்வாறே படிப்பர். அதன் பின்னரே அப் பெயர் ஏட்டிற் பதியப் பெறும். இங்ஙனம் எல்லாக் குடும்பினின்றும் தெரிந்தெடுக்கப் பெற்றவரே ஊரவையுறுப்பினராவர்.

ஊரவைக் கணக்கன் நல்லொழுக்கமும் நல்வழியில் ஈட்டிய பொருளும் உடையவனயிருத்தல் வேண்டும். அவன் அவையார்க்குக் கணக்குக் காட்டும்போது, பழுக்கக் காய்ச்சிய இருப்பு மழுவைக் கையில் ஏந்திக் கொண்டு, தான் காட்டும் கணக்கு உண்மையான தென்று உறுதி கூறவேண்டும் அவன் கை சுடப் படாவிடின், அவன் ஆட்டை நன்னர் (Annual Bonus) ஆகிய ஏழு கழஞ்சிற்குமேல் காற்பங்கு பொன் சேர்த்துக் கொடுக்கப் பெறும்; சுடப்படின், பத்துக் கழஞ்சு பொன் தண்டமும் வேறு தண்டனையும் அவன் அடைவான்.

வழக்கு மன்றங்களில், வழக்காளிகள் தம் கூற்றுக்களைப் பழுக்கக் காய்ச்சிய இரும்பைப் பிடித்தல், நச்சுப் பாம்புக்குடத்திற்குள் கைவிடுதல் முதலிய தெய்வச் சான்று கொண்டு மெய்ப்பிக்கும் வழக்கமும் அக் காலத்தில் இருந்தது.

சீவகசிந்தாமணி நூலாசிரியரான திருத்தக்க தேவர், பழுக்கக் காய்ச்சிய இருப்புக் கம்பியை ஏந்தி, தம் கற்பைப் பற்றிப் பிறர்க்கிருந்த ஐயத்தை அகற்றினர் என்னும் கதையும், இங்குக் கருதத்தக்கது. கற்புடை மகளிர் தம் கற்பை மெய்ப்பிக்க இம்முறையையே பெரும்பாலும் கையாண்டனர்.

பழையனூர் வேளாளர் எழுபதின்மர், அவ்வூர் வணிகனுக்கு உறுதி கூறியதை நிறைவேற்றுமாறு தற்கொலை செய்துகொண்டது, இலக்கியப் புகழ்பெற்ற செய்தியாகும்.

தாளாண்மை, வேளாண்மை, தன்மானம், நன்றி மறவாமை என்பன தமிழரின் பிற பண்பாட்டுக் குணங்களாகும்.

"வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்
மனையுறை மகளிர்க் காடவர் உயிர்" (குறுந். 135)

"வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யாலும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்கும் மடிகோள் இலராய் வாழாதார்
வாழ்க்கை திருந்துத லின்று." (பழமொழி. 151)

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு." (குறள் 110)

## பல்வேறு வகுப்பார் பண்பாடு

### 2. அந்தணர் பண்பாடு :

**(1)** ஐயரது :

மணப்பருவம் வந்தபின் ஆணும் பெண்ணும் தாமாகக் கூடிவாழ்ந்த முதற் காலத்தில், மணக்கவில்லை யென்று பொய் சொல்லியும், மணந்ததாக ஒப்புக் கொண்டவிடத்தும் கைவிட்டும், ஆடவர் பெண்டிர்க் குத் தீங்கு செய்து வந்ததால், அவை பெரும்பாலும் நேராவண்ணம், பலர்க்கு முன் உறுதி கூறி மணமகன் மணமகளை மணக்குமாறு, மக்கள் மீது அன்பும் அருளும் கொண்ட இராமலிங்க அடிகள் போலும் பெரியோர் கரணம் என்னும் திருமணச் சடங்கை ஏற் படுத்தினர்.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப." (தொல். கற். 4)

அறியாமை எல்லாத் தீமைக்கும் வேராகையால் அதை அகற்றும் பொருட்டுப் பல துறைகளில் முதனூலை முனிவர் அருளிச் செய்தனர்.

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூல் ஆகும்" (தொல். மர. 95)

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்

உடம்பினை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே''

என்று திருமூலர் (திருமந்திரம், 724) கூறியபடி, உடம்பாற் பெறக்கூடிய பயனை முற்றும் பெறுமாறு வாழ்நாளை நீட்டிக்கும் மருத்துவக் கலையை, சித்தர் கண்டு இல்லறத்தார்க் குதவி யருளினர்.

இறைவனுக்கு உண்மை அறிவு இன்பம் முதலிய பிற பண்புகளும் வடிவாகுமேனும், அன்பே சிறந்த தாகக் கண்டறிந்து இறைவனையடைய அதுவே வழி யாகக் கூறியவர் நாவலந் தேயத்தில் தமிழ அந்தணரே.

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.''

என்றார் திருமூலர் (திருமந்திரம், 270).

''அன்பெனும் பிடியு ளகப்படு மலையே
அன்பெனுங் குடிபுகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே''

என்னும் இராமலிங்க அடிகள் பாட்டும் அதுவே.

இறைவனிடத்தில் அடியார் சிற்றின்பத்தை வேண்டுவதினும் பேரின்பத்தை வேண்டுவதே தக்க தென்பதை,

''...........யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே.''

என்னும் பரிபாடலடிகள் (5 : 78—81) உணர்த்தும். காரைக்காலம்மையார் வேண்டியதும் அதுவே.

> "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
> றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
> எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
> பரிவதூஉம் சான்றோர் கடன்."

என்பதும் (நாலடி. 58) அந்தணர் பண்பாட்டை யுணர்த்தும்.

> "அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான்."

என்று (குறள். 30) அந்தணர் சிறப்பியல்பாகக் கூறப் படும் அருளுடைமை, மூலன் என்னும் இடையன் காட்டில் இறந்தபின் அவன் மந்தை மாடுகள் கதறி யதைக் கண்டிரங்கி, திருமூலர் அவனுடம்பிற் புகுந்து அவற்றை வீடுகட்குக் கொண்டுபோய்ச் சேர்த்த மையால் அறியப்படும்.

(2) பார்ப்பாரது :

புலவர், ஆசிரியர், பூசாரியர், கணியர், ஓதுவார், கணக்கர் எனப் பல்வேறு பெயர் பெற்றுக் கல்வித் தொழில் புரியும் இல்லற வகுப்பார் பார்ப்பார் ஆவர். நூல்களைப் பார்ப்பவர் பார்ப்பார், அல்லது பார்ப்பனர். பார்ப்பனன் என்னும் சொல் பிராமணன் என்பதன் திரிபன்று. பார்த்தனன், பார்க்கின்றனன், பார்ப்பனன் என்னும் 'அனன்' ஈற்றுச் சொற்கள்; பார்த்தான், பார்க்கின்றான், பார்ப்பான் என்னும் 'ஆன்' ஈற்றுச் சொற்களின மறு வடிவங்களாகவே யிருத்தல் காண்க.

> "யாதும் ஊரே யாவரும் கேளிர்
> தீதும் நன்றும் பிறர்தர வாரா
> நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
> சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
> இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
> இன்னா தென்றலும் இலமே......
> ..............................

நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை யிகழ்தல் அதனினும் இலமே."

இது (புறம் 192), "எந்தவூரும் சொந்தவூர்; எல்லாரும் உறவினர்; ஒருவரின் இன்ப துன்பத்திற்கு அவரே கரணியம் (காரணம்); வாழ்விலும் தாழ்விலும் ஒத்திருக்க வேண்டும்; எல்லாம் ஊழால் நடப்பதால் பெரியோர் சிறியோர் என்னும் வேறுபாடு காட்டக் கூடாது." என்று சில சிறந்த பண்பாட்டுக் கருத்துக் களைக் கணியன் பூங்குன்றனார் தெரிவித்தது. ஊழை வினைப்பயனென்றும் இறைவன் ஏற்பாடென்றும் இயற்கையென்றும், மூவேறு வகையிற் கொள்வர்.

'மண்கெழுதானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கண் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்ன ராயினும் எவ்வயின்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே
மிகப்பே ரெவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே."

இது (புறம். 197), "நாற்பெரும்படைப் பெருநாட்டு வேந்தராயினும் பண்பில்லாரை மதியோம்; சிற்றூர் மன்னராயினும் பண்புடையாரை மதிப்போம்; அறிவிலிகள் செல்வத்தை நினையோம்; அறிவுடையார் வறுமையையே நினைப்போம்." என்று மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

"ஈயென இரத்தல் இழிந்தன் றதன்எதிர்
ஈயேன் என்றல அதனினும் இழிந்தன்று

**கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதன்எதிர்**
**கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று**
**தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்த்திரைப் பெருங்கடல்**
**உண்ணு ராகுப நீர்வேட் டோரே**
**ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்**
**சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்**
**உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்**
**புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை**
**உன்னிச் சென்றோர்ப் பழியலர் அதனால்**
**புலவேன் வாழியர் ஓரி விசும்பின்**
**கருவி வானம் போல**
**வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே."**

இது (புறம் 204), "இரத்தல் இழிவானது; ஈயாமை அதனினும் இழிவானது; கொடுத்தல் உயர்ந்தது; கொடுத்ததை வாங்காமை அதனினும் உயர்ந்தது. தண்ணீர் குடிக்க விரும்பியவர் பெரிய கடலுக்குச் செல்லார்; சிறிய ஊற்றிற்கே செல்வர். நீ ஒரு குறுநில மன்னனாயிருந்தாலும் கொடையாளி என்று வந்தேன். நீ கொடா விட்டாலும் நான் உன்னை வெறுக்க மாட்டேன். அது நான் புறப்பட்டு வந்த வேளையின் குற்றமேயன்றி உன் குற்றமன்று". என்று கழைதின் யானையார் வல்வில் ஓரியிடம் கூறியது.

**"முற்றிய திருவின் மூவ ராயினும்**
**பெட்பின் றீதல் யாம்வேண் டலமே"**

இது (புறம். 205 : 1—2), "நிறைந்த செல்வத்தையுடைய மூவேந்தர் தரினும் எம்மிடம் ஆர்வமின்றித் தருவதை யாம் விரும்பவில்லை" என்று பெருந்தலைச் சாத்தனார் கடிய நெடுவேட்டுவனிடம் கூறியது.

**"குன்றும் மலையும் பலபின் னொழிய**
**வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென**
**நின்ற என்நயந் தருளி ஈது கொண்**
**டீங்கனஞ் செல்க தானென என்னை**
**யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்**
**காணு தீத்த இப்பொருட் கியானோர்**

**வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்**
**தினையனைத் தாயினும் இனிதவர்**
**துணையள வறிந்து நல்கினர் விடினே."**

இது (புறம். 208), பெருஞ்சித்திரனர் அதிகமான் நெடுமானஞ்சியிடம் பரிசிபெறச் சென்றபோது, அவன் அவரைக் காணுமலே பரிசு கொடுத்தனுப்ப, அவர் அதை வாங்காது,

"பல குன்றுகளையும் மலைகளையும் கடந்து பரிசில் பெற வந்த என்மீது அன்பு கொண்டு இப்பொருளைக் கொண்டு இப்படிச் செல்க என்று சொல்வதற்கு, அவன் என்னை எப்படி அறிந்தான்? என்னைக் காணு மற் கொடுத்த இப்பரிசிலைப் பெறுவதற்கு நான் ஒரு வணிகப் பரிசிலன் அல்லேன். தினையளவாயினும் என் தகுதியறிந்து மதித்துக் கொடுத்தால் நான் பெறு வேன்." என்று கூறியது.

**'சான்றோர் புகழு முன்னர் நாணுப"**

என்பது (குறுந். 252), அறிஞர் புகழ்ச்சியை விரும்பா மையைத் தெரிவிக்கும்.

**"புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி**
**கல்லா வொருவன் உரைப்பவுங் கண்ணேடி**
**நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்**
**பல்லாருள் நாணல் பரிந்து."**

என்னும் நாலடிச் செய்யுள் (155), கல்லாத ஒருவன் ஓர் அவையில் பொருளற்றவுரை நிகழ்த்தினலும், அவன் பலர் முன் வெட்கப்படுவதற்கு இரங்கி, வருத் தத்தோடும் அறிஞர் கேட்டுக் கொண்டிருக்கும் பண் பாட்டைத் தெரிவிக்கின்றது.

சோழன் நலங்கிள்ளியிடமிருந்து உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனை, காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றனுக வந்தானென்று கொல்லப்புகும் போது, கோவூர் கிழார்,

**"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி"**

என்னும் பாட்டைப் பாடி (புறம். 47), அப்புலவனைத் தப்புவித்தார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், மலையமானின் இரு குழந்தைகளை யானை மிதித்துக் கொல்லும்படி இடப் புகுந்தபோதும், கோவூர்கிழாரே "நீயே, புறவின் அல்லல் லன்றியும்" என்னும் பாட்டைப் பாடி (புறம். 46), அக்குழந்தைகளைத் தப்புவித்தார்,

அக்காலத்துப் புலவர் அரசரையடுத்து, அரசியல் தவறுகளை எடுத்துக் காட்டி அவற்றைத் திருத்தவும், பொதுநலத் திட்டங்களை வகுத்துக் கொடுத்து அவற்றை நிறைவேற்றவும், அறிவுரை கூறி வந்தனர்.

**"காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே**
**மாநிறை வில்லதும் பன்னாட் காகும்**
**நூறுசெறு வாயினும் தமித்துபபுக் குணினே**
**வாய்புகு வதனினும் காலபெரிது கெடுக்கும்**
**அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே**
**கோடி யாத்து நாடுபெரிது நந்தும்**
**மெல்லியன் கிழவ னாகி வைகலும்**
**வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு**
**பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்**
**யானை புக்க புலம்போலத்**
**தானும் உண்ணான் உலகமும் கெடுமே."**

இது (புறம். 184), பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடைநம்பிக்குக் கூறிய அறிவுரை.

இதன் பொருள் : "விளைந்த நெல்லையறுத்து யானைக்குக் கவளங் கொடுத்தால், ஒரு மாவிற்குக் குறைந்த நிலமும் பல நாளைக்கு வரும். நூறு செய் அளவு நன்செயானாலும் யானை தானே தின்னும்படி விட்டுவிட்டால், அதன் வாய்க்குள் புகுவதை விட அதிகம் அதன் கால்பட்டுச் சேதமாகும். அறிவுடைய அரசன் நல்ல வழியில் வரிதண்டினால், அவன் நாடு கோடி பொருளைத் தொகுத்துக் கொடுத்துத் தானும்

மிகத் தழைக்கும்.அவன் அறிவு கெட்டு நாள்தோறும் தகுதியறியாத வீண் ஆரவாரக் கூட்டத்தோடு கூடி, வலிந்து கவரும் பெரும் பொருள்திரளை விரும்பினால், யானை புகுந்த நன்செய் போலத் தானும் உண்ணான்; நாடும் கெடும்'' என்பது.

சோழன் நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்த காலத்தில் கோட்டை வாயிலை அடைத்துக்கொண்டு உள்ளே சும்மாயிருந்த நெடுங்கிள்ளியை நோக்கிக் கோவூர்கிழார்,

"கரிய பெண்யானைக் கூட்டத்தோடு பெரிய குளத்திற் போய்ப் படியாமலும், நெற் கவளத்தோடு நெய்ம்மிதிக் கவளமும் பெறாமலும், திருந்திய பக்கத்தை யுடைய வலிய கம்பம் கெடச்சாய்த்து நிலத்தின் மேற் புரளும் கையை யுடையனவாய், வெப்பமாக மூச்சு விட்டு வருந்தும் யானை இடியோசை போல முழங்கவும், பாலில்லாத குழவி அழவும், பெண்டிர் பூவில்லாத வெறுந் தலையை முடிக்கவும், நீரில்லாத அழகிய வேலைப்பாடுள்ள நல்ல மனைகளிலுள்ளவர் வருந்திக் கூக்குரலிடுதல் கேட்கவும், நீ இங்கு இனிதாக இருத்தல் தீயதாகும். கிட்டுதற்கரிய வலிமையுள்ள குதிரையையுடைய அரசே! நீ அறத்தை மேற்கொண்டால் இதோ நகர் உனதன்றோ என்று சொல்லித் திறந்து விடு; மறத்தை மேற்கொண்டால் போர் செய்து கொண்டு திறந்து விடு. இவ்விரண்டுமன்றி, உறுதியான நிலையொடு கூடிய கதவினையுடைய மதிலுக்குள் ஒரு பக்கத்தில் ஒடுங்கிக் கிடத்தல், ஆராயுங் காலத்து, வெட்கப்படத்தக்க செய்தியாகும்.'' என்று அஞ்சாது இடித்துரைத்தார். (புறம் 44).

சோழன் நலங்கிள்ளி இன்னொரு சமையம் உறையூரை முற்றுகை செய்திருந்தபோதும், நெடுங்கிள்ளி கோட்டை வாயிலை அடைத்து உள்ளேயிருந்தான். அன்றும் கோவூர்கிழார் தலையிட்டு அவ்விருவர் செயலும் அவர் குடிக்குப் பொருந்தாமையைக் காட்டிப் போரை நிறுத்தினார்.

கோப்பெருஞ் சோழன் தன்னொடு மாறுபட்ட தன் மக்கள் மேற் போருக்குச் சென்றபோது, புல்லாற்றூர்

எயிற்றியனார் அதன் இழிவையும் பயனின்மையையும் எடுத்துக் காட்டித் தடுத்து, அவனை நல்வழிப்படுத்தினார். (புறம். 213).

எழுபெரு வள்ளல்களுள் ஒருவனாகிய வையாவிக் கோப்பெரும் பேகன் தன் தேவியாகிய கண்ணகியைத் தள்ளிவிட்டபின், அவள் பொருட்டுக் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர் நால்வர், கல்லுங் கரையக் கரிந்து பாடியுள்ளார். (புறம். 143—7).

குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் சென்று,

"மல்லல் முதூர் வயவேந்தே
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினும் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்
தகுதி கேள்இனி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரி யோர்ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே
வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்குத வாதே அதனால்
அடுபோர்ச் செழிய இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண்தட் டோரே
தள்ளா தோர்இவண் தள்ளா தோரே."

என்று (புறம். 18), ஓர் உணவுப் பெருக்கத் திட்டத்தை விளக்கிக் காட்டினார்.

இதன் பொருள்: "வளமுள்ள பழமையான ஊரையுடைய வலியவேந்தே! நீ மறுமையிற் செல்லக்கூடிய

உலகத்தில் நுகரும் (அனுபவிக்கும்) செல்வத்தை விரும்பினாலும், உலக அரசரின் தோள் வலிமையைக் கெடுத்து நீ ஒருவனே தலைவனாக விரும்பினாலும், மிகுந்த நல்ல புகழை இவ்வுலகத்தில் நிறுத்த விரும்பினாலும், அதற்குத்தக்க செயலை இப்போது கேட்பாயாக. பெரியோனே! நீரையின்றி யமையாத உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தவர் உயிர் கொடுத்தவராவர். உணவை முதற் கருவியாகவுடையது அவ்வுணவால் உள்ளதாகும் உடம்பு. ஆதலால், உணவென்று சொல்லப்படுவது நிலத்தோடு கூடிய நீர். அந்நீரையும் நிலத்தையும் ஒருவழிச் சேர்த்தவர் இவ்வுலகத்தில் உடம்பையும் உயிரையும் படைத்தவராவர். நெல் முதலியவற்றை விதைத்து மழையை எதிர்பார்க்கும் நீர்வளமற்ற நிலம் இடமகன்ற பரப்புள்ளதாயினும், பொருந்தி யாளும் அரசனது முயற்சிக்குப் பயன்படாது. ஆதலால், கொல்லும் போரைச் செய்யும் பாண்டியனே! இதை இகழாமல் விரைந்து நிலங் குழிந்த விடங்களில் நீர் பெருகத் தேக்கினோர், தாம் செல்லும் உலகத்துச் செல்வம் முதலிய மூன்றையும் இவ்வுலகத்துத் தேக்கினோராவர். அந்நீரைத் தேக்காதோர் அவற்றையும் தேக்காதோரே யாவர்". என்பது.

## 3. அரசர் பண்பாடு

பண்டைத் தமிழரசர் தம்மை ஆளும் தலைவர் எனக்கருதாது, காக்கும் தந்தையர் போன்றே கருதினர். அதனால் காவலர் என்றும் புரவலர் என்றும் பெயர் பெற்றார்.

அரசனாலும் அரசியலதிகாரிகளாலும் பகைவராலும் கள்வர் கொள்ளைக்காரராலும், காட்டு விலங்காலும் நேரக்கூடிய, ஐவகைத் துன்பமாகிய வெயிலினின்றும் குடிகளைக் காத்து, இன்பமாகிய நிழலைத் தருபவன் என்னும் கருத்திலேயே, குடை அரசச் சின்னங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டது.

"ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்கும்நின் விண்பொரு வியன்குடை

**வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய**
**குடிமறைப்பதுவே கூர்வேல் வளவ''**

என்று (புறம். 35), வெள்ளைக்குடி நாகனார் பாடுதல் காண்க. வெண்மதி போன்ற தண்மையையும் குற்ற மற்ற தூய்மையையும் குறிக்க, அரசன் குடை வெண் பட்டினால் செய்யப்பட்டு வெண் கொற்றக் குடை எனப் பட்டது. கொற்றம் வெற்றி. அரசாட்சி நிழல் என்றும், அரசாட்சிக்குட்பட்ட நாடு குடை நிழல் என்றும் பெயர் பெற்றன.

**"உறுதுப் பஞ்சா துடல்சினம் செருக்கிச்**
**சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை**
**அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு**
**ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய**
**என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது**
**கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்**
**குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக."**

என்பது, பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் வஞ்சினம் (புறம். 72).

**"பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர்."**

என்றார் திருவள்ளுவர் (குறள். 1034).

ஆட்சி நேர்மையாயிருக்க வேண்டும் என்பதை உணர்த்த அரசன் கையில் ஒரு செங்கோல் இருந்தது. செங்கோல் நேரான கோல். குடிகளைத் துன்புறுத்திய ஒரு சிலர் செங்கோல் பிடிப்பினும், கொடுங்கோலர் எனப் பழிக்கப்பட்டார்.

அரசன் முறை (நீதி) தவறி ஆண்டால் அவன் நாட்டில் மழை பெய்யாதென்றும், அரசனும் குடிகளும் உயிரும் உடம்பும்போல நெருங்கிய தொடர்புடையவ ரென்றும், இரு கருத்துக்கள் அக்காலத்து மக்கள் உள்ளத்தில் வேரூன்றியிருந்தன.

**"இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட**
**பெயலும் விளையுளும் தொக்கு."** (குறள். 545)

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒலலாது வானம் பெயல்." (ஷை 559)

"கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின் ருகும்." (மணி. 7 : 8-12)

"மழைவளம் கரப்பின் வான்பே ரச்சம்
பிழைஉயிர் எய்தின் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்" (சிலப். 25 : 100-109)

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்" (புறம். 35)

அரசர் குடிகளிடத்து அன்பு கொண்டிருந்ததனல், காட்சிக் கெளியராயும் கடுஞ்சொல்லர் அல்லராயும் இருந்தனர். இது கண்ணகி வழக்காட்டினின்று நன்கு புலனுகின்றது.

செங்கோல் அரசர் தம் ஆட்சியும் உயிரும் இழக்கினும், வாய்ச் சொல் தவறுவதில்லையென்பது, மாவலி என்னும் சேரமாவேந்தன் செய்தியினின்று அறியலாம்.

நடுநிலையாகக் குடிகளின் வழக்குத் தீர்த்து முறை வழங்கும் பொருட்டு, வழக்குக்களின் உண்மை காண்பதற்கு, மாறுகோலம் பூண்டு நகர் முழுதுஞ் சுற்றிப் பொது மக்கள் பேச்சைக் கவனித்தறிவதும், வழக்கிழந்தவர் தம்மிடம் முறையிட அரண்மனை வாயிலில் ஆராய்ச்சிமணி கட்டி வைப்பதும், தெய்வச் சான்று வாயிலாய்த் தம் கூற்றை மெய்ப்பிப்பாரை ஊக்குவிப்பதும், எவ்வகையிலும் துப்புத் துலங்காத வழக்கின் உண்மையை அறிவிக்குமாறு இறைவனை வேண்டுவதும், பண்டைத் தமிழரசர் கையாண்ட வழிகளாகும்.

குற்றங்கட்குத் தண்டனை, இரப்போனென்றும் புரப்போனென்றும் வேறுபாடு காட்டாது நடுநிலையாய் நிறைவேற்றப்பட்டது. கொற்கைப் பாண்டியன் தன் கை குறைத்ததும், மனுமுறை கண்ட சோழன் தன் மகன்மேல் தேரைச் செலுத்திக் கொன்றதும், இதை வலியுறுத்தும்.

நாள்தோறும் காலையில் முரசறைவித்துக் கொடை வழங்கியதுடன், அவ்வப்போது சிறு சோற்று விழாவும் அரசர் நடத்திவந்தனர். ஊன் சோற் றுருண்டை வந்தவர்க்கெல்லாம் வழங்குவது சிறு சோற்று விழாவாகும்.

அரசர் தம் பிறந்தநாட் கொண்டாட்டமாகிய வெள்ளணி விழாவன்று, சிறையாளிகளை விடுதலை செய்வது வழக்கம்.

**"அடித்தளை நீக்கும் வெள்ளணியாம்"** *(சிலப். 27 : 229)*

அரசர் அறிஞரின் அறிவுரைகட்குச் செவிசாய்த்ததோடு, அவர் சொன்ன குறைகளையும் நீக்கிவந்தனர்.

மனுமுறை கண்ட சோழன் தலைநகராகிய திருவாரூரில் கட்டப்பெற்றிருந்த ஆராய்ச்சி மணியை, கன்றையிழந்த ஓர் ஆவும் பயன்படுத்திற்று. அதை அவ்வரசனும் ஓர் உயர்திணைச் செயல் போன்றே ஏற்று, தன் ஒரே மகன்மீது தேரோட்டி முறை செய்தான். இத்தகைய செய்தி வேறெந்நாட்டு வரலாற்றிலுமில்லை. பண்டைத் தமிழ் வேந்தர் மூவரும் இங்ஙனமே தம்மையும் தம் மக்களையும் நடுநிலையாய்த் தண்டனைக்குள்ளாக்கி வந்தனர்.

வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப்பாடி, தம் நிலவரி நிலுவை நீக்கப்பெற்றார்.

கூனர் குறளர் ஊமையர் செவிடர் முதலிய எச்சப் பிறவியர் அரண்மனைகளில் அரசியர் இருக்கும் உவளகங்களில் குற்றேவல் செய்ய அமர்த்தப் பெற்றனர்.

"கூனும் குறளும் ஊமும் கூடிய
குறுந்தொழில் இளைஞர் செறிந்துசூழ்தர
..............................
கோப்பெருந் தேவி சென்றுதன் தீக்கனாத் திறமுரைப்ப"
(சிலப். 20 : 17-21)

பல்வேறு சமயக் குரவர் தத்தம் சமயமே உண்மையென்று மக்களை மயக்கி வந்ததால், அவற்றின் உண்மை காண்பதற்கு அரசர் பட்டி மண்டபம் என்னும் தருக்க மண்டபத்தை அமைத்து, எல்லாச் சமய ஆசிரியரையும் அதில் ஏறித் தத்தம் சமய உண்மையை நாட்ட ஏற்பாடு செய்திருந்தனர்.

"ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்"

என்று, காவிரிப்பூம்பட்டினத்தில் வேந்தன் (இந்திர) விழாவை அரசன் ஏவலாற்பறையறைந்தறிவித்த வள்ளுவன் கூறினமை காண்க. (மணி. 1: 61).

போர்வினையில் முதலிலிருந்து முடிவுவரை பல் வேறு அறங்கள் கடைப்பிடிக்கப்பட்டன. வேற்று நாட்டைக் கொடுங்கோல் அரசர் ஆட்சியினின்று விடுவிக்கச் செய்யும் அறப்போராயினும், மண்ணாசை யாற் பிற நாட்டின் மேற் படையெடுத்துச் சென்று தாக்கும் மறப்போராயினும், வேற்று நாட்டு முல்லை நிலத்திலுள்ளனவும் தீங்கற்றனவும் தீங்கு செய்யத் தகாதனவுமான ஆவின் மந்தைகளை, போரிற்சேத முறாதபடி தப்புவித்தற்கு, போர் தொடங்கும் அரசன் தன் படையை ஏவிக் களவாகக் கவர்ந்துகொண்டு வரச் செய்து காப்பது வழக்கம். இது பொருளிலக்கணத்தில் புறப்பொருட் பகுதியில் வெட்சித்திணை யெனப்படும்.

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்."

என்று தொல்காப்பியம் வெட்சித் திணையிலக்கணம் கூறுதல் காண்க. (புறத். 2). "நோயின் றுய்த்தல்" (ஆக்களைச் சேதமின்றி ஓட்டிக்கொண்டு வரல்) என்னும் வெட்சித் துறையும் இதை வலியுறுத்தும்)

"பாதீடு' என்னும் துறை, படைத்தலைவன் கட்டளைப் படி மறவர் ஆக்களைத் தமக்குட் பகுத்துக் காத்தலைக் குறிக்கும். பாதுகாத்தல் என்னும் சொல் இதினின்றே தோன்றிற்று. பாது பங்கு.

குறித்த இடத்தில் போர் தொடங்குமுன், அக்கம் பக்கத்துள்ள தனிப்பட்ட ஆக்களையும் ஆவைப்போல் அமைந்த இயல்புள்ள அறிஞரையும், பெண்டிரையும் நோயாளிகளையும் பிள்ளை பெருத மகளிரையும், அவ் விடத்தை விட்டகன்று பாதுகாப்பான இடத்திற் சேர்ந்துகொள்ளுமாறு முன்னறிவிப்பது மரபு.

> "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெருஅ தீரும்
> எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்என
> அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்"

என்று புறநானூற்றுச் செய்யுள் (9) கூறுதல் காண்க. பார்ப்பார் என்பது, ஆரியர் வருமுன் தமிழப் பார்ப்பன ரையும், அவர் வந்தபின் பிராமணரையும், குறித்தது.

எளிய படைக்கலமுள்ளவன், கீழே விழுந்தவன், முடிகுலைந்தவன், தோற்றோடுகின்றவன் ஆகியோர் மீது படைக்கலத்தை ஏவாமையும், இரவில் போரை நிறுத்துதலும், பாசறை புகுந்து பகைவரைத் தாக்காமையும், தோற்ற அரசனைக் கொல்லாது திறை செலுத்தச் செய்தலும், இயலுமாயின் அவனொடு மண வுறவு கொள்ளுதலும், பிற போரறங்களாம்.

அக்காலத்திற் படைத் தலைவர் போன்றே அரசரும் போர்க்குச் சென்றனர். இது அவர் பொறுப்புணர்ச்சி யையும மறத்தையும் காட்டும்.

போரில் முதுகிற் புண்பட்டபோதும், வாழ்க்கை யில் தன்மானங்கெட ஏதேனும் நேர்ந்த போதும், அரசர் வடக்கு நோக்கி உண்ணுநோன்பிருந்து உயிர் துறந்தனர். இது வடக்கிருத்தல் எனப்படும். சேரமான் பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற் பெருவளத்தா

ளொடு பொருதுபட்ட புறப்புண் நாணியும், கோப் பெருஞ் சோழன் தன் மக்கள் தன்னொடு பொரவந்த நிகழ்ச்சிபற்றிய அகப்புண்ணாலும் வடக்கிருந்தனர்.

சேரமான் கணைக்கா லிரும்பொறை சோழன் செங்கணானோடு பொருது சிறைப்பட் டிருந்தபோது, தண்ணீர் கேட்டுக் காலந் தாழ்த்துப் பெற்றதினைப் பருகாது இறந்தான்.

அக்காலத்தரசர் சிறந்த புலவராயும் பாவலராயும் இருந்தனர். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பூதப் பாண்டியன், சேரமான் கணைக்கா லிரும்பொறை, பாலைபாடிய பெருங் கடுங்கோ முதலியோர் பாடி யுள்ளவை சிறந்த பாமணிகளாகும். சேரமான் தகடு ரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை, முரசு கட்டிலின் மேல் அறியாது ஏறித்துயின்ற மோசிகீரனார்க்கு, அவர் எழுமளவும் கவரி வீசியதும் பண்பாட்டுச் செயலே.

முத்தமிழ் வேந்தருள்ளும் பாண்டியன் செங்கோற் குச் சிறந்தவன் என்றும், அவன் நாடு தீங்கற்றதென் றும், நாற்றிசையும் பேரும் புகழும் பரவியிருந்தது.

**"மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த**
**தென்புலங் காவலின் ஒரீஇப்பிறர்**
**வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே"**

என்பது பூதப்பாண்டியன் வஞ்சினம் (புறம். 71).

**"தென்னவன் நாட்டுச் சிறப்பும் செய்கையும்**
**கண்மணி குளிர்ப்பக் கண்டேன் ஆதலின்**
**வாழ்த்திவந் திருந்தேன் இதுவென் வரவு"**

என்பது மாங்காட்டு மறையோன் கூற்று.

(சிலப். 11 : 54-56).

**"கடுங்கதிர் வேனில்இக் காரிகை பொறாஅள்**
**படிந்தில சீறடி பரல்வெங் கானத்துக்**
**கோள்வல் உளியமும் கொடும்புற் றகழா**

வான்வரி வேங்கையும் மான்கணம் மறலா
அரவும் சூரும் இரைதேர் முதலையும்
உருமும் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோல் தென்னவர் காக்கும் நாடென
எங்கணும் போகிய இசையோ பெரிதே
பகலொளி தன்னினும் பல்லுயிர் ஓம்பும்
நிலவொளி விளக்கின் நீளிடை மருங்கின்
இரவிடைக் கழிதற் கேதம் இல்"

என்பது கோவலன் கூற்று (சிலப். 13: 3—13).

"பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்கும் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் ஆயுள்என
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே."

என்றது ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனை (சிலப். 20: 74 —78).

## 4. வணிகர் பண்பாடு

அக்காலத்து வாணிகர்,

"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்."

என்னும் (குறள். 120) நெறியைக் கடைப் பிடித்து, நடுநிலை பூண்டு நல்லுள்ளத்தினராய்ப் பிறர் பொருளையும் தமது போற்பேணி, தாம் கொள்ளும் சரக்கையும் தாம் கொடுக்கும் விலைக்கு மிகுதியாகக் கொள்ளாது தாம் கொடுக்கும் சரக்கையும் தாம் கொண்ட விலைக்குக் குறையக் கொடாது, குற்றத்திற் கஞ்சி உண்மையான விலை சொல்லிப் பல்வேறு நாட்டு அரும்பொருள்களைவிற்று, பேராசையின்றி நேர்மையாகப் பெரும்பொருளீட்டிப் பல்வேறு அறஞ்செய்து, வாழ்ந்து வந்தனர்.

'நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்

**வடுவஞ்சி வாய்மொழிந்து**
**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**
**கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறை கொடாது**
**பல்பண்டம் பகர்ந்துவீசும்**
**தொல்கொண்டித் துவன்றிருக்கை.''** (பட்டினப். 206-212)

**''அறநெறி பிழையா தாற்றின் ஒழுகி**
..........................
**சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்''**
(மதுரைக்கா. 500-506)

அறநெறியிற் பொருளீட்டுதலே அக்கால வாணிகர் குறிக்கோள் என்பது, "மூன்றன் பகுதி" என்னும் துறையால் (தொல். அகத். 41) அறியப்படும். மூன்றன் பகுதியாவது, அறத்தாற் பொருளீட்டி அப் பொருளால் இன்பம் நுகர்வேன் எனல்.

கோநகர்க் கடை மறுகில், எப்பொருள் அங்கு விற்கும் என மக்கள் மயங்காதபடி, ஒவ்வொருவகைக் கடைக்கும் ஒவ்வொரு வகையான கொடி கட்டப்பட்டிருந்தது.

**''சாத ரூபம் கிளிச்சிறை ஆடகம்**
**சாம்பூ நதமென ஓங்கிய கொள்கையில்**
**பொலந்தெரி மாக்கள் கலங்களுர் ஒழித்தாங்கு**
**இலங்குகொடி யெடுக்கும் நலங்கிளர் வீதியும்.''**
(சிலப். 14 :)

**''கள்ளின் களிநவில் கொடி''** (மதுரைக்கா. 372)

வெளிநாட்டு வணிகரும் இம் முறையைக் கையாண்டனர்.

**''கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்**
**வேலைவா லுகத்து விரிதிரைப் பரப்பில்**
**கூலமறுகில கொடியெடுத்து நுவலும்**
**மாலைச்சேரி''** (சிலப். 6 : 130-3)

வணிகம் செய்து வண் பொருள் ஈட்டாது கணிகையொடு கூடிக் கைப்பொருள் தொலைத்த கோவலனும்,

பல பேரறங்கள் செய்து வந்தமை பின்வரும் பகுதிகளால் அறியப்படும்.

"மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுதும் என்று
.................................
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய"

(சிலப். 15 : 25-41)

"பின்ளை நகுலம் பெரும்பிறி தாக
.................................
தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானம் செய்தவள் தன்துயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ!" (ஷெ 54-75)

"பட்டோன் தவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென் றெய்தி
என்னுயிர் கொண்டிங் கிவனுயிர் தாஎன
.................................
ஒழிகநின் கருத்தென உயிர்முன் புடைப்ப
அழிதரும் உள்ளத் தவளொடும் போந்தவன்
சுற்றத் தோர்க்கும் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரின் பசிப்பிணி யறுத்துப்
பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்!" (ஷெ 80-90)

"பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை"

என்று, பட்டினப்பாலை (203—4) பொதுப்படக் கூறுவதினின்று, அறவைச் சோறு அளிக்கும ஊட்டுப்புரையமைத்தல், வெளியூரார் தங்கச் சத்திரம் சாவடி போன்ற தாவளங்கள் கட்டுதல், வழிப் போக்கர்க்குச் சோலையொடு கூடிய குளம் வெட்டுதல் முதலிய அறங்கள், அக்காலத்துப் பெருவணிகரால் செய்யப் பட்டிருந்திருக்கும் என உய்த்துணரலாம்.

"கருமமும் உள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமும் தக்கார்க்கே செய்யா—ஒருநிலையே
முட்டின்றி மூன்றும் முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்."

(நாலடி. 250)

## 5. வேளாளர் பண்பாடு

வேளாளர் உழுதுண்பாரும் உழுவித்துண்பாரும் என இருவகையர். முன்னவர் சிறு நிலக்கிழார்; பின்னவர் பெரு நிலக்கிழார்.

வேளாளரின் சிறந்த பண்பு விருந்தோம்பல். அதனாலேயே உழவன் வேளாளன் எனப்பெற்றான். உழவுத் தொழிலும் வேளாண்மை எனப்பெற்றது.

"வேளாளன் என்பான் விருந்திருக்க வுண்ணாதான்"

(திரிகடுகம், 112)

விருந்தென்றது உறவினரும் நண்பருமன்றிப் புதிதாய் வருபவரை.

"உரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
...........................
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப"

என்றது (சிறுபாண்: 190—2) புதியோரையே.

"செட்டி மக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
பார்ப்பார் அகத்தையெட்டிப் பாரோமே எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்."

என்று கம்பர் பாடியதும் இது பற்றியே.

"புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தென"

என்னும் புறப்பாட்டடிகள் (28: 11—13), "கரும்பு தின்னக் கைக்கூலியா?" என்னும் பழமொழியைத்

தோற்றுவித்த காவிரிப்பூம்பட்டினத்து வேளாளன் செயலை நினைவுறுத்தும்.

பிராமணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நால்வகுப்பாருள்ளும், வேளாளனே அமைச்சுத் தொழிற்குச் சிறந்தவன் என்று குலோத்துங்கச் சோழனிடம் ஒளவையார் கூறியதும், வேளாளரின் வேளாண்மை பற்றியே.

**"நூலெனிலோ கோல்சாயும் நுந்தமரேல் வெஞ்சமராம்**
**கோலெனிலோ ஆங்கே குடிசாயும்—நாலாவான்**
**மந்திரியும் ஆவான் வழிக்குத் துணையாவான்**
**அந்த அரசே அரசு."** *(தனிப்பாடல்)*

**"உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்றாது**
**எழுவாரை யெல்லாம் பொறுத்து."**

என்பதும் (குறள். 1032) பண்பாடு குறித்ததே.

**"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்."**

என்னுங் குறள் (85), வேளாளனின் விருந்தோம்பற் சிறப்பைக் குறிப்பாய் உணர்த்தும்.

**6. பிறவகுப்பார் பண்பாடு**

**"உறுவரும் சிறுவரும் ஊழ்மா றுய்க்கும்**
**அறத்துறை யம்பியின் மான"**

என்று நன்னாகனார் கூறுவதால் (புறம். 381), ஓடக் கூலி கொடுக்க இயலாத எளியாரையும் இரப்போரையும், இலவசமாக ஆறுகடத்தும் அறவோடங்களும் அக்காலத்திருந்தமை அறியப்படும்.

# கள்வர் பண்பாடு

பாலை நிலத்தில் வாழ்ந்த கள்வர் மறவர் எயினர் வேட்டுவர் முதலிய வகுப்பினர், ஒருணவும் விளையாத கடுங் கோடைக் காலத்தில் வழிப்பறியையும் கொள்ளையையும் களவையும் மேற்கொள்ள நேர்ந்தது. அங்ஙனம் நேரினும். பண்பாட்டைக் கைவிடவில்லை. தெய்வ வணக்கம், எளியார் பொருளைக்கவராமை, புலவரையும் முனிவரையும் போற்றல், விருந்தோம்பல், அரசப் பற்று, ஈகையாளரைக் காத்தல் முதலிய நற்கொள்கைகளைக் கடைப்பிடித்தனர்.

பட்டினத்தடிகள் துளுவநாட்டுக் கோகரணத்தில் பிள்ளையார் கோயிலில் ஓகத்திலிருந்தபோது, அந்நகர மன்னரான பத்திரகிரியாரின் அரண்மனையில் பல அணிகலங்களைக் கவர்ந்த கள்வர், தாம் முன்பு வணங்கி நேர்ந்துகொண்டவாறே பிள்ளையார் கோயிற்குச் சென்று, ஒரு விலையுயர்ந்த பதக்கத்தைப் பட்டினத்தடிகள் கழுத்திற் பிள்ளையாரென்று கருதி இட்டுச் சென்றனர்.

**"கொடுவில் எயினக் குறும்பிற் சேப்பின்**
**களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன**
**சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி**
**ஞமலி தந்த மனவுச்சூல் உடும்பின்**
**வறைகால் யாத்தது வயின்தொறும் பெறுகுவிர்."**

என்னும் பெரும்பாணாற்றுப் படைப் பகுதி (129—133), எயினரின் விருந்தோம்பற் பண்பை உணர்த்தும்.

கோவலன் விலையேறப் பெற்ற பொற்சிலம் பணிந்திருந்த கண்ணகியோடு காட்டுவழியாய்ச் சென்றதுமன்றி, வழிப்பறித்துக் கொள்ளை கொண்டுண்ணும் வேட்டுவச்சேரியிலும் தங்கினதற்குக் காவலாயிருந்தது, கண்ணகி கற்புமட்டுமன்று, கவுந்தியடிகளின் துறவு நிலையுமாகும். மாடலன் செங்குட்டுவனிடத்தும், பராசரன் பல்யானைச் செல்கெழுகுட்டுவனிடத்தும், ஏராளமாய்ப் பொன்னும் அணிகலமும் பெற்று

வழிப்பறி கொடாமல் ஊர் திரும்பியதற்கும், மறை யோர் (பிராமணர்) முனிவர் போற் கருதப்பட்டதே காரணியமாம்.

புலவரும் பாணரும் கூத்தரும் பொருநரும், அவ் வப்போது வள்ளல்களிடம் பெற்ற பரிசிலைக் காட்டு வழிகளிற் பறி கொடாது வீடுகொண்டு வந்து சேர்த்த தும் கள்வரின் பண்பாட்டுத் தன்மையினாலேயே.

பொய்யா மொழிப் புலவர் தஞ்சைவாணன்மீது கோவை பாடி அரங்கேற்றி, அவன் தேவியாரிடம் நானூறு பொற்றேங்காய் பெற்றுப் பாலைநில வழியாய்ச் சென்றபோது வழிமறித்த முட்டை என்னும் வேட்டு வன், புலவனுயிருந்ததினால் பொய்யா மொழியாரின் புலமையை ஆய்ந்ததும், அவரைப் பொருளொடு விட்டதும்,

**"விழுந்த துளி அந்தரத்தே வேமென்றும் வீழின்**
**எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்**
**பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினன்**
**பொய்யா மொழிப்பகைவர் போல்."**

என்னும் விழுமிய வெண்பாவைப் பாடியதும், கருதி மகிழத்தக்கன. குட்டை, மொட்டை என்பனபோல் முட்டை என்பதும் ஓர் இயற்பெயர்.

பீசப்பூர் என்னும் விசயபுரச் சுலுத்தானின் படை கள் 1659—ஆம் ஆண்டு வல்லத்தின் மேற் சென்ற போது, விசயராகவ நாயக்கரும் அவர் படைஞரும் கோட்டையை விட்டுவிட்டு ஓடிப் போய்விட்டனர். அன்று வல்லத்தைக் கொள்ளையடித்துப் பெரும் பொருள் கவர்ந்த கள்வர், சுலுத்தான் படைகள் திரும் பியபின், தாம் கவர்ந்ததில் ஒரு பகுதியை விசயராகவ நாயக்கருக்கு மீளக் கொடுத்துவிட்டனர்.

இந்நூற்றாண்டிலும் கள்வரும் கொள்ளைக்காரரும் பல இடங்களிற் பண்பாடு காட்டியுள்ளனர். மன்னார் குடியிலிருந்த ஒரு பண்ணையார் (மிராசுதார்) தம் பெருங் குடும்பத்துடன் இராமேசுவரம் போய்ப் பல வண்டிகளில் திரும்பும்போது, வழிப்பறித்த

கொள்ளைக் கூட்டத் தலைவன், அப்பண்ணையாரின் மனைவியார் ஈகையாட்டியரா யிருந்ததினால், அவர் இருந்த வண்டியை மட்டும் தானே காவல்செய்து கவராது விட்டுவிட்டான்.

வறண்ட நிலத்துப் பாலைவாணர் இக்காலத்தும் இங்ஙனம் ஒழுகின், வளமிக்க அக்காலத்தில் ஏனை நில வாணர் எங்ஙனம் இருந்திருப்பர் என்பதை ஒருவாறு உய்த்துணரலாம்.

## 7. பெண்டிர் பண்பாடு

உயர்குடிப் பெண்டிர் கொண்டிருந்த கற்புக் குணங்களுள், நாணமும் பயிர்ப்பும் பண்பாட்டுக் குணங்களாம். கணவன் பெயர் சொல்லாமை, அவன் சொல்லைத் தட்டாமை, அவன் குற்றத்தை மறைத்தல், பின்னுண்டல், பின் தூங்கி முன்னெழுதல், விருந்து மிக வரினும் சலியாமை, கணவனில்லாக் காலத்துத் தன்னை அணி செய்யாமை, அவன் இறப் பின் உடன்கட்டையேறல் அல்லது வேறு வகையில் உயிர் துறத்தல், அவனுக்குப்பின் உயிர் வாழ நேரின் மறு மணம் செய்யாமை ஆகியவை கற்புடை மனைவியர் பண்பாட்டுக் குணங்களாகும்.

மறக்குல மகளிர் மறப்பண்பு, தன்மானம், அரசப் பற்று, நாட்டுப் பற்று முதலிய பண்பாட்டுக் குணங் களை உடையவராயிருந்தனர்.

பொது மகளிரோடு சேர்த்தெண்ணப்படும் நாடகக் கணிகையர்கூட, ஒரு கணவனொடு கூடி வாழ்வதைக் கொள்கையாகக் கொண்டிருந்தனர். அரசர்க்கும் பெருஞ் செல்வர்க்கும் காமக்கிழத்தியராதற்குரியவர் அவரே. மாதவி கோவலனின் காமக்கிழத்தியானமையும், அவன் கொலையுண்டபின் மகளொடு துறவு பூண்டமையும், காண்க.

இங்ஙனம், தமிழர் முதன் முதல் நாகரிகப் பண் பாட்டைக் கண்டும், ஆரியர் வருமுன் எல்லாத் துறை யிலும் தலைசிறந்த நாகரிகமும் பண்பாடும் உடையவ ராயிருந்தும், பிற்காலத்தில் அயலாரை நம்பி அடிமைப் பட்டும் அறியாமைப்பட்டும் வறுமைப்பட்டும் சிறு மைப்பட்டும் போயினர். இதன் விளக்கத்தை என 'தமிழர் வரலாறு' என்னும் நூலுட் காண்க.

# மந்திரம் என்னும் சொல் வரலாறு

தென்சொல்லா வடசொல்லா என்னும் ஐயுறவிற் கிடமான தென்சொற்களுள் மந்திரம் என்பதும் ஒன்ருகும். அது வட மொழியில் வழங்குவதாலும், அது வட சொல்லேயென ஆரியர் வலிப்பதாலும், பொலிவொலி யுற்றிருப்பதனுலும், வாய்மொழி யென்னும் (எள்ளளவும் ஐயுறவிற் கிடந்தராத) வேருெரு தென்சொல் லுண்மையாலும், தலைமைப் பதவி தாங்கும் தமிழ்ப் பேராசிரியரும் தமிழ் வரலாற்றறிவும் மொழியாராய்ச்சி யுமின்மையால் அது வட சொல்லேயென மயங்குகின் றனர்.

வட மொழியிலுள்ளவையெல்லாம் வடசொல் அல்லவென்றும், வட சொற்களுட் குறைந்த பக்கம் ஐந்திலிரு பகுதி தென்சொல் என்றும், முன்னரே கூறப்பட்டது. தமிழில் தனிப்பட்ட பொலிவொலி அல்லது எடுப்பொலியின்றேனும், மெலிவலி யிணைந்து வரின் பொலிவொலியாம் என்னும் உண்மையை, தங்கம், நெஞ்சம், பண்டம், முந்திரி, பம்பரம், குன்றம் என்னும் தூயதென் சொற்களை ஒலித்துக் காண்க.

தமிழ் ஒப்புயர்வற்ற முதுபழந் தொன்மொழி யென்பது மட்டுமன்றி, மாபெருஞ் சொல்வள மொழி யென்பதும், கருத்தில் இருத்துதல் வேண்டும். அதன் சொல் வளத்தை விளக்குதற்கு, தமிழ் தனக்கேயுரிய வீடு என்னும சொல்லோடு, தெலுங்கிற்குரிய இல்(லு) என்னும் சொல்லையும், கன்னடத்திற்குரிய மனையென் னும் சொல்லையும், வட மொழிக்கும் பின்னிய மொழி கட்கும் உரிய குடி என்னும் சொல்லையும், தன்னகத் துக் கொண்டுள்ளதென்று கால்டுவெலார் எடுத்துக் காட்டியதையும், நோக்குதல் வேண்டும். ஈ, தா, கொடு என்னும் ஒரு பொருட் சொற்களுள், ஈ என்னும் சொல் லைத் தெலுங்கு கொண்டுள்ளது போன்றே, தா என்னும் சொல்லை ஆரிய மொழிக ளெல்லாம் கொண் டுள்ளன. இங்ஙனம் தாய்மொழிக்குரிய ஒரு பொருட்

சொற்களுள் ஒவ்வொன்றைக் கிளைமொழிகள் கொண்டு வழங்குவது **கிளைமொழித் தெரிப்பு** (Dialectic Selection) எனப்படும். இது, தாய் வீட்டிலுள்ள ஒரு வகைப் பல்வேறு கலங்களுள் ஒவ்வொன்றை மகளிர் எடுத்துக்கொள்வது போன்றது. ஆகவே, வாய்மொழி என்னும் வேறொரு சொல்லுண்மையால் மந்திரம் என்பது வட சொல்லாகி விடாது.

ஒரு சொல் எம்மொழிக்குரியதென்று காண்டற்கு, வரலாற்றோடு பொருந்திய சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் செய்வதே சிறந்த வழியாம்.

மந்திரம் என்னும் சொல் மன் திரம் எனப் பிரியும். மன்னுதல் கருதுதல். திரம் என்பது திறம் என்பதன் பழைய வடிவம்; திரள் என்னும் சொல்லொடு தொடர்புடையது. றகரம் ரகரத்தினும் பிந்தித் தோன்றியது. அதனாலேயே, அது அதற்கினமான னகரத்துடன் நெடுங்கணக்கி னிறுதியில் வைக்கப்பட்டுள்ளது.

ரகரம் முந்தியதென்பதும் றகரத்திற்கு மூலமென்பதும், முரி—முறி (வளை), பார்—பாறை, ஒளிர்—ஒளிறு முதலிய சொல்லிணைகளால் உணரப்படும்.

மன் என்னும் சொல் முன் என்பதன் திரிபு. முன்னுதல் = கருதுதல். முன்னம் = கருத்து, மனம். முன்னம்—முனம்—மனம். ஆங்கிலத்திற்கு மூலமான ஆங்கில சாகசனியத்திலும் (Anglo - Saxon) mun என்ற உகரவுயிர் வடிவமே உள்ளது. *Munan*, to think, an என்பது நிகழ்கால வினையெச்ச ஈறு.

ஆரிய மொழிக் குடும்பப் பிரிவுகளுள், ஆங்கில சாகசனியத்தை அல்லது கீழ்ச் செருமானியத்தை (Low German) உட்கொண்ட தியூத்தானியம் (Teutonic), கீழையாரியத்தினும் முந்தியதும் வேத மொழியினும் அல்லது சமற்கிருதத்தினும் தமிழுக்கு நெருங்கியதும் ஆகுமென்பது, என் Primary Classical Language of the World* என்னும் ஆங்கில நூலிற் காட்டப்பெற்றுள்ளது. ஆண்டுக் காண்க.

உகர முதற் சொற்கள் அகர முதலனவாக மாறுவது இயல்பே. உகை—அகை (செலுத்து).

எ=டு: குட்டை—கட்டை
குடும்பு—கடும்பு
குடை—கடை
சுரி—சரி (வளையல்)
துணை—தனை
துதை—ததை
துளிர்—தளிர்
நுரை—நரை
புரம்—பரம் (மேல்)
புரி—பரி (வளை)
புல்லி—பல்லி
முடங்கு—மடங்கு
முறி—மறி

இம்முறையிலேயே முன் என்னும் வினையும் மன் எனத் திரிந்துள்ளது. முன் என்னும் மூல வடிவம் தமிழிலும் ஆங்கில சாகசனியத்திலும் இருக்க, அதன் திரிபாகிய மன் என்பதே இருக்கு வேதத்தில் உளது.

மன் = கருதியறியும் உயிரினம், மாந்தன்; மன்பதை = மக்கட் கூட்டம்.

**Man = thinking animal.**

மனம்—மனஸ் (வ.), **L. mens, E. mind.**

மன்—மநு (வ.)—மநுஷ்ய (வ.) = மாந்தன்.

எண்ணும் திண்மை அல்லது கருதுந்திறன் என்று பொருள்படும் மன்திரம் என்னும் கூட்டுச் சொல், மந்திரம் எனத் திரிந்துள்ளது.

ஒ. நோ: மன்—மன்று—மந்து—மந்தை.
(மன்னுதல் = பொருந்துதல், கூடுதல். மன்-மனை)
முன்—முன்று—முந்து
பின்—பின்று—பிந்து

உறுதியான எண்ணம் (பிங்.) என்பதை அடிப்படைக் கருத்தாகக் கொண்டுள்ள மந்திரம் என்னும் சொல், பின்வருமாறு பல பொருள்களை உணர்த்தும்.

1. சூழ்வினை
2. சூழ்வினைக்குழு.

"மன்னவன் றனக்குநாயேன் மந்திரத்துள்ளேன்"
(கம்பரா. உருக்காட். 31)

3. திருமன்ருட்டு.

திருவைந்தெழுத்தும் திருவாய்மொழியும் போன்றவை திருமன்ருட்டாம். வாய்மொழி=வாய்க்கும் மொழி. வாய்த்தல்=உண்மையாதல், நிறைவேறுதல்.

4. சமயக் கொண்முடிபு நூல்.

எ—டு: திருமூலர் திருமந்திரம்.

5. படைப்பு மொழி.

இல்லதை உண்டாக்குவதும் தீயதை நல்லதாக்குவதும் படைப்பு மொழியாம்.

6. கட்டு மொழி.

இயற்கைப் பூதங்களின் இயக்கத்தையும் தீயவுயிரிகளின் தீங்கையும் கட்டுப்படுத்துவது கட்டு மொழியாம்.

7. சாவிப்பு மொழி.

இருதிணைப் பொருள்களையும் அழிப்பது சாவிப்பு மொழியாம்.

மந்திரம்—Skt. **mantra.**

சூழ்வினை செய்யும் அமைச்சன் மந்திரி என்றும், பேய்களைத் துணைக்கொண்டு படைப்பும் கட்டும் சாவிப்பும் செய்பவன் மந்திரக்காரன் என்றும், பெயர் பெறுவர்.

மந்திரி—Skt. **mantrin,** Hind. **mantri,** Port. **mandarim,** Ch. mandarin.

மந்திரத்தால் திருமன்ருட்டுச் செய்தல் மந்திரத்தை உருவேற்றுதல் அல்லது உருப்போடுதல் என்றும், அதனுல் நோய் நீக்குதல் மந்திரித்தல் என்றும், அதனுல் தீங்கு செய்தல் மந்திரம் பண்ணுதல் என்றும், சொல்லப்படும்.

ஆரிய வேத மந்திரங்கள் இயற்றப்படுமுன்னரே, தமிழில் மந்திர நூல்கள் இருந்தன. தொலகாப்பியம் கூறும் எழுவகைச் செய்யுள் நிலைக்களங்களுள் மந்திரமும் ஒன்று.

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயர் எல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்."

(தொல்: 1336)

வாய்மொழியையே தொல்காப்பியர் வேறிடத்தில் மந்திரம் எனக் குறிப்பர்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப."

(தொல். 1434)

சமயக் கொண்முடிபு நூல் ஓத்தெனவும்படும். ஓதுவது ஓத்து. "உயர்ந்தோர்க் குரிய ஓத்தி னான." என்பது தொல்காப்பியம் (977).

தொல்காப்பியம் கி. மு. 6-ஆம் நூற்றாண்டினதேனும், அதிற் சொல்லப்பட்டுள்ள இலக்கணங்கள் ஆரிய வருகைக்கு முந்தியனவாகும்.

சிவநெறியும் திருமால் நெறியும் தமிழர் சமயங்களென்றும், தமிழ் ஆரியத்தின் மூல மொழியென்றும், உண்மையறியப்பட்டபின், மந்திரம் வட சொல்லென ஒருவரும் மயங்கார் என்பது திண்ணம்.

## பின்னிணைப்பு—2

**மண்டலம் (தொடர்ச்சி)—பக். 11.**

மண்—மணி = 1. வட்டமானது, நாழிகைத் தொகையை அடித்துக் காட்டும் வட்டமான வெண் கலத்தட்டு, நாழிகை, இரண்டரை நாழிகை நேரம்.

2. உருண்டையானது, உருண்டையான பாசி அல்லது முத்து, அல்லது ஒளிக்கல் வகை, உருண்டையான விதை அல்லது அரிசி.

எ-டு. சங்குமணி, மணிமாலை, தொண்மணி (நவ ரத்தினம்), கூலமணி, சிறுமணி (அரிசி).

முட்டு—முட்டான் = திருநீறு நீற்றுவதற்குரிய சாணவுருண்டை. முட்டு—முத்து = உருண்டையான மணிவகை அல்லது விதை, முத்துப் போன்ற கொப் புளம்.

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" (தொல். பொதுப் பாயிரம்).

முத்து—முத்தம் = பெருமுத்து.

முத்தம்—முக்த (வ.).

## பாவாணர்
# நூல் வெளியீட்டுக் குழு

திரு. மு. பச்சைமுத்து அவர்கள், ஊராட்சித் தலைவர்,
செட்டிகுளம் (தலைவர்),
,, அர. நாகமுத்து அவர்கள், செட்டிகுளம்
(பொருளாளர்).
,, பெ. சி. இராமு அவர்கள், செட்டிகுளம்.
,, சை. அல்லா பிச்சை அவர்கள், ,,
,, பா. வேணுகோபால் அவர்கள், குரும்பலூர்.
,, கு. காசிநாதன் அவர்கள், உட்கோட்டை.
,, பொது-மது, செங்காட்டுப்பட்டி,
,, நா. செல்வராசன் அவர்கள், செங்காட்டுப்பட்டி.

## கொடையாளர் பெயர்ப் பட்டியல்

கொடைமடமும் கொடாமடமும் கூர்தமிழ் நாட்டில்
கடையெழு வள்ளல்கள் காணும்—கொடையன்றே
ஒருருபா வும்மேல் ஒருநூறும் செந்தமிழ்க்குச்
சீருடன் தந்தார் செயல்.

### ஆளுக்கு நூறு உருபா கொடுத்தவர்

திரு. மு. மதுசூதனன் என்னும் நறுஅவனுர்,
ஓவிய ஆசிரியர், செங்காட்டுப்பட்
திரு. அர. நாகமுத்து நெசவு ஆசிரியர்
(பாவாணர் நூல் வெளியீட்டுக் குழுப்
பொருளாளர்).
**(உட்கோட்டை உடையார்பாளையம் வட்டம்)**

### ஐம்பது உருபா கொடுத்தவர்

திரு. பா. வேணுகோபால் (முதனிலைத் தமிழாசிரியர்)
குரும்பலூர்.

### முப்பத்தைந்து உருபா கொடுத்தவர்

திரு. இராமசாமி ரெட்டியார்,
சிவன்கோயில் அறநிலையத் தலைவர்,
**செட்டிகுளம்.**

## ஆளுக்கு முப்பது உருபா கொடுத்தவர்

திரு. நடராசு ரெட்டியார் அவர்கள் நிலக்கிழார்,
பாளையம் (குரும்பலூர்).
திரு. சி. கிருட்டிணசாமி (தமிழாசிரியர்),
பாளையம் (குரும்பலூர்).

## ஆளுக்கு இருபத்தைந்து உருபா கொடுத்தவர்

திரு. பெ. சி. இராமு அவர்கள்,
பாவாணர் நூல்வெளியீட்டுக் குழு உறுப்பினர்,
செட்டிகுளம்.
திரு. ம. க. பெரியண்ண முதலியார்,
வள்ளலார் குருகுல நடாத்துநர் (நிர்வாகி),
செட்டிகுளம்

## ஆளுக்குப் பத்து உருபா கொடுத்தவர்

### செட்டிகுளம்

கை. துரைசாமி (பலசரக்கு வணிகர்)
பிச்சைமுத்து (தலைமையாசிரியர், ஊராட்சி
ஒன்றியத் துவக்கப்பள்ளி).
சு. செல்லப்ப முதலியார்,
(ஊராட்சி மன்றத் தலைவர்).

### மாவலிங்கை

வே. துரைராசு (அஞ்சலகத் தலைவர்).
சி. சுப்பிரமணிய உடையார்,
(சிவநெறி வழிபாட்டுக் கழகப் பொருளாளர்)

### பெரகம்பி

ரெ. பிரசன்னம், நிலக்கிழார்.
இரா. செல்லப்ப ரெட்டியார், நிலக்கிழார்.

### வாழையூர்

துரைசாமி ரெட்டியார், நிலக்கிழார்
கிருட்டிணசாமி ரெட்டியார் ,,

### சீதேவி மங்கலம்

மு. கந்தசாமி, வேளார், நிலக்கிழார்
மு. ஆ. ஏகாம்பரம் ,,
பி. நல்லு (தி. மு. க. வட்ட உறுப்பினர்).

### நாட்டார் மங்கலம்

கோ. முத்துசாமி (ஆலத்தூர் ஊராட்சி ஒன்றியத்
துணைத் தலைவர்)
பெ. சி. அரங்கசாமி ரெட்டியார் (ஊர்த் தலைவர்).

கே. மு. முத்துசாமிச் செட்டியார்
(ஊராட்சித் துணைத்தலைவர்).

**பொம்மணப்பாடி**

ஊராட்சி ஒன்றியத் துவக்கப்பள்ளி ஆசிரியர்கள்.

**நாரணமங்கலம்**

மு. வெங்கடாசல ரெட்டியார்
(ஊராட்சித் தலைவர்)
க. செல்லத்துரை ஆசிரியர் (ஊ. ஒ, து. பள்ளி, இரூர்).

**குரும்பலூர்**

மு. துரைசாமி (உடற் கல்வி ஆசிரியர், க. உ. பள்ளி).

**தாத்தையங்கார் பேட்டை**

க. சுப்பிரமணியன் (மின் மேற்பார்வையாளர்).
அ. சங்கப்பிள்ளை (மின்துறையினர்,
மேட்டுப்பாளையம்).
து. சிவசுப்பிரமணியன்
(மின்துறையினர்; செருகளத்தூர்).
கு. சாமிநாதன், பாண்டிச்சேரி,
(நடுமைத் தொலைவரி நிலையம்).
ஊ. ஒ. து. பள்ளி (மேற்குப் பெரம்பலூர்)
வெ. சோமசுந்தரம் (வடமலைப் பட்டி
முசிறி வட்டம்).

## ஆளுக்கு ஐந்து உருபா கொடுத்தவர்

**செட்டிகுளம்**

சுந்தரம் (மருத்துவமனை)
க. முத்துச்சாமிப் பிள்ளை
சத்தி முகரி (விலாசு) உணவு விடுதி முதல்வர்.
செ. பெ. சுப்பிரமணியன்
(நக்கீரர் மன்றத் துணைச் செயலர்).
சி செளமியமூர்த்தி. 'உமா' துணிக்கடை உரிமையாளர்
ச. மாரிமுத்து, நக்கீரர் மன்றச் செயலர்.
அ. நடராசு, 'மணி' ஒலி பெருக்கி உரிமையாளர்.
தி. ம நடராசன், அஞ்சலகத் தலைவர்.
சி. சோசப்பு ("சக்குபாய்" பேரியங்கி நடாத்துநர்)
சிங்காரம் (இசைக்குழல் வினைஞர்).

**மாவலிங்கை (மாவிலங்கை)**

செ. துரைசாமி உடையார், நிலக்கிழார்.
இரா. பெரியசாமி உடையார் ,,
சு. நல்லப்ப உடையார் ,,
அ. நடராசுக் கவுண்டர், ஊராட்சி மன்றத் தலைவர்.

ஆ. நயினம்மாள், மாதர் சங்கத் தலைவியர்.
மு. பெரியசாமி உடையார், நிலக்கிழார்.
அ. பாப்புக் கவுண்டர்.

## பெரகம்பி

கோ. கிருட்டிணசாமி ரெட்டியார், நிலக்கிழார்.
ஏ. க. பாப்புரெட்டியார் ,,
ஏ. தெ. சின்னசாமி ,,
நா. பங்காருசாமி ,,
ந. செ. துரை ,,
து. வெ. உலகராசு ,,
க. இராமசாமிப் பிள்ளை (கணக்கப்பிள்ளை).
து. கிருட்டிணசாமி (நிலக்கிழார்).

## வாலையூர்

போ. குமாரசாமி (ஊராட்சிமன்றத் தலைவர்).
செ. தம்புசாமி (ஊரகத் தலைவர்).
கி. சுப்புரெட்டியார் (நிலக்கிழார்).
இரா. நல்லுசாமி ரெட்டியார், நிலக்கிழார்.

## மணியாங்குறிச்சி

மு. இராமசாமி, நிலக்கிழார்.
சு. இரத்தினம் பிள்ளை (கணக்கப் பிள்ளை).
மு. நாராயணசாமி, நிலக்கிழார்.
து. நடராசன் ,,
வெ. துரைசாமி ரெட்டியார்.
வெ. கிருட்டிணசாமி ரெட்டியார்.

## சீதேவி மங்கலம்

அ. நல்லதம்பிக் கவுண்டர்
(ஊராட்சி மன்றத் தலைவர்).
ந. அருணசலம் (தி. மு. க. பொருளாளர்).

## நாட்டார் மங்கலம்

பெ. தட்சிணமூர்த்தி, நிலக்கிழார்.
மு. இராமசாமி மூப்பனர்
(முன்னள் ஊரகத் தலைவர்).
இரா. அரங்கராசன்,
ஊ. ஒ. து. பள்ளி, தலைமையாசிரியர்.

## பொம்மணப்பாடி

செ. மு. இராமசாமி ரெட்டியார், நிலக்கிழார்.
தெ. நமச்சிவாயம்,
(முன்னள் ஊராட்சிமன்றத் தலைவர்).

இரா. இராமலிங்க ரெட்டியார், நிலக்கிழார்.
துரைசாமிக் கவுண்டர்
(சிவநெறி வழிபாட்டுக் கழகத் தலைவர்).

**நாரண மங்கலம்**

வே. சோழமுத்து உடையார்
தே. வனசா, தலைமை ஆசிரியை).

**பாடாலூர்**

ஆ. அருணசலக் கவுண்டர் (துணிக்கடை முதல்வர்).

**குரூர்**

செ. துரைவள்ளி.
வள்ளி துரை (தலைமையாசிரியை).

**கூத்தூர்**

கந்தசாமி (மின்துறையினர்).

**பெரம்பலூர்**

மு. செ. இராமலிங்கம், ஆசிரியர் க. உ. பள்ளி.
த. மாணிக்கம் ,,
பெ அரங்கராசன், (உடற் கல்வி இயக்குநர்.
சி. நாகராசன் (எம். எசி) ஆசிரியர்
ப. ந. இராசேந்திரன் (பி. எஃசி) ,,
இ. மு. நித்தியானந்தம் (எம். ஏ.) ஆசிரியர்
சோ. மீனாட்சிசுந்தரம் ,,
ப. கணபதி (பி.ஏ., பி.டி.) ,,
மு. வேலாயுதம் (தமிழாசிரியர்) ,,
ந. பாலசுப்பிரமணியன் ,,
சு. அழகப்பன் ,,
க. சோமசுந்தரம் ,,
இரா. மருதாம்பாள், ஆசிரியை,
முகமதியத் துவக்கப்பள்ளி.
சு. கங்காதரன் (கூட்டுறவு ஆய்வாளர்).
ஊராட்சி ஒன்றியத் துவக்கப்பள்ளி கிழக்கு.
வி. எம். குப்புசாமி.
தலைமையெழுத்தர், ஊ. ஒ. அலுவலகம்.

**குரும்பலூர்**

சி. சீனிவாசன், தமிழாசிரியர்.
மு. சங்கரன்.
இலிங்க. விசுவநாதன் பி.ஏ., பி.டி.
சு. துரைசாமி, நிலக்கிழார்.
செ. மு. பெருமாள் ரெட்டியார், நிலக்கிழார்.

மு. அரங்கசாமி ,,
வ. கணபதி ரெட்டியார் ,,
வா. பா. இராசகோபால் ரெட்டியார் ,,
மு. சின்னச்சாமி, (சரக்கியங்கி உரிமையாளர்.

### மேட்டுப் பாளையம்

பி. ஏ. இராசு அவர்கள்
மு. பொன்னம்பலம் (பலசரக்கு வணிகர்)
மு. கரிவண்டன்.

### தாத்தையங்கார் பேட்டை

மு. பெ. முத்துக்கருப்பன்.

### பாண்டிச்சேரி

ஆ. நடராசன்
(ஆய்வகத் துணைவர், பொது மருத்துவமனை)
சா. செயசேகரன் ,, ,,
தெ. சிவானந்தம்; நுண்வினைஞர் ,,
கி. செல்வராசு. ,,

### அரியலூர்

கெ. கதிர்வேல் இராசன் (கூட்டுறவாய்வாளர்)
கெ. எசு. செயராமன் (இந்தியாசிரியர்)
வி. கோவிந்தராசன் (தமிழாசிரியர்)
ப. இராமசாமி.

### மற்ற ஊர்கள்

ந. மாதவனார் பி.காம்.,
(இலேக் டெராசு, கல்கத்தா, மேற்குவங்கம்).
க. சாரதா (ஆசிரியை, பொன்பரப்பி).
எசு. எம். சுப்பிரமணியன்
(எசு ஏ. ஓ. அலுவலகம், கரக்பூர், மேற்கு வங்கம்)
டி. எசு. அந்தோணிசாமி முதலியார்
ஓய்வுபெற்ற ஆசிரியர்,
கந்தப்பக் கவுண்டர் பாளையம், ஈரோடு வட்டம்.
இரா. வேங்கடாசலம்,
ஆசிரியர். ஒக்கரை, முசிறிவட்டம்
ச. அ. சௌரியம்மாள் அந்தோணிசாமி
தி. அரங்கராசன் (கரிகாலி, முசிறி வட்டம்)
அரங்க. இராமராசன், நிலக்கிழார்,
செல்லிய பாளையம்)
அ. செ. முத்துச்சாமி, ஆசிரியர் விசயகோபாலபுரம்,
வி. பெரியசாமி, ஆசிரியர் கலிங்கப்பட்டி.

அ. இராமசாமி முதலியார், கடம்பூர்.
இரா. மருதநாயகம், ஆசிரியர், உரும்பியம்.
த. இராமசாமி, ஆசிரியர், அரும்பாவூர்.
து. தங்கத்துரை, ஆசிரியர்
மா. குப்புசாமி, தமிழாசிரியர், வாரியங்காவல்.
சா. துரைராசன், ஆசிரியர், எசனே.
அர. இராமச்சந்திரன் பி.ஏ., பி.டி.
சின்னச்செட்டித் தெரு; உறையூர், திருச்சி.

### இலப்பைக் குடிக்காடு

வெ. ஆறுமுகம், முதனிலைத் தமிழாசிரியர்.
காளிமுத்து பி.எஃசி., பி.டி.
இரா. பெருமாள் படையாச்சி
(தலைமையாசிரியர், கல்பாடி.
கு. வ. கிருட்டிணசாமி (ஆசிரியர்; சொரத்தூர்)

## நாலுருபா கொடுத்தவர்

கு. காசிநாதன், உட்கோட்டை.
மாசிலாமணி, மாவலிங்கை.

## ஆளுக்கு மூன்று உருபா கொடுத்தவர்

இரா. வரதரான் ஆசிரியர், திருச்சி.
சாமி. கங்காதரன் ,,
பி. இராசேந்திரன் ,,
கா. பாலசுப்பிரமணியன் ,,
திருவாட்டி பாண்டியன், ஆசிரியை திருச்சி.
தேசிகர், குறும்பலூர்.
வி. சோமசுந்தரம், ஆசிரியர், வாரியங்காவல்.
மு. இலக்குவன், ஆசிரியர் ,,

## ஆளுக்கு இரண்டு உருபா கொடுத்தவர்

து. வேலுசாமி (மாவலிங்கை).
கா. செல்லமுத்து ,,
தி. நல்லப்பன் ,,
அ. செல்லப்ப ரெட்டியார் ,,
செங்கமலை (கல்பாடி)
ஐ. துரைசாமி ,,
போ. இராசு ,,
எம். எசு. கஞ்சமலை (அரியலூர்).
எம். கிருட்டிணமூர்த்தி ,,
சின்னராசு ,,

பெ. அசோகன் ஆசிரியர், (திருச்சி).
அ. சுப்பிரமணியன் ,,
தெ. தியேடர் ,,
க. நடராசன் ,,
கோ. சஞ்சீவி ,,
கோ. கலியராசன் ,,
இராம. பாலசுப்பிரமணியன் ,,
க. மலையப்பன் (எழுத்தர்; திருச்சி).
கோபாலகிருட்டிணன் (செட்டிகுளம்).
கமால் சாயபு ,,
பால்காரர் (நாட்டார் மங்கலம்)
ப. முத்துக்குமரன் (ஆசிரியர், வாரியங்காவல்).
இரா. முத்துச்சாமி ,,
பி. கன்னையன் ,,
இரா. வைத்தியலிங்கம் ,,
மா. இராமநாதன் (மேட்டுப் பாளையம்).
கா. செல்வம் (செட்டிகுளம்).
பெ. வீரப்பக்கவுண்டர் ,,

## ஆளுக்கு ஓருருபா கொடுத்தவர்

மா. அருணசலம் (மாவலிங்கை).
சு. இராமானுசன் ,,
ஆ. தைலான் ,,
சு. பழனிமுத்து ,,
ந. முத்து ,,
அர. இராசலக்குமி (ஆசிரியை, கல்பாடி).
வா. சுப்பிரமணியன், கல்பாடி.
மு. கிருட்டிணமூர்த்தி
அ. முகமது இசுமாயில் (நெடுவாசல்).
சி. சபாபதி ,,
வ. பொன்னுசாமி ,,
மோ. சே. இராசசேகரர் (அன்னமங்கலம்).
ச. சண்முகம் (அகரம்).
உலகநாதன் (இலப்பைக் குடிக்காடு).
நித்தியானந்தம் ,,
எசு. பெரியசாமி
பெ. பஞ்சாபகேசன் (திருச்சி).
தீனதயாளன் (குரும்பலூர்).
இராமசாமி ,,
இராசகோபால் ,,
கிருட்டிணசாமி ரெட்டியார் (குரும்பலூர்).

துரைசாமி (குரூர்).
வெ. சிதம்பரம் (செட்டிகுளம்).
வி. மார்க்கண்டேயன் ,,
சந்தானலக்குமி (வாரியங்காவல்).
சுரசுவதி (வாரியங்காவல்).
வி. சி. இராமமூர்த்தி (வாரியங்காவல்).
வி. இராசு ,,
பிச்சைக்குப்பன் ,,
சடையப்பன் ,,
சேசுதாசு ,,
வேலாயுதம் ,,
சந்திரகாசன் ,,
ஏ. வேலாயுதம் ,,
எசு. பழனிசாமி ,,
சின்னச்சாமி ,,

குறிப்பு :—

(1) இரட்டபாடியினின்று வந்தவர் இரட்டியார் என்று சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு அவர்கள் தம் பலிஜவாரு புராணத்தில் எழுதியிருப்பதாலும், தமிழ் இலக்கணப்படியும், ரெட்டியார் என்பது இரெட்டியார் என்றிருத்தல் வேண்டும்.

(2) மாவலிங்கை என்பது மாவிலங்கை என்பதன் திரிபு.

(3) முத்துசாமி, துரைசாமி, சின்னசாமி என்னும் பெயர்கள் தமிழிலக்கணப்படி முத்துச்சாமி, துரைச்சாமி, சின்னச்சாமி என்று ஒற்று மிகுதல் வேண்டும்.

(4) குறும்பலூர் = குறுகியபலவூர். குரும்பலூர் = குரும்பை மிகுந்தவூர்.

(5) முதலாளி = *Capitalist*. உரிமையாளர் = *Proprietor*.

(6) உயிரீற்று இயற்பெயர்ப்பின் வலிமுதற் குலப் பட்டப் பெயர்வரின், ஒற்று மிகும்.

எ—டு. இராமசாமிப் பிள்ளை, முத்துச்சாமிச் செட்டியார்.

★

## பிழை திருத்தப்பட்டி

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 15 | 25 | சொற்களேயும் | சொற்களையும் |
| 16 | 17 | மதம | மதம் |
| | ,, | நூல்ககளுட் | நூல்களுட் |
| 27 | 31 | நுன்பொருள் | நுண்பொருள் |
| 30 | 1 | த. நோ. | ஒ. நோ. |
| 34 | இறுதி | வெங்கைகோ | வெங்கைக்கோ. |
| 59 | 14 | அவன | அவன் |
| 61 | 6 | அவிர | அவிர் |
| 69 | ஈற்றயல் | சீர | சீர் |
| 75 | 22 | யாடிய | பாடிய |
| 97 | 9 | தென்ஞ | " தென்ஞ |
| 106 | 16 | bulle. bull E. | bulle, E. bull. |
| 118 | 7 | நெய்தல | நெய்தல் |
| 119 | 23 | ஏற்றிகொண்டு | ஏற்றிக்கொண்டு |
| 120 | 16 | வடமெ ாழி | வடமொழி |
| ,, | 30 | வம் | வம்ப |
| 121 | 2 | தபபிய | தப்பிய |
| ,, | 4 | வைகும | வைகும் |
| 124 | 12 | மழையுாடு | மழையாடு |
| ,, | ஈற்றயல் | புலம | புலம் |
| 127 | 27 | Pat houli | Patchouli |
| 129 | 12 | வணகிகிய | வணக்கிய |
| 135 | 31 | நீர | நீர் |
| 136 | 22 | வேளேயில | வேளேயில் |
| 137 | 18 | மாராயம்...யானும் | "மாராயம்... யானும்" |
| 145 | 8 | கஞ்கலம் | கஞ்சம் |
| 153 | 25 | முதல | முதல் |
| 155 | 31 | (வ). | (வ.). |
| 160 | 16 | மதுரையைக குறித்தது | மதுரையைக் குறித்தது. |
| 166 | 3 | செய்யுள்கட்டு | செய்யுள்கட்கு |
| 172 | 19 | (வ.)., | (வ.). |
| ,, | ,, | (வ). | (வ.). |
| ,, | 20 | (வ). | (வ.). |
| 199 | 20 | அலலால் | அல்லால் |
| 219 | 24 | (சிலப். 14 :) | (சிலப். 14 : 201-4) |

குறிப்பு : 89-ஆம் பக்கத்தில் 7-ஆம் வரியிலுள்ள **பாளி** என்னும் சொல்லைப் **பாலி** என்றும், 104-ஆம் பக்கத்தில் 19-ஆம் வரியிலுள்ள **இறக்க வரிசை** என்னும் சொல்லை **இறங்கு வரிசை** என்றும், சொல்லலாம்.